சுவாமி நாராயணானந்தாவின்

# கடவுளும் மனிதனும்

# (God and Man)



This Book is Published with the
Financial Assistance of
Tirumala - Tirupati Devasthanam
Under Their Scheme
'Aid to Publish Religious Books.'

தமிழாக்கம் — பிரசுரம்
சுவாமி நித்தியானந்தா
என். யூ. சரணாலயம்
வேடன்தாங்கல் (வழி)
அ. எண். : 603 314

# சமர்ப்பணம்

அனைத்து
ஆன்மீக
சாதகர்களுக்கும்

# பொருளடக்கம்

# முகவுரை

மானுடம் !

இப்பூவுலகில் எத்தனையோ ஜீவராசிகள் உலா வருகின்றன. இவற்றில் மிகப்பெரிய அரிய ஜன்மம் மானுட ஜன்மமே! மற்றெல்லா சீவன்களுக்கும் ஐந்தறிவே உண்டு. மனிதன் ஆறறிவுள்ளவன். இயற்கையை வெற்றி கொள்ளும் வல்லமை மானுடத்துக்கே உண்டு. மானுடம் படைத்த – படைத்துவரும் அற்புதங்கள் கோடி கோடி!

வானொலி முதல் ராக்கெட் வரை எத்தனையோ விஞ்ஞான அற்புதங்கள் இன்று இயங்குகின்றன; எல்லாவற்றையும் வெற்றி கொண்டு விட்டோம் என்று கூற முடியுமா? மானுட சக்திக்கு அப்பாற் பட்ட ஆற்றலின் அற்புத சக்திகள் இப்பரந்த உலகி லும் பரவெளியிலும் இயங்கிக் கொண்டிருக்கின்றன! அவற்றைப் பூரணமாக வெற்றி கொள்ளவும் சிலரால் முடியும்!

ஆம்! மனிதனால் முடியும்! அது எது? அதற் கான வழி எது? எல்லாவற்றையும் இந்தத் தொகுப் பில் காணலாம்.

பரம அம்சர் சுவாமி நாராயணானந்தா இதற்கான படிகளை இவற்றில் எளிமையாக விளக்கியுள்ளார். ஆன்மிக சாதகர்களுக்கு மட்டுமன்று, மற்றையோரும் படித்துப் பயன் பெறலாம். வாழ்க்கை இன்ப மயமாக இருக்க வேண்டுமென்று விரும்பாதவர் யார்? ஒரு சில நெறிமுறைகளைக் கடைப்பிடித்தாலே ஒவ்வொருவரும் தம்முடைய துறையில் மேலும் மேலும் முன்னேற முடியும் - பிரகாசிக்க இயலும்!

'முடியாதது என்பதே இல்லை!'

'முடியும்' என்பதே உமது நம்பிக்கையாக இருக்கட்டும்! 'இதற்கென அதீத முயற்சி தேவை இல்லை.' 'ஒருசில இயம-நியமங்களே போதும்,' என்கிறார் சுவாமிகள். வாசகர்களின் வசதிக்காக ஆறு சிறு புத்தகங்களை ஒரே தொகுப்பாகத் தந்திருக்கிறோம்.

பலருடைய ஒத்துழைப்பால் இந்நூல் உருவாகியுள்ளது. அவர்களுக்கெல்லாம் எமது உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். எல்லோருக்கும் இறையருள் துணை கூட்டுமாக!

— சுவாமி நித்தியானந்தா.

# அகண்டைக மதத்தின் அடிப்படைத் தத்துவம்

## (The Basis of Universal religion)

BY : SWAMY NARAYANANANDA



From :

The Complete Works of Swamy Narayanananda.

Vol. 13



*1929-ம ஆண்டு செப்டம்பர் 5-ந் தேதி மைசூரில் துறவு நிலை ஏற்ற மறுநாள் சுவாமி நாராயணானந்தா.*



1964-ல் ரிஷிகேஷ் ஆசிரம மாடியில் சுவாமி நாராயணானந்தா. பின்புறம் கங்கை ஆறு ஓடுவதைக் காணலாம்.



*1976 ஜுலை 11-ம் தேதி டென்மார்க், ஜில்லிங்கில் நடைபெற்ற குரு பூர்ணிமை விழாவின்போது குரு குடீரில் சீடர்களுடன்.*

# அகண்டைக மதத்தின் அடிப்படைத் தத்துவம்

எல்லையற்ற ஒன்றுக்கு அடியும் இல்லை. முடியும் இல்லை, நடுவும் இல்லை. ஒருபொருளுக்கு 'அடி' என்று' ஒன்று இருந்து விட்டால் அதற்கு ஒரு 'நடுப்' பகுதியும்: அது முடியும் இடத்தில் ஒரு ஒரு முடிபாகமும் இருந்தேயாக வேண்டும். அது போன்ற பொருள் எல்லையுள்ளதாகி முடிவு பெற்ற தாகி விடுகிறது.

எல்லையற்ற ஒன்று என்றால் அது எங்கும் வியாபித்திருப்பது, தன்னில் தானே உயிர்சார உணர்வாகப் பரவி நிற்பது. அது தன்னுள்ளேயே பரவி நிற்கும் உயிர்சார உணர்வெனும் மகாசமுத் திரம்.

'எல்லையற்ற ஒன்று'— ஒன்றே ஒன்றாகத் தான் இருக்க முடியும். அது இரண்டாக இருக்கு மானால் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுக்கும். அப்போது இரண்டுக்குமே எல்லை ஏற்பட்டு விடுகிறது.

'எல்லையற்ற ஒன்று' தான் 'முடிவுள்ள பேருண்மை.' ஆனால் அதற்குப் பல்வேறு பெயர்கள்

—அதாவது பிரம்மம், பூரணன், கடவுள், பேராற்றல் மகாசக்தி என்றெல்லாம் உள்ளன. பெயர்கள் வித்தியாசப் பட்டாலும் 'எல்லையற்ற ஒன்று' என்பது மட்டும் ஒன்றே ஒன்றுதான்.

'எல்லையற்ற ஒன்று' என்பதில் ஒரு அணு அளவுகூட அதிகமாவதோ, குறைந்து போவதோ இருக்காது. 'மாறுதல்' என்ற கருத்துக்கே இதில் இடமில்லை. அப்படியானால் மாறுதல் பெறும் பொருளுக்கு ஒரு எல்லையும் முடிவும் உண்டாகி விடுகிறது.

'படைத்தல்' என்ற சொல்லே தவறானது. ஏனெனில் அந்தச் சொல் படைப்பதற்கென்று தனி யாக ஒரு படைப்பாளி உண்டு என்னும் கருத்தை ஏற்படுத்தி விடுகிறது. மேலும் படைக்கப்படும் உயிர் அல்லது பொருள் என்ற மேற்கண்ட யூகத்துக்கும் வழி வகுத்து விடுகிறது. இந்த இரண்டுமே வாதத் திற்கு பொருத்தமானதல்ல! அபத்தமானது.

ஒரே ஒரு எல்லையற்ற ஒன்று இருக்கும் போது அது எங்கும் நிறைந்துள்ளதாகி, முழுமை பெற்றதாகி, சர்வ வியாபியாக ஆகி விடுகிறது. அதற்குப் பிறகு படைக்கப்பட்ட பொருளென்று ஒன்றோ, படைக்கப் பட்ட உயிர் என்ற ஒன்றோ இருக்க முடியாது. மேலும் ''படைத்தல்'' என்ற கருத்துதான் சரியென்று சொன்னால் ஏதுமில்லாத ஒன்றிலிருந்து ஏதாவது ஒன்றைப் படைத்து விட

முடியும் என்ற விளக்கமல்லவா ஏற்பட்டு விடு கின்றது? இது வாதத்திற்கே பொருந்தாத ஒன்று.

'எல்லையற்ற ஒன்றை' அணு அளவுகூட அதிகப்படுத்தவோ அல்லது குறைக்கவோ முடியாது என்று இதற்கு முன்னரே கூறியுள்ளோம். இதைச் செய்து விட முடியும் என்றால் அப்போது 'எல்லை யற்ற ஒன்று'க்கு ஒரு எல்லையும் ஒரு முடிவும் ஏற்பட்டு விடுகின்றது. அதன் மூலம் 'படைத்தல்' என்ற சொல், முடிவே இல்லாத எல்லையற்ற ஒன்றுக்கு ஒரு எல்லையை வகுத்துத் தருகின்றது. ''படைத்தல்'' என்றதும் அதற்கென்று தனியாக படைப்பாளி வேண்டும். இந்த இரண்டுக்கும் இடையே வரையறுத்துக் காட்ட எல்லை வந்து விடு கிறது. பின்னர் 'எல்லையற்ற ஒன்று' எல்லை பெற்றதாகி ஒரு முடிவு உடையதாகவும் ஆகிவிடு கிறது.

உதாரணத்திற்குச் சூரியனை எடுத்துக் கொள் வோம். சூரியனும் அதன் ஒளியும் ஒன்றைப் பற்றி ஒன்று இருப்பவை. அவைகளை ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாது. அதே போலத்தான் கடவுளும் அண்டவெளியும் ஒன்றுடன் ஒன்று பற்றி இருப்பவை.

அண்டவெளி இல்லாமற் போன காலமே இல்லை. அண்டவெளி முழுவதுமே மறைந்துவிடும் என்ற காலமும் இருக்கப் போவதில்லை. அது போன்றதொரு நிலைமை ஏற்படக் கூடுமானால்

''எல்லையற்ற ஒன்று'' தனக்குள்ள தனிச் சிறப்பை இழந்து 'எல்லையுடையது' 'முடிவுடையது' என்றல்லவா ஆகிவிடும்.

அண்டவெளி ஒரு குறிப்பிட்ட காலத்தில், 'தோன்றிப்' பிறகு 'பிரளயத்தில் மறைந்து விடுகிறது' என்று சொல்வோமாயின் இந்த இரு நிலைகளுமே எல்லையற்ற ஒன்று'க்கு 'கால வரையறை' அல்லது எல்லையைத்தானே வகுக்கின்றன.

'எல்லையற்ற ஒன்றில்' விளையும் தெய்வீக விளையாட்டே படைப்பும் பிரளயமும்.

கடலின் நீர்ப்பரப்பை உற்றுப் பார்ப்போமாயின் எண்ணற்ற நீர்க்குமிழிகளும் அலைகளும் அதில் விளையாடிக் கொண்டே இருக்கும். அவைகளில் சில முன்பே இருப்பவை. சில அந்தச் சமயத்திற்குக் கிளம்பி எழுபவை, வேறு சில கடல் நீரில் கரைந்து கொண்டிருப்பவை. அதே போல எண்ணற்ற வான் மண்டலங்கள் நட்சத்திரக் கூட்டங்களோடு சேர்ந்து தோன்றிக் கொண்டேயிருக்கும். அதில் சில தொடர்ந்து இருந்து கொண்டிருக்கின்றன. அதே நேரத்தில் வேறுசில, எல்லையற்ற ஒன்றான அந்த பரவெளியிலேயே சுக்கு நூறாகிச் சிதறிப் போகின்றன.

எல்லையற்ற பரவெளியில் எண்ணற்ற வான மண்டலங்கள் தோன்றுவது நிலைத்திருப்பது, அழிவது போன்ற நிலைகள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. இந்த மூன்று செய்கை

கொண்ட விளையாட்டிற்கு வரம்பே இல்லாத
பளியில் பயன்படுத்தப்படும் மொத்த ஆற்றல்
பின் கூட்டுத் தொகை எப்போதும் ஒரே
புடன் மாறாமல் இருக்கிறது.

ங்கும் வியாபித்து நிற்கும் சூக்கும நிலையி
ா நீராவி குளிர்ச்சி பெற்றவுடன் தூலநிலைக்கு
றது. அந்தத் தூல நிலையில் அது மேகமா
, நீராகவும், பனிக்கட்டி போன்ற உருமாற்றங்
அடைகிறது. அதே போலத்தான் கடவுள்
கூட ஆவி அல்லது உயிராகவும், மனம், ஜடப்
நள், அகிலத்தின் தோற்றம் போன்ற அமைப்பு
ப் பெறுகின்றது.

நீராவி பனிக்கட்டியாகிறது. அந்தப் பனிக்கட்டி
ிக் கரைந்து நீராவியாகவே மீண்டும் ஆகி விடு
ல்லவா? அதே போல அகிலத்தின் படைப்பும்,
யமும் பரவெளியில் நடந்து கொண்டேயிருக்
ன. அவ்வாறு மாற்றங்கள் நடந்தாலும்
பளியில் நிலவும் ஆற்றல் சக்தியின் அளவில்
வு நிறைவின்றி யாதொரு நஷ்டமும் ஏற்படா
ஒரே அளவில் இருந்து கொண்டிருக்கிறது.
பளியில் எல்லையற்ற பரம்பொருளினால்
டவைக்கப்படும் ‘படைப்பு’ ‘பிரளயம்’ போன்ற
ாயாட்டிற்கான ஆற்றல் சக்தியின் அளவுகளின்
டுத் தொகை எப்போதும் ஒரே அளவில்
்கும்.

ஒரே ஒரு ஒளிக்கதிர் சூரியனுக்கு எப்படியோ ஒரு தனி உயிருக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பும் அதுவே. சூரியனைத் தவிர்த்து அந்த ஒரே ஒரு ஒளிக்கதிர் தனித்து நிற்க முடியாது. அதே போலத் தான் ஒருதனி உயிரோ அல்லது ஒரு பொருளோ கடவுள் அல்லது எல்லையற்ற பரம்பொருள் இன்றித் தனித்து வாழ இயலாது.

அப்படி ஒரு வேளை ஒரு தனி உயிர் அல்லது பொருள் ஒரு புறம் தனித்து வாழ்வதும் கடவுள் அல்லது எல்லையற்ற பரம்பொருள் வேறொரு புறம் தனியாக இருந்து கொண்டிருக்கும் நிலையும் இருக்கக் கூடுமானால், அதற்கப்புறம் கடவுள் அல்லது பரம்பொருளுக்கு எல்லையும், முடிவும் உடைய தன்மை வந்து விடுகிறது. ஆதலின் உண்மையாக இருப்பது என்னமோ ஒரே ஒரு அகண்டைகமான பரம்பொருள் மட்டுமே. இதை நிர்விகல்ப சமாதி நிலையில் உணர முடியும்.

நிர்விகல்ப சமாதிநிலை ஒரு மனிதனை, தான் (உற்பத்தியாகி) புறப்பட்டு வந்த மூலப் பொருளில் போய் மீண்டும் சேருவதற்கு வகை செய்கிறது. ஒரு ஒளிக்கதிர் தான் புறப்பட்டு வந்த சூரியனிடமே திரும்பிப் போய்ச் சேருவது போன்ற செயலுக்கு ஒப்பானதுவே இதுவும்.

இந்த ஒளிக்கதிர் சூரியனை மீண்டும்போய் அடைந்தவுடன் இருப்பது ஒரே சூரியன் என்பதை எப்படி அது அறிந்து கொள்ளுமோ அந்த நேரம்

வரைக்கும் தனது அறியாமை காரணமாக தான் ஏதோ தனித்து தன் காலிலேயே நின்று கொண்டிருப்பதாக மற்ற பலகோடி ஒளிக்கதிர்களுக்கும் தனக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை எனவும் நினைத்துக் கொண்டிருக்கும் நிலை எவ்வாறோஅதே போன்றது தான் இதுவும்.

அவ்வாறே மனிதனும் தான் நிர்விகல்ப சமாதிநிலை அடைந்தவுடனேயே அகிலத்தின் பிரிவினைத் தோற்றங்களில் ஒரு நிலையைக் காண்கிறான். அத்தகைய நிலையில் அகில அண்டத்திலும் உள்ள எல்லாப் பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்னணியில் ஒரே ஒரு பொருளாக இயங்கும் உயிர்ச்சார மகாசமுத்திரத்தையே காண்கிறான்.

ஒரு தனி ஒளிக்கதிர் எப்படி அது சூரியனிடமிருந்து புறப்பட்டு வருவதாயினும், தன் நிலைக்கும் ஒளிக்கும் காரணம் சூரியனே ஆனாலும் அந்த ஒளிக்கதிர் தன்னைத்தான் என்னமோ சூரியனை விட்டு தனித்து வாழ்வதாக எண்ணிக் கொண்டிருப்பது போல மனிதனும் தன் அறியாமை காரணமாக தன் மூல காரணனான கடவுளை மறந்துபோய் தான் என்னமோ இந்த அகிலத்தில் தனியாக வந்து பிறந்து வாழ்ந்து கொண்டிருப்பதாக எண்ணி விடுகிறான்.

இயற்கையின் செய்கைகளாகவுள்ள படைப்பின் போதும், நிலை கொண்டு நிற்கும் போதும், கடவுள்

சக்தி (பிரம்மம் சக்தி) இருவேறு கூறுகளாகப் பிரிகிறது — இவை நேரான சக்தி, மாறான சக்தி ஆகும். இந்த எதிர் எதிர் சக்திகள் மேலும் பெருகும் நிலையில் ஆவி, மனம், ஜடம் போன்றும் நேரான—மாறான மின்சாரக் கதிர் இயக்கங்களாகவும், எதிரெதிர் ஜோடிகளாகவும்—அதாவது நல்லது, கெட்டது, துன்பம், இன்பம், வெப்பம், தட்பம் போன்றவகையிலும் மாறுபட்டுக் கொண்டே போய் கடைசியாக ஆண்—பெண் பேதக்கூறுகளாக ஆகிவிடுகின்றன.

இந்த இருவேறு சக்திகளானவை (நேரான—மாறான) ஒன்றை ஒன்று கவர்ந்திழுக்கும் தன்மையைப் பெறுகின்றன.

வெறும் வெளியில் பரவி நிற்கும் நேரான மின்சக்திக் கதிர்களுக்கும் (Positive) மாறான மின்சக்திக் கதிர்களுக்கும் (Negative) நெருங்கிய தொடர்புள்ளன. அதே போல உடலில் புலன்களிலிருந்து மையங்களுக்குச் செல்லும் 'உள் முக நாடி ஓட்டங்களுக்கும், (afferant), மையங்களிலிருந்து வெளியேறும் 'பகிர்முக நாடி ஓட்டங்களுக்கும்' (efferent) இடையே நெருங்கிய தொடர்புள்ளன.

உண்மையென்னவோ இந்த உள்முக நாடி ஓட்டங்களும், பகிர்முக நாடி ஓட்டங்களும் சிறு அளவிலான நேரான மின்சக்திக் கதிர்களும் மாறான மின்சக்திக் கதிர்களுமேயாகும்.

ஒரு அணுவில் (autom)இயங்கும் இதேபோன்ற நேரான மின்சக்திக் கதிர்களும், மாறான மின்சக்திக் கதிர்களுமே 'எலெக்டரான்' (Electrons) களாகவும், புரோட்டான் (Protons) களாகவும் வெளிப்படு கின்றன. இதே அணுவில் கதிரியக்க உற்பத்தி மையமாக (Nuclear Centre) இருப்பதுவே அணு வின் 'ஆன்மா' அல்லது 'உயிர்க்கரு' ஆகும்.

உயிருள்ள உடலுக்குள் 'ஆன்மா' தான் ஒரு சாட்சி என்ற அளவுக்கு மட்டுமே இருந்து கொண்டி ருக்கின்றது. தூங்கும் நிலையில் எப்படியோ அது போலவும் தாதுப் பொருள்களிலும் காய்கறிகளிலும் எப்படியோ அது போலவும் மனம் என்ற ஒன்றை விட்டு அகன்று உயிரியக்கம் அல்லது உயிர்ச்சாரம் மட்டும் தனித்து இயங்க முடியும். ஆனால் 'மனம்' உயிரியக்கம் அல்லது உயிர்ச்சாரம் இணைந்து இயங்காத நிலையில் தனியாக இருக்க முடியாது. இதிலிருந்து நமக்கு ருசுவாவது என்னவெனில் உயிரியக்கம் என்னும் உயிர்ச்சாரமும், 'மனம்' என்பதும் இரு வெவ்வேறு தன்மைகளைக் கொண்ட வை. இந்த இரண்டில் மனம் என்பது உயிரின் கருவியாக உள்ளது. அது தனக்கான உயிரியக்கத் தையும், ஒளியையும் அந்த ஒரு 'உயிரில்' இருந்தே பெறுகிறது. உண்மை என்னவோ உயிர் இல்லாது மனம் ஒரு கணம்கூட உயிர் வாழ முடியாது.

உதாரணமாக ஒன்றை விளக்குவோம். சூரியனிடமிருந்து புறப்பட்டு வரும் ஒரு தனி 'ஒளிக் கதிர்' ஒரு கண்ணாடியின் மீது விழுகிறது.

கண்ணாடி அந்த ஒளிக்கதிரைப் பிரதிபலிக்கிறது. பிரதிபலித்த இந்த ஒளிக்கதிர் ஒரு குளத்தின் நீர்ப் பரப்பின் மீது விழுகிறது. இதனால் குளத்தின் நீர்ப் பரப்பில் சின்னஞ்சிறு அளவிலான சூரியன்' உருவம் பிரதிபலிக்கப்பட்டு அது நம் கண்ணுக்குத் தெரிகிறது.

குளத்தின் நீர் சுத்தமாகவும் அலைகளற்று அமைதியாகவுமிருப்பின் சூரியனின் உருவத்தை நாம் மிகவும் தெளிவாகக் காண முடியும்.

அதே தண்ணீர் அழுக்கடைந்தும், சிற்றலை களால் அலைக்கழித்துக் கொண்டிருப்பின் சூரிய பிம்பமும் ஆடி அசைந்து கொண்டிருப்பதால் அதை நிலையாகக் காண முடிவதில்லை.

அந்தத் தண்ணீர் சேறும் சகதியுமாக இருந்து பேரலைகள் அலைமோதிக் கொண்டு இருப்பின் சூரிய ஒளிக்கதிர்கள் அந்த நீர்ப்பரப்பின் மீது பாய்ந்து கொண்டிருந்தாலும் உருவம் முழுக்க முழுக்க நமக்குத் தெரிவதே இல்லை.

இந்த உருவக விளக்கத்தில் சூரியனை முழு முதற் பொருளுக்கும், கண்ணாடி மீது விழும் தனித் தன்மையுடைய 'ஒரே ஒரு ஒளிக்கதிரை' தனிப்பட்ட உயிராக உள்ள ஒரு ஆன்மா அல்லது ஆவிக்கும், தண்ணீரின் மூவகை நிலைகளை மனத்தின் தூய நிலை, அரைகுறைத் தூய நிலை, கலங்கிய நிலை களுக்கும் ஒப்பிடலாம்.

குளத்தின் அலைகளற்ற அமைதியான தூய நீர்ப்பரப்பில் சூரிய பிம்பம் தெளிவாகப் பிரதி பலித்துக் காட்டும் நிலையில் சூரியனின் ஒளிக்கதிர் நீர்ப்பரப்பிலிருந்து கண்ணாடிக்கும், கண்ணாடியி லிருந்து சூரியனுக்கும் உள்ள தொடர்பை எப்படித் தடைபடாமல் கட்டிக் காக்கிறதோ அதேபோல ஒரு தூய மனம் (சாத்துவீக மனம்) தனது தொடர்பை ஆன்மா அல்லது ஆவியுடனும், முழு முதற்பொருளு டனும் அறுபடாமல் கட்டிக் காக்கிறது. மனமானது இது போன்றதொரு தூய நிலையை எய்தியவுடன், ஒருவர் சமாதி நிலையை எய்துவது மட்டுமின்றி உயர் நிலையிலான மேலான அறிவு நிலையை (விஞ்ஞானம்) எய்துகிறார்.

அரைகுறைத் தூய நிலையுடைய நீர்ப்பரப்பில் ஒரு சில சமயங்களில் சூரிய பிம்பம் காணப்படுவது போல, ஓரளவு தூய நிலைபெற்ற மனத்துக்கும் (ராஜச மனம்) சில நேரங்களில் இறையுணர்வு ஏற்பட்டு முழு முதற் பொருளின் உண்மையும் தெரிகிறது.

கலங்கிய நீர் எப்படி பெரும் அலைகளால் அலைக்கழிக்கப்படும் நிலையில் சூரிய பிம்பத்தைப் பிரதிபலிக்கத் தவறி விடுகிறதோ, அதேபோல தூய்மையற்ற மனத்துக்கு (தாமச மனம்) கடவுள் உணர்வையே கொடுக்காமல், முழு முதற் பொருளின் உண்மையையே புலப்படுத்தாமல் மறைத்து நிற்கிறது.

ஆதலின் மனமே எல்லாம். நல்ல பயிற்சியும், நல்ல ஒழுக்கமும் பெற்ற மனம் ஒருவனுடைய நெருங்கிய உயிர் நண்பனைப் போன்று துணை புரிகிறது. மாறாகக் கெட்ட வழிகளில் பழக்கப்பட்ட அழுக்கடைந்த மனம் பரம விரோதி போன்று எப்போதும் ஒருவருக்குத் துரோகம் இழைத்துக் கொண்டே இருக்கிறது.

மனம் ஆசைகளால் மாசடைகிறது. அகங் காரத்தினால் ஆசைகள் தோன்றுகின்றது. ஆதலின் ஒருவர் தன் மனத்தைக் கட்டுப்படுத்தி விடுவாரா யின்அவர் தன் விதியையும் கட்டுப்படுத்தி விடலாம்.

பரம ஆன்மாவும் (Macrocosm)ஜீவ ஆன்மாவும் (Microcosm)ஒரே மாதிரியான நெருக்கமுடையவை. ஜீவான்மாவில் எதைக் காண்கிறோமோ அதையே பரம ஆன்மாவிலும் காண்கின்றோம்.

ஒருவனுடைய உடலை ஒரு பெரிய தேசத் திற்கும், அவனுள் உள்ள ஆன்மாவை தேசத்தை யாளும் அரசனுக்கும் அவன் மனத்தை தேசத்தின் பிரதமருக்கும் ஒப்பிடலாம்.

ஆன்மா ஆட்சி புரிவதற்கான எல்லா அதிகாரங் களையும் மனம் என்னும் பிரதமரிடம் ஒப்படைக் கிறது. பிரதமராக உள்ள அந்த மனமே உடல் என்னும் மாபெரும் நாட்டையே ஆட்சி செய்கிறது.

ஆன்மா உடலில் ஒரு சாட்சியாக மட்டுமே தங்கி இருக்கிறது. அதன் இருப்பிடம் மார்பின்

வலப்புறத்தில் உள்ள ஆன்ம இதய மையத்தில் உள்ளது.

ஒரு மனிதன் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியில் ஆழ்த்தப்பட்டோ அல்லது துக்கத்தால் பாதிக்கப் பட்டோ உள்ள நிலையில் தூங்க ஆரம்பிக்கிறான். ஆழ்ந்த உறக்கம். அதாவது கனவுகள்கூட ஏற்படாத அளவு நல்ல தூக்கம். அந்நிலையில் அவனுக்கு முன்பிருந்த மகிழ்ச்சி அல்லது துக்கம் எதுவுமே தெரிவதில்லை. இதை நாம் என்னென்பது? ஆழ்ந்த உறக்க நிலையில் உயிரானது உடலில் அப்படியே இருந்து கொண்டிருக்கிறது. மூச்சு, இதயத் துடிப்பு, இரத்த ஓட்டம் போன்றவைகளும் சீராக இயங்கிக் கொண்டுள்ளன. இருந்தும் அந்த மனிதன் தூங்கப்போனபோது இருந்த மகிழ்ச்சியை அல்லது துன்பத்தை உணர முடிவதில்லை.

ஆழ்ந்த உறக்க நிலையில் எந்த அனுபவமும் பெறமுடியாத நிலை, உணர முடியாத நிலை ஏற்படுகிறது. ஏனெனில் மூளை மையத்தில் அந்த நேரத்துக்கு மனம் அங்கு இல்லாமல் விலகி இருப்பதாலாகும். இதிலிருந்து நமக்குத் தெளி வாவது என்ன? மனம் என்பதும் ஆன்மா அல்லது உயிர்ச்சாரம் என்பதும் வெவ்வேறானவை — இரு வேறு நிலைகள் என்பதாகும்.

'உயிர்' அல்லது 'ஆன்மா' ஒரு 'சாட்சி' போன்றே தங்கியுள்ளது. 'மனம்' இல்லாமற் போனால் எந்தவித அனுபவமோ அல்லது

உணர்வோ ஏற்படாது. ஆழ்ந்த உறக்கத்தின் போது ஆன்ம இதய மையத்தில் உள்ள ஆன்மாவில் மனம் கண நேரம் போய்த் தங்கி விடுகிறது. அதனாலேயே அந்தச் சமயத்தில் ஒருவருக்கு வேதனையோ அன்றி மகிழ்ச்சியோ தெரிவதில்லை. வேறெந்த வித உணர்வும் ஏற்படுவதில்லை. முழு முதற் பொருள் அல்லது உயிர்ச்சார சமுத்திரம் எப்படி இந்த அகிலாண்டங்களுக்கும் பரமகோசம் ஆகிறதோ அதே போல் இந்த உடலிலுள்ள உயிர் ஜீவ கோசம் ஆகிறது.

மூளை மையமே ஜீவ கோசத்தின் தலைமை இடமாக இருக்கிறது. அதே போல் பரமகோசம் இந்த உயிருக்கும் பிரதான பீடமாகிறது.

மனம், மூளை ஆகிய இந்த இரண்டும் வெவ்வேறு பொருள்கள். அவைகளிரண்டும் ஒன்றே அல்ல. அறியாமையால் பலர் இவ்விரண்டையும் ஒன்றெனக் கருதுகின்றனர்.

இந்த இரண்டில் மனம் மாத்திரம் சூக்கும சக்தியாக உள்ளது. அதற்கு ஆதாரமாக இருப்பது உயிர்ச்சார உணர்வு ஆகும். ‘மூளை’ தூல வடிவமுள்ளது. மிகவும் நுட்பமும் சிக்கலும் நிரம்பி இயங்கும் தன்மை படைத்தது. இத்தகைய மூளை மையத்தில்தான் மனம் செயல்படுகிறது.

உயிர் உணர்வு என்ற ஒன்று இல்லாமல் மனம் இயங்காது. மனம் இல்லையேல் மூளை தனித்து

இயங்கி அறியும் தன்மையையோ அல்லது அறிவை வெளிப்படுத்தும் நிலையையோ பெற முடியாது. அதே போல மனம் மட்டும் தனித்து இயங்குவதும் இயலாது. மூளை மையம், ஐந்து சூக்குமப் புலன்கள், ஐந்து தூலப் புலன்கள் போன்றவற்றின் உதவி யின்றி மனம் மட்டும் ஒன்றை அறியும் திறனைப் பெறுவது என்பது இயலாது.

உண்மையில் உயிர் உணர்வின் ஒரு கருவி யாகவே மனம் இருக்கிறது. உயிர் உணர்வு அதன் கருவியாக உள்ள மனத்தின் மூலமே இந்த அகிலத்தை அறிந்து கொள்கிறது. அதே சமயத்தில் மூளை மையம் ஐந்து சூக்குமப் புலன்கள் ஐந்து தூலப் புலன்கள் போன்றவற்றின் உதவியின்றி மனத்தினால் வெளி உலகத்தை அறிவதென்பது இயலாது.

ஆசைக்குக் காரணமாக இருப்பது தன்முனைப்பு (அகந்தை). ஆசை அதிகரிக்கும்போது அது ஒரு எண்ணமாகிறது. எண்ணமும் அதே போல ஒரு செய்கைக்குக் காரணமாகிறது. அந்தச் செய்கை பேச்சு ரூபத்திலோ அல்லது உடல் அசைவுகளா கவோ அல்லது இரண்டுமாகவோ வெளிப்படு கின்றன.

விழிப்பு நிலையில் புலன்கள் மனத்தை எப் போதும் விழிப்புடன் இருக்கச் செய்கின்றன. அதனால் மனத்தின் ஆற்றல் சிதறுண்டு போகிறது. சிற்றலைகளும், பேரலைகளும் ஓர் தடாகத்தின்

அமைதியான நீர்ப்பரப்பை எப்படி அலைக்கழிக்கின் றனவோ அதே போல சாந்தம் நிலவும் மனத்தின் நிலையை ஆசைகளும் எண்ணங்களும் அலைக்கழிக் கின்றன. ஆதலின் இந்த ஆசைகளும், எண்ணங் களுமே ஒருவனுடைய தூய்மை நிலை இழப்புக்கும் அடிமை நிலைக்கும் காரணமாக அமைகின்றன.

உயிருணர்வு (ஆன்மா), தூய்மை, நிறை குணம், சுதந்திரம் போன்ற தன்மைகளை எப் போதும் பெற்றுள்ளது. அது எதற்கும் கட்டுப் பட்டதல்ல. சுதந்திரம், அடிமைத்தனம் போன்ற எண்ணங்கள் மனத்தில் தோன்றுவனவாகும். தூய மனம் ஒருவருக்கு சுதந்திரத்தைப் பெற்றுத் தரு கிறது. தூய்மை இழந்த மனம் ஒருவரை அடிமை நிலைக்கும் அவதி நிலைக்கும் இறக்கி விடுகிறது.

மனதைத் தூய்மைப்படுத்தவும் அடக்கியாளவும் பல்வேறு வழிகள் பின்பற்றப்படுகின்றன.

வடிவமைப்பு எவ்வளவு அளவினதாக இருப் பினும் ஒரு வட்டம் என்று எடுத்துக் கொண்டால் அதற்கு ஒரே ஒரு மையந்தான் உண்டு. ஆயினும் எண்ணிறந்த ஆரங்களை அதற்கு வரைய முடியும். இந்த அனைத்து ஆரங்களுமே சுற்று விளிம்பின் பல பகுதிகளிலிருந்து ஆரம்பமானாலும் அவை அனைத்தும் சந்திப்பது என்னமோ ஒரே ஒரு பொது இடந்தான். அதுவே வட்டத்தின் மையப்புள்ளி. இங்கே வட்டத்தின் மையப் புள்ளியை பரம் பொரு ளுக்கும் பல்வேறு ஆரங்களை மோட்சத்திற்கான பல

தரப்பட்ட பாதைகள் அல்லது உலகின் பல்வேறு மதங்களுக்கும் ஒப்பிடலாம். எல்லா மதங்களின் குறிக்கோளும், முடிவும் பேருண்மையை அறியும் ஒரே நோக்கத்தைக் கொண்டதே யாகும்.

எல்லா உயிர்களும் ஒரே வகைப் பட்டதாக வளர்ச்சியிலும், ரசனையிலும், சுவையிலும், போக்கிலும் அவை ஒன்றுக்கொன்று பெரிதும் மாறுபட்டுக் காண்கின்றன. தனிப்பட்டவர்களின் மோட்சத்திற்கான பல்வேறு பாதைகளுமே அவரவர் ரசனைகளுக்கும் போக்குகளுக்கும் ஏற்ப மாறுபடுகின்றன. ஒருவர் எத்தகைய பாதையைத் தேர்ந்தெடுத்தாலும் அதன் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டியது என்னவெனில் மேற்கொண்ட முயற்சியில் உண்மையான ஈடுபாடும் கடும் உழைப்புமேயாகும்.

விளக்கமாகச் சொல்வோமாயின் மனம் நால் வகை பிரதான ஆற்றல்களைப் பெற்றுள்ளது. அவைகளே உள்ளுதல், உணர்ச்சி வயப்படுதல், சிந்தித்தல், ஒன்று திரட்டுதல் ஆகியவை.

இந்த நால்வகை ஆற்றல்களுமே மனத்துள் நிலவி இருப்பினும் எல்லா மனிதரிடமும் இந்த ஆற்றல்கள் சம அளவில் வளர்ச்சி பெற்றிருப்பதில்லை. பெரும்பாலான ஆண்-பெண் இருபாலாரிடமுமே இந்த ஆற்றல்களில் ஏதாவதொரு ஆற்றல்

அதிக அளவில் வளர்ந்து மற்ற மூன்றின் மீதும் ஆதிக்கம் செலுத்துகிறது.

அது போன்ற மனம் பெற்ற ஒருவர் தன் மனத்திலுள்ள ஆதிக்கம் செலுத்தும் ஆற்றலுக் கேற்ற பாதையையே தேர்ந்தெடுக்க வேண்டியதாகிறது. இது போன்ற பாதைகளே முறையே கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், இராஜயோகம் ஆகும். உலகிலுள்ள எல்லா மதங்களுமே இந்த நால் வகை யோகங்கள் அல்லது பாதைகளில் ஏதாவதொன்றின் கீழ் வரும்.

நல்லொழுக்கத்தைப் பற்றி விளக்கும் நடைமுறை உபதேசங்களும், நன்னெறிகளும் உலகிலுள்ள எல்லா மதங்களுக்கும் பொதுவானதாகும். உண்மை என்னவோ இயமம் நியமம் போன்ற விதிகளும் அல்லது நல்லொழுக்கத்தைப் பற்றி விளக்கும் நடை முறை உபதேசங்களும் நல்வழியை அடித்தளமாகக் கொண்டு அதன் மீது எழுந்து நிற்பதே ஒரு மதத்தின் முழுக்கட்டுமான வடிவமைப்பு.

ஆசைகள், உண்ணங்கள் செயல்கள் ரூபத்தில் நாம் எதை விதைக்கிறோமோ அதையே நீண்ட காலத்துக்குப் பின் அறுவடை செய்கிறோம். நாம் இப்பொழுதுள்ள நிலைக்குக் காரணமானவை நமது கடந்த கால ஆசைகள், எண்ணங்கள், செயல்களுமேயாகும். நம்முடைய எதிர்கால இன்ப துன்பங்கள் கூட முழுக்க முழுக்க இப்போதைய ஆசைகள் எண்ணங்கள் செயல்களைப் பொறுத்தே

அமைகின்றன. காரணமாக இருக்கும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விளைவு ஏற்படுகிறது. ஒவ்வொரு விளைவுக்கும் ஒவ்வொரு எதிர் மாறான விளைவும் உண்டு. அதனாலேயே ஒருவர் தான் செய்யும் செயல்களின் விளைவுகளிலிருந்து தப்பித்துக் கொள்ள முடிவதில்லை.

ஆதலின் ஒருவர் நல்லவராகவும் அன்புடையவராகவும், கண்ணியம் மிக்கவராகவும் இருப்பதினால் பெறும் இலாபம் அளப்பரியது. பிறரிடம் தயை அற்றவனாகவும், கொடியவனாகவும் நடந்து கொள்வதாலும் — மற்றவர்களிடம் நயவஞ்சகம் காட்டி அவர்களைத் துன்புறுத்துவதாலும் ஒருவர் தனக்குத் தானே வேதனையைத் தேடிக் கொள்கிறார். அவர் செய்யும் இது போன்ற பாபச் செயல் தனது வேதனைக்கும் துன்பங்களுக்கும் மூலகாரணமாகி விடுகிறது.

நல்லொழுக்கம் பற்றிக் கூறப்படும் நடை முறை உபதேசங்களையும், நன்னெறிகளையும் ஒருவர் கண்டிப்பாகப் பின்பற்றாமற் போனால் மனதைக் கட்டுப் படுத்த முடியாது. மனம் கட்டுப்படவில்லையானால் உண்மையான சாந்தியும் பேரானந்தமும் கிட்டவே கிட்டாது.

அனாதரவான ஓர் ஏழையை செல்வாக்கு மிக்க ஒரு பணக்காரன் வேண்டுமாயின் காலால் எட்டி உதைத்து விட்டு, செல்வம் செல்வாக்கைக் கொண்டு எந்த விதத் தண்டனையும் இன்றித் தப்பித்துக்

கொள்ளமுடியும். ஆனால் 'தப்பித்துக் கொள்வது என்பது அப்போதைக்கு மட்டுமேயாகும். காரணம் என்னவெனில் 'எண்ணத்தின் சக்தி' என்று ஒன்று இருக்கிறதல்லவா? — அனாதரவான அந்த ஏழை மனிதனால் வெளிப்படையாக அதற்குப் பதிலடி கொடுக்க முடியாமற் போனாலும், அந்த வேதனையின் காயத்தையும், தாக்குதலையும், அவமதிப்பையும் அனுபவிக்கும் நிலையில் தனது நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து எழும் குமுறலோடு அவனைச் சபிக்கிறான். உள்ளக் குமுறலிலிருந்து எழுந்த இந்த சாபம், பீறிட்டு எழும் அலைகளாகி நீண்ட காலத்திற்குப் பின்னரும் வலுப் பெற்றிருந்து அந்தச் செல்வந்தனையே திருப்பித் தாக்குகிறது.

அதே பணக்காரன் இது போன்ற கொடிய செயல்களை திரும்பத் திரும்பச் செய்வானேயாகில் பல பேருடைய சாபம் வெகு விரைவில் செயல்படத் தொடங்கி அதன் விளைவாக பலம் மிக்க ஒருவனை அவனுக்கு எதிரியாகத் தோற்றுவித்து அவன் மூலம் அற்ப விஷயங்களுக்கெல்லாம் செல்வந்தனைப் பழி வாங்கும்படிச் செய்து விடுகிறது. இதுவும் இல்லாமல் கொடுமையும், பாபமும் கலந்த ஆசைகளும் எண்ணங்களும் செயல்களுமே அவனுடைய மனத்தை அலைக்கழித்து நிம்மதியிழக்கச் செய்து விடுகின்றன. மனச்சாட்சியின் உறுத்தல் என்ற ஒன்றே இந்த நிலைக்குக் காரணமாகிறது.

ஒருவனுக்குக் கேடு விளைவிக்க வேண்டும் என்ற நினைப்பே அவனது மனத்தை மாசுறச் செய்து விடுகிறது. அதனால் அந்த மனம் பாபச் செயலில் இறங்கும்படி அவனைத் தூண்டுகிறது. ஆனால் உள்ளிருந்து ஒரு குரல் அவ்வாறு செய்ய வேண்டாம் என்றும் கூறுகிறது. அந்த நிலையில் ஒரு 'கயிறு இழுப்புப் போட்டி' போன்ற ஒரு போராட்டமே மனதுக்குள் நிகழ்கிறது.

இந்தப் போராட்டத்தில் மனத்தினுடைய மதிக் கூர்மை அல்லது பகுத்தறிவு தன்னுடைய வேலை யைச் சரிவரச் செய்யத் தவறுமேயானால் அந்த மனிதன் தவறுதலாக நடந்து பாபச் செயலைச் செய் கிறான். மாறாகச் சரியான முறையை அறிந்து கொள்ளும் நிலை ஏற்படுமேயானால் தான் செய்யப் போகும் செயலில் உள்ள பாபச் சுடரைக் கவனித்து விடுகிறான். மேலும் ஒருவன் மிகவும் இரகசியமாக ஒரு பாபச் செயலைச் செய்தாலுங்கூட, அதற்கும் எதிர்விளைவுகள் நிச்சயமாக உண்டு. ஏனெனில் சித்தம் (மனக்கோப்பு) ஒவ்வொரு ஆசை, எண்ணம், செயலையும் பதித்து வைத்துக் கொள்கிறது. எந்த ஒன்றுமே தப்பிப் போவதில்லை. சித்தத்தில் பதியாமல் விட்டுப் போவது என்பதே கிடையாது. இவ்வாறான பதிவுகள் நல்லதாயினும் கெட்டதா யினும் அதற்கான விளைவுகளை உண்டாக்கியே தீருகின்றன. நல்லதைச் செய்தவன் நன்மையை அனுபவிக்கும் அதே நேரத்தில், கெட்டதைச் செய் தவன் வேதனைகளுக்கு உட்படுகிறான்.

இதுபோன்ற கடந்த காலப் பதிவுகளே ஒருவருக்குப் பலன் கொடுக்க ஆரம்பித்து அதன் பயனாக இன்ப — துன்பங்கள் விளைவிக்கின்றன. இந்த உலகத்தில் நாம் பார்க்கும் அமைதியின்மைக்கும், துன்பங்களுக்கும் மூல காரணமானது வாழும் மக்களின் கடந்த கால பாபச் செயல்களின் ஒட்டு மொத்த விளைவேயாகும்.

ஒரு பாபி மன அமைதி என்பதையே பெற முடியாது. மன அமைதியைப் பெற முடியாதவனால் மனத்தைக் கட்டுப்படுத்தவோ சாதனையைப் பழகவோ இயலாது.

ஆதலின் இயமம், நியமம் (நல்லொழுக்கம் பற்றிய எல்லா நடைமுறை நியதிகளும், நன்னெறிகளும்) போன்றவைகளே மதத் துறைக்கும், தத்துவத் துறைக்கும் முதல் கட்டமாக அமைந்து அவற்றின் அடித்தளமாகவும் திகழ்கின்றன.

நீங்கள் உங்களது மனத்தைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் வெற்றி பெற்று அமைதியையும், பேரானந்தத்தையும் எய்த வேண்டுமாயின் தூய தெய்வீக வாழ்க்கையைப் பின்பற்றி வாழ்வதற்கு முயல வேண்டும். உங்களது வாழ்வுக்கான தேவைகளை நல்ல வழியில் சம்பாதியுங்கள். கொள்ளையடித்தும், புரட்டு செய்தும் சம்பாதித்த பொருளிலிருந்து கிடைக்கும் உணவை உட் கொள்ளாதீர். அத்தகைய உணவில் மனித இரத்தக் கறை படிந்துள்ளது. அந்தக் கறை உம்மை அழித்து விடும்.

# மனக்கட்டுப்பாட்டிற்கான ஆரம்பப் படிகள்

1. எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் உண்மையையே கடைப்பிடி

2. எண்ணம், பேச்சு, செயல்களில் கிஞ்சித்தேனும் பொய்யைப் புகவிடாதே!

3. எண்ணம், சொல், செயல்களில் பிரம்மச்சரியத்தையே (கற்பு நெறியையே) பின்பற்ற வேண்டும்!

4. சுருக்கமாகப்பேசு; அது இனிமையாகவும், இதமாகவும் இருக்கட்டும்.

5. விடியற்காலையிலேயே (மணி மூன்றிலிருந்து 6 மணிக்குள்) எழுந்திருக்க முயன்று மந்திர ஜபம் செய் — தியானத்தில் உட்கார்!

6. உண்பதிலும் பருகுவதிலும் ஒரு நியதியை வகுத்துக்கொள். உண்ணும் காலத்தை நிர்ணயித்துக் கொள். உணவின் அளவையுங் கூட வகுத்துக்கொள். எப்போதும் வயிற்றை

நிரப்பாதே. நீ உண்ணும்போது எப்போதும் அரை வயிறு சாதம் - கறி மட்டுமே சாப்பிட்டு கால் பாகம் தண்ணீரால் நிரப்பி, மிகுதி கால் பாகத்தைக் காற்றோட்டத்துக்குக் காலியாக ஒதுக்கு. யோக விதிகளின்படி இதுவே உணவு உட்கொள்வதற்கான சரியான வழியாகும்.

7. விருந்துணவையும், காரசாரமான உணவையும், எளிமையாக சீரணிக்க இயலாத உணவையும் உட்கொள்ளாதே. அசீரணம், வயிற்றுக் கோளாறு போன்றவைகளே பல்வேறு நோய்களுக்குக் காரணமாகின்றன. நோயுடைய உடம்பை வைத்துக் கொண்டு மனக்கட்டுப்பாட்டுச் சாதனை செய்வதென்பது இயலாது.

8. உணவும், பானமும் முழுக்க முழுக்க அதற்கான நேரம், தட்பவெப்பநிலை, உடம்புக்கு ஒத்துப் போகுந் தன்மை, உட்கொள்ளும் முறை போன்றவற்றைப் பொறுத்தே அமைதல் வேண்டும்.

9. யோக ஆசனங்களைக் காலையிலும், மற்ற உடற்பயிற்சிகளை மாலையிலும் செய்து பழக வேண்டும்.

10. எளிதில் சீரணிக்கும் நிலையில் உணவு இருக்க வேண்டும். இது உங்கள் உடல்நலத்துக்கும், மனோ நலத்துக்கும் பல வழிகளில் நன்மை புரியும்.

11. உனது நேரத்தைச் சரிவரச் சிலவழிக்க உனக்கென்று தனியாக ஒரு கால அட்டவணையை வகுத்துக் கொள். அதுபோன்ற தினசரி நேரந் தவறாத வேலையில் உனது மனத்தை முழுக்க முழுக்க ஈடுபடுத்து.

12. எப்போதும் நல்ல நூல்களையும் சாத்திரங்களையும் படியுங்கள். நல்ல தூய பண்பாளர்களுடன் பழகுங்கள்.

13. கெட்ட சகவாசத்தையும், வம்பளப்பையும் அறவே ஒதுக்கி விடுங்கள்.

14. மனத்தை ஆராயுங்கள். மனதை உன்னிப்பாகக் கவனியுங்கள். அதனுடைய பலவீனங்களையும் குற்றங்குறைகளையும் கண்டுபிடித்து அதைக் கண்காணியுங்கள். அதிலுள்ள குற்றங்களைத் திருத்தி அதை நேர் வழியில் திருப்பி விடுங்கள்.

15. மனத்தில் பலவீனமான பாப எண்ணம் எழும் நேரத்தில், அதற்கு மாற்றாக உள்ள நல்ல எண்ணங்களைக் கொண்டு வந்து மனத்தில் நிறுத்தி முன்னர் எழுந்த பாப எண்ணத்தை துரத்திவிடுங்கள்.

16. உயர்ந்த இலட்சியங்களே எப்போதும் உங்களுக்கு வழிகாட்டியாக இருக்கும்படி வைத்துக் கொள்ளுங்கள். உயர்வான நம்பிக்கைகளை மேற்கொண்டு வாழுங்கள்.

17. காரியங்களை காலத்தோடு செய்யுங்கள். உங்கள் கடமையை (எடுத்துக் கொண்ட பணியை) புறக்கணிக்காதீர்கள்.

18. உங்களது உணர்ச்சிவயப்படுந் தன்மைகளை அவற்றின் போக்கிற்கு விட்டுவிடாதீர்கள். எப்போதும் நீங்கள் ஒரு எசமானன் என்ற உணர்வோடு இருக்க வேண்டுமே ஒழிய ஒரு வேலைக்காரனைப் போல எண்ணாதீர்கள். (மற்றவருக்காக நீங்கள் பரிதாபம் கொள்ள லாம். ஆனால் பரிதாப உணர்வுகளைக் கட்டுப்படுத்துபவனாக இருந்து அவை உன்னை அடக்கி ஆளும் நிலைக்குப்போய் அவற்றுக்கு அடிமையாக்கிக் கொள்ளும் நிலைக்கு விட்டுவிடாதீர்கள். உங்களது உணர்ச்சிகளுக்கு நீங்கள் அடிமையாகிக் கொள்ளும் நிலைக்கு வந்து விட்டால் அதனால் உங்களுக்கு பெருத்த வேதனையே உண்டா கும்.)

19. வருத்தத்தில் இருப்பவர்களிடம் அன்பாக இருங்கள். உண்மையான தேவை உள்ளவர் களுக்கு உதவி செய்யுங்கள். மகிழ்ச்சியுடன் இருப்பவர்களுக்கு உதவி செய்யுங்கள். மகிழ்ச்சி யுடன் இருப்பவர்களோடு சேர்ந்து நீங்களும் மகிழ்வோடு இருங்கள். நயவஞ்சகர்களைப் பொருட்படுத்தாமல் இருங்கள். ஆனால் யாரையும் வெறுக்காதீர்கள். ஏனெனில் ஒருவரை வெறுப்பது என்பது வெறுக்கப்பட்ட

வரின் பாபச் செயல்களில் நாமும் பங்கேற்கிறோம் என்று ஆகிறது.

20. எப்போதும் ஆண்டவனையே (பரிபூரணன்) நினைத்துக் கொள்ளுங்கள். மனத்தை அவன் ஆற்றலிலும், பெருமையிலும் நிலை நிறுத்த முயற்சி செய்யுங்கள். உறங்கச் செல்லும் போது கடவுளின் பெயரை உங்கள் உதடுகள் உச்சரித்தபடி இருக்கட்டும். கண் விழித்து எழுந்தவுடன் முதலாவதாக கடவுளை நினைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், மனம் தனக்கென்று ஒரு வடிவுமில்லாத சூக்குமம் மிக்க சக்தியாக இருக்கிறது. ஆனால் மூளை மையத்திலுள்ள எண்ண வடிவத்தையே அது வடிவமைத்து அந்த வடிவத்தில் நிலைத்து நிற்கிறது. ஆதலின் உங்கள் எண்ணம் போலவே நீங்கள் ஆகிறீர்கள்.

21. உங்களது கடந்தகால நற்செயல்களையே எண்ணியபடி இருக்க வேண்டும். உங்களது பாபச் செயல்களையும் குற்றங் குறைகளையும் நினைக்கவே கூடாது. உங்கள் பாபங்களையும், குறைபாடுகளையும் எண்ணுவதால் உங்களை அறியாமலேயே உங்கள் மனத்திலும், சித்தத்திலும் (மனக்கோப்பிலும்) தவறான பதிவுகளை ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். அது உங்களை இன்னும் கீழுக்குத் தாழ்த்திக் கொண்டே போகிறது.

22. உங்களால் இயன்ற அளவு நல்லதையே செய்ய முயலுங்கள். உங்களுக்கு நீங்களே உண்மையாக நடந்து கொள்ளுங்கள். உலகம் உங்களிடம் உண்மையுடனிருக்கும்.

23. உங்களுக்கு எழும் ஆசைகளை எப்போதும் அடக்கி ஆள்வதற்குக் கற்றுக் கொள்ளுங்கள். அதன் மூலம் நீங்கள் மகிழ்ச்சியுடனிருக்கலாம்.

24. அளவுக்கு மீறிய உணர்ச்சிகள் உங்களை ஆதிக்கம் செலுத்த அனுமதிப்பீர்களேயானால் அது உங்களைத் தற்கொலைக்குக் கொண்டு போய் விடும்.

25. மற்றவர்களுக்கு நாம் கற்றுக் கொடுக்கும் முன்பு நாம் அதை முதலில் பழகிக் கொள்ள வேண்டும்.

26. பொருள் செறிந்த உயர்ந்த கருத்துகளைக் கூறும் வாய்ச் சொற்கள் மட்டுமே ஒரு மனிதனை தெய்வீகம் நிரம்பியவனாகவும், உத்தமனாகவும் ஆக்கி விடாது. அவன் கடைப் பிடிக்கும் நேரிய வாழ்க்கையினால் மட்டுமே ஒருவன் கடவுளை நெருங்க முடியும்.

27. எல்லோரிடமும் உனக்குள்ள நற்பெயரைக் கொண்டு அன்பும் பரிவும் காட்டுங்கள். ஆனால் ஆண்டவன் ஒருவரைத் தவிர மற்ற எதனிடமும் பற்று வைக்காதீர்கள்.

28. மனிதர்கள் மறைந்து விடக் கூடியவர்கள். ஆனால் கடவுள் ஒருவர் மட்டும் நிலை யானவர்.

29. உடல் வனப்பும் வலிமையும் வயது ஆக ஆகத் தேய்ந்து கொண்டே போகிறது. ஆனால் ஆன்மீகப் பொருளும் அருளும் இதற்கு எதிர் மாறாக உயர்ந்து கொண்டே போகிறது.

30. புலன் உணர்ச்சிகளைக் கண நேரம் அடக்கி ஆண்டாலும் அதனால் கிடைக்கும் ஆன்ம லாபம் அளப்பரியது.

31. ஒன்றை உருவாக்குவது மிகவும் கடினம்- ஆனால் கலைப்பது மிகமிக எளிது. வாழ்நாள் முழுவதும் போராடி எய்திய ஒன்று கண நேர அலட்சியத்தினாலும். சோம்பேறித்தனத்தி னாலும் சிதைந்து போகும். ஆதலின் எப் போதும் விழிப்புடனும், முன்னெச்சரிக்கை யுடனும் இருக்க வேண்டும்.

32. படாடோபம் ஒருவனை பந்தப் படுத்துகிறது. ஆனால் தூய்மையும், எளிமையும் ஒருவனுக்கு ஏற்றத்தைத் தருகிறது.

33. பேருண்மையே இந்த அகிலம் முழுவதையும் ஆளும் கடவுள். இந்தப் பேருண்மையைத் தேடு பவனே இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தின் வாரிசு ஆவான்.

34. நற்பண்புகளால் விளைவது மன அமைதி. பாபச் செயல்களின் விளைவுகளே மன உளைச்சல்.

35. உயரிய காதல் பற்றற்றது. காமம் காதல் அல்ல! காதல் ஏற்றம் அளிக்கிறது, காமம் பந்தப் படுத்துகிறது. தூய காதல் அச்சமற்றது! வெறுப்பில்லாதது. விலை மதிக்க வொண்ணாதது. அது எப்போதும் பயனளித்துக் கொண்டே இருக்கும்.

36. பேயானாலும் அடித்து விரட்டு. இடுக்கண் வரும்போதும், இழப்புகள் நேரிடும்போதும் அவை அனைத்தையுமே துணிவோடு ஏற்றுக் கொள். விரைவில் உன் பாதை சரியாகிப் போகும்.

37. ஒரு கற்றுக்குட்டி நிர்வாகம் செய்வதை விட கீழ்ப்படிந்து நடப்பது நல்லது. அவர்கள் மற்றவர்களுக்கு உபதேசிப்பதை விட்டு பிறரின் ஆலோசனைகளைக் கேட்டு நடப்பது நல்லது.

38. உலகிலுள்ள அனைத்துக் கெடுதிகளில் உடலுறவில் ஆசை வைப்பதுவே மிகவும் வேதனையை அளிக்கும்.

39. உண்மையான முயற்சிகளும், உள்ளார்ந்த பிரார்த்தனையுமே ஒருவரை ஒரு செய்கைக்கு ஊக்குவித்து அதில் வெற்றியைத் தேடித் தருகிறது. மேற்போக்கான ஈடுபாடும், பிரார்த்

தனையும் வெற்றி வாய்ப்பில்லாது காலங் கடத்தும் கதையில் முடிகிறது.

40. நாளை செய்யலாம் என்பதை இன்றே செய். சிறிது நேரங்கழித்து செய்து கொள்வோ மென்பதை இப்போதே செய். ஏனெனில் நீ உனது வேலையைச் செய்து விட்டாயா இல்லையா என்பதை, மரணம் பொறுத் திருந்து பார்ப்பதில்லை. நீங்கள் வேலைக் கான நேரம் வருமென்று காத்திருப்பீரேயா னால் அந்த நேரம் வராமலே போய்விடும். கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமல் போவது தான் மிக அதிகம்.

41. உண்மையான சாந்தியை புலன்களில் தேடா தீர்; புலனடக்கத்தில் தேடுங்கள். இந்த நிம் மதியை ஆண்-பெண் ஆகிய மனிதர்களிடையே தேடாதீர். மெய்ப்பொருளைக் காண்பீர்கள்.

42. ஒழுக்கத்தாலான வாழ்வுக்கு விடுமுறை என்பதே கிடையாது. இமைப்பளவும் நீங்காத கண்காணிப்பும் சலிக்காத உழைப்புமே நெறி யான வாழ்க்கையின் (தர்மத்தின் அடிப்படை யிலான வாழ்வு அல்லது தெய்வீக வாழ்க்கை யின்) சாரம்.

43. உழைக்கும் எல்லாவற்றிற்குமே லாபம் நிச்சயம் உண்டு. வெறும் வாய்ப்பேச்சு வறுமையில் கொண்டு தள்ளும். அதனால் என்னவாயினும் வம்பளப்பை ஒதுக்குவது நல்லது.

44. உண்மையும், அன்புமே ஒரு மனிதனைக் காப்பாற்றும். கயவாளித்தனமும், காமக்களியாட்டமும் அடியோடு அழித்து விடும்.

45. ஒரு போதும் விபச்சாரம் செய்யாதே. திருமணமானவராயின் நெறிமுறையோடு கூடிய தாம்பத்திய உறவை மேற்கொள்ள வேண்டும். திருமண மாகாதவராயின் கண்டிப்பான கற்பு நெறியை (பிரம்மச்சரிய விரதத்தை)க் கடைப்பிடிக்க வேண்டும். ஏனெனில் மனம், விந்து, சக்தி, உள்ளுணர்வின் ஆற்றல் அறிவுத் தெளிவு, குண்டலினி சக்தி (உடலின் ஆதார சக்தி) ஆகிய அனைத்தும் ஒன்றுடன் ஒன்று நெருக்கமாக இணைந்திருக்கக் கூடியவை.

மனதைக் கட்டுப்படுத்த ஒருவர் விந்து சக்தியையும் கட்டுவது நல்லது. குண்டலினி சக்தி கீழ் மையங்களில் தங்கியிருக்கும் நிலையில்தான் ஆண்—பெண் இருபாலாரிடையேயும் உடலுறவுக்கான தூண்டுதல்களும், பல்வேறான உடலுறுப்புகளில் சிற்றினப் பசைகள் சுரத்தலும் நிகழ்கின்றன. அந்த விந்துப்பசையுடன் சேர்ந்து வெளியேறுவது குண்டலினி சக்தியேயாகும்.

நாடியோட்டங்களுக்கு முக்கிய காரணமாக இருப்பது குண்டலினி சக்தியே. மருத்துவ விஞ்ஞானம் நாடியோட்டங்களின் இயக்கத்தையும் அதன் அமைப்புகளையும் கண்டுகொண்டுள்ளது.

ஆனால் இந்த நாடி ஓட்டங்களுக்கு மின் இயக்கி சாதனமாக உள்ள 'டைனமோ'வை மட்டும் கண்டு பிடிக்கவில்லை. அது மூளை — முதுகுத் தண்டு' அமைப்பையும் (Cerebro-spinal column) மூளை மையத்தையுமே அவற்றின் மின் இயக்கி சாதனம் (டைனமோ) என்று அவர்கள் சொல்கின்றனர். அது பெரிய தவறு.

உடலுக்கும் மனதுக்கும் மாபெரும் சக்தியாக உள்ளது விந்துச் சக்தியேயாகும். 'உடலுறவு கொள்ளும் செயல்' மனம், உடல் ஆகிய இரண்டுக்கும் மாபெரும் மாசு விளைவிப்பதாகும்.

மூளை மையத்திலும், உடல் முழுவதிலும் பரவி இருக்கும் நாடிச் சாரத்தை தன்னோடு கூடவே பிழிந்தெடுத்துக் கொண்டு விந்துச் சக்தி வெளியேறி விடுகிறது.

அதீத 'உடலுறவு ஈடுபாடு' உள்ளவர்கள் நரம்பு வியாதி, நரம்புத் தளர்ச்சி, தலை — கைகள் நடுக்கம், அஜீரணம் போன்ற நோய்களுக்கு ஆளாகி இளம் வயதிலேயே உடல் தளர்ச்சிக்கும் இறப்புக்கும் பலியாகின்றனர்.

அ. ஏனென்றால் உணர்ச்சி வசப்படும் ஒவ்வொரு தடவையும் நாடி ஓட்டத்திற்கான 'டைனமோ' இயங்க ஆரம்பித்து, அளவுக்கு மீறிய நாடிக் கதிர்களை உடலெங்கும் பரவி ஓடச் செய்

கிறது. இத்தகைய அதீத நாடிக் கதிர்களின் ஓட்டம் இருதயத்தையும் நுரையீரல்களையும் அபரிமிதமான இயக்கத்தில் விரட்டி ஓட வைத்து உடற் கட்டுக் கோப்பில் பல்வேறு ரசாயன மாறுதல்களை நிகழ்த்துகிறது. இந்த மாறுதல்களினால் இலட்சக் கணக்கான இரத்த அணுக்கள் நாசமடைகின்றன. அதைத் தொடர்ந்து உடலில் நோய் ஏற்படுகிறது.

ஆ. ஒவ்வொரு முறை உடலுறவின்போதும் ஏற்படும் விந்து நஷ்டத்தோடுகூடவே நாடி ஓட்டங்களின் தூரமும் வடிந்து போகிறது. விந்து முதலில் மூளை மையத்திலிருந்து கிளம்பி வரும்போது உடலின் பல்வேறு பாகங்களிலிருந்து — அதாவது எலும்புக்குள் உள்ள சதைப் பற்றிலிருந்தும் நாடி சக்தி எனும் நாடியோட்ட சாரத்தை பிழிந்தெடுத்துக் கொண்டு வந்து ஆண் — பெண் உறுப்புகளின் மூலமாக வெளியேற்றுகிறது. நாடிக் கதிர்களின் கட்டமைப்பிலிருந்து தினந்தோறும் இத்தகைய வடிகால் தொடர்ந்து நிகழ்வதால், உடலும் வியாதிக்கு ஆளாகிறது.

இ. ஒவ்வொரு மனோ உடல் செயலுக்கும் அதிக அளவிலான நாடிக் கதிர் ஓட்டம் அல்லது சக்தி தேவைப்படுகிறது. சிற்றின்ப ஈடுபாட்டினால் இந்தச் சக்தியில் பெருமளவு இழப்பு ஏற்படுகிறது. அதனால் உடல் — மனோ செயல்

களுக்குத் தேவையான நாடி சக்தி கிடைக்காமற் போய்விடுகிறது. அதன் பயனாக ஒருவர் பல்வேறு வியாதிகளுக்கு ஆளாகிறார். மனோ சக்தியையும் இழந்து விடுகிறார்.

ரு. அதீதக் காமக்களியாட்டத்தினால் பெருமளவு நாடி சக்தி இழக்கப்பட்டு அதன் விளைவால் சிந்தனையாற்றலும், ஞாபக சக்தியும் பலவீனமடைந்து அறிவுக் கூர்மை மங்கிப் போகிறது.

உ. எந்த ஒருஉடலுறுப்பிலாவது நாடிக்கதிர்களின் ஓட்டம் அதிகமானாலோ, அல்லது குறைந்து போனாலோ நோய் உண்டாகிறது. யோகிகள் உடல் பூராவுக்கும் நாடிக் கதிர்களைச் சீராகப் பரவச் செய்துதான் வியாதிகளைத் தீர்க்கிறார்கள். உடலின் ஏதாவதொரு பாகத்துக்கு நாடிக் கதிர்களின் விநியோகம் தடைப்படுமாயின் அந்தக் குறிப்பிட்ட பாகம் செயலிழந்து போகிறது. அந்த பாகத்தில் இரத்த ஓட்டம் இருந்தாலும் உணர்வற்றுப் போய்விடுகிறது. இதன் மூலம் நாடிக் கதிர்களின் ஓட்டம் எவ்வளவு அத்தியாவசியமானது என்பதும், எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதும் நமக்குப் புலனாகிறது. இதைக் கட்டிக் காப்பதில் மிகுந்த அக்கறை செலுத்த வேண்டும். பிரம்மச்சரியத்தின் குறிக்கோளும் இதுவேயாகும்.

உள. ஒரு சாதாரண மனிதனுடைய நாடிக் கதிர்களுக்கான 'டைனமோ'வாக இருப்பது

குத மையமேயாகும். இதனையே யோகிகள் மூலாதாரச் சக்கரம் என்பர்.

நாடிக் கதிர்களுக்கான மூல காரணமாக இருப்பது குண்டலினி சக்தியேயாகும். அது ஓய்வு ஒழிச்சலின்றி இருபத்து நான்கு மணிநேரமும் மூலாதாரச் சக்கரத்தில் வேலை செய்தவண்ணம் இருக்கிறது. இதன் மூலம் நாடிக் கதிர்களை உடலெங்கும் செலுத்திக் கொண்டே உள்ளது. முன்னரே விளக்கியுள்ளதுபோல் இதே சக்திதான் சிற்றின்ப ஆசைகளை உண்டாக்கவும், பலதரப் பட்ட காம இச்சைக்கு உதவும் நாளங்களில் பசைப் பொருள்களை வெளிப்படுத்தவும் செய்கிறது.

மேலும் இந்தச் சக்தியின் ஒரு பகுதிதான் விந்து வுடன் கூடவே வெளியேறுவதுமாகும்.

அளவு கடந்த சிற்றின்ப நுகர்வின்போது 'டைனமோ' (உடலின் மின் இயக்கி சாதனம்) பல வீனமடைந்து குதம், ஆண் — பெண் உறுப்புகள் மூலமாகக் கசிவு ஏற்பட்டு விடுகிறது. அதன் விளை வாக மூளை மையமும், ஐம்புலன்களின் உணர் வாற்றல்களும், உடலும் அவைகளுக்குத் தேவை யான நாடி ஓட்டக் கதிர் இயக்கத்தைப் பெறாமற் போய்விடுகின்றன. முடிவில் அவை அதற்கான சாதாரண இயக்கத்தை இயங்க வைக்க முடியாத அளவுக்குச் செயலற்றுப் போய் நோய் நொடிகளுக்கு ஆளாகின்றன.

மேலே தரப்பட்டுள்ள ஒரு சில குறிப்புகளிலி ருந்தே மனோசக்தியின் ஆற்றல் வளர்ச்சிக்கும், சீரான மனம், உடல் நலங்களுக்கும் அனுசரணை யாக அமையும் அளவோடு கூடிய உடலுறவு வாழ்க்கைக்கும், கண்டிப்பான கற்பு நெறி (பிரம்மச் சரியம்) இன்றியமையாத ஒன்று என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

ஏற்கெனவே காமச் சுழலில் சிக்கியுள்ள உலகில் காமக் களியாட்டங்களுக்குத் தாராள அனுமதி வழங்குவதன் மூலம் முன்னேற்ற மடைந்துள்ள இன்றைய உயிரியல் விஞ்ஞானம் மனித சமுதாயத் திற்கு மாபெரும் அநீதியை இழைத்து விட்டிருக் கிறது.

இதன் விளைவாக விஞ்ஞானம் என்ற பெயரில் தவறான திசை மாற்றம் ஏற்பட்டுள்ளது. மனித குலம் மிருகங்களைவிட — ஏன் — அற்பப் புழு — பூச்சிகளைவிடக் கேவலமாக நடந்து கொள்கிறது. முற்போக்குவாதிகள் எனக்கூறிக்கொள்ளும் சிற்றின் பத்துறை ஆராய்ச்சியாளர்கள் ஒருபுறம், உயிரியல் விஞ்ஞானிகள் மறுபுறம். மனம், அறிவுத் திறன், சிந்தனையாற்றல், குண்டலினி சக்தி, காமந்தணிதல் போன்றவற்றுடன் தொடர்பு பெற்று ஆதிக்கம் கொண்டுள்ள பிரம்மச்சரியத்தின் இரகசிய நுணுக் கங்களை அறிந்திராத காரணத்தால் மனித குலத் திற்கே பெருத்த தீங்கை இழைத்து விட்டனர். இழைத்தும் வருகின்றனர்.

நிலையான பிரம்மச்சரியத்தை கடைப்பிடிக் காதவரைக்கும் சமாதி நிலையைப் பெறுவது என்பது இயலாத ஒன்று ஆகும். இதுவே உண்மை நிலையுமாகும்.

இந்த ஒரு விளக்கத்தின் மூலம் முன்னணியி லுள்ள சிற்றின்பத்துறை வல்லுனர்களுக்கும், உயிரியல் விஞ்ஞானிகளுக்கும் காலம் கடந்துபோனா லும் சவால் விடுகிறேன். அவர்கள் இப்போதாவது தங்கள் தவறைத் திருத்திக் கொண்டு மனித குலத் துக்கு உதவ முன்வர வேண்டும்.

அறுபத்தியிரண்டு ஆண்டுகள் கற்பு நெறியுடன் வாழ்ந்துள்ளேன். சீவன், மனம் போன்றவற்றின் வெகு நுட்பமான ஆய்வுக் கூடங்களில் நெருங்கி இருந்து ஆய்வுகள் நடத்தினேன். பேருண்மைப் பொருளை நேருக்கு நேர் பார்த்து உணர்ந்தேன். கற்பு நெறியைக் குறித்த ஒரு சில கருத்துகளை மட்டும் இங்கே எழுதியுள்ளேன்.

ஆதலின் தூய்மையும், தெய்வீகமுமான வாழ்க் கையைத் தொடங்க வேண்டும். நற்பண்புகளாகக் கூறப்படும் எல்லா சாத்திர நெறிமுறைகளையும் தவறாது ஒருபுறம் கடைபிடித்துக் கொண்டே, மனக் கட்டுப்பாட்டையும் அதோடு பயில முற்பட வேண்டும்.

# மனக்கட்டுப்பாடு

('மனக்கட்டுப்பாட்டின் இரகசியங்கள்' என்ற எனது நூலில் இந்தக் கருத்து பற்றி மிகவும் விளக்கமாக விவரிக்கப்பட்டுள்ளது. இங்கே அதைப் பற்றி மேலோட்டமான குறிப்பையே கொடுத்துள்ளேன்.)

ஒரு சாதாரண மனித மனம் உருவமற்ற பரம் பொருளையோ அல்லது மெய்ப் பொருளையோ கற்பனை செய்ய முடியாது.

பெயர் — உருவம், எண்ணம் — எண்ணிய பொருள் ஆகியவை ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்க இயலாதன.

பெயரிடப்பட்ட ஒன்றை அல்லது எண்ணத்தில் எண்ணிய சூக்கும உருவம் ஒன்றைப் புரிந்து கொள்ள 'மனம்' அதை மூளை மையத்தில் உருவாக்கிப் பார்த்தேயாக வேண்டும். இல்லையெனில் புரிந்து கொள்ளவே முடியாது. அதனாலேயே மனக்கட்டுப்பாட்டுப் பயிற்சிக்கு 'உருவச் சின்னங்கள்' (Symbols) அத்தியாவசிய வடிவங்களாகக் கொள்ளப்பட்டன. இரண்டாவதாக, ஒருவர் மிகவும்

விரும்பிய ஒன்றின் மீது அவர் மனத்தை வெகு எளிதில் ஈடுபடுத்திக் கட்டுப்படுத்த முடிகிறது.

ஆதலின் மனக்கட்டுப்பாட்டினைப் பெறு வதற்கு ஒருவர் ஒரு மந்திரத்தை எடுத்துக் கொள் கிறார். பரம்பொருளின் ஒரு பெயரே மந்திரம் என்பது. அது மாபெரும் சக்தி படைத்தது. எண்ணற்ற ஆசைகளை அறவே நீக்குவதற்காக மந்திரத்தை இடைவிடாது எண்ணியபடியே இருந் தால் அந்த ஒரே ஓர் ஆசை மட்டும் வலுப்படு கிறது.

மந்திரத்தோடு கூடவே ஒரு குறிப்பிட்ட உருவ அமைப்பும்எடுத்துக்கொள்ளப்பட்டு அதன் மீது மனம் செலுத்தப்படுகிறது. 'மனம்' தூய்மை அடைந்த வுடன் 'அது' ஒன்றின் மீது குவியும் ஆற்றல் பெற்று சமாதி நிலையும் கைவரப் பெறுகிறது. அந்த நிலையில் பெயர் (மந்திரம்), உருவ அமைப்பு (சின்னம்) ஆகிய இரண்டும் தானாகவே மறைந்து விடுகின்றன. மனம் எல்லையற்ற பரம்பொருளில் (பரவெளியில்) போய்க் கலந்து விடுகிறது. சமாதி நிலையில் மட்டுமே பரம்பொருளின் உருவமற்ற தன்மையை ஒருவர் அனுபவிக்க முடியும்.

'ஓம்' என்ற சொல்லை ஒரு பொதுமறை மந்திரமாக உபயோகிக்கலாம்'

'ஓம்' என்பது மகாபீச மந்திரம் (மகா= மாபெரும்; பீசம்=விதை அல்லது வேர், மந்திரம்= புனிதமான சொல்).

அனைத்து ஒலிகளுக்கும், வார்த்தைகளுக்கும் 'ஓம்' மூலமாக இருக்கிறது. ஒரே ஒரு வார்த்தையில் பரம்பொருளையோ அல்லது எல்லையற்ற ஒன்றையோ குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானாலும், அதனுடைய எண்ணற்ற ஆற்றல் சக்திகளை விளக்க வேண்டுமானாலும், அந்த ஒரு வார்த்தையாக இருப்பது 'ஓம்' என்ற சொல்லேயாகும்.

உண்மையில் எல்லாவேத மந்திரங்களுமே 'ஓம்' என்று தொடங்கி 'ஓம்'இல் முடிகிறது.

'ஓம்' என்ற சொல்லை ஒரு கூட்டுச் சொல் என்று கூறுவர்.

இந்த 'ஓம்' என்ற சொல் ஒருவரால் உருவாக்கப்பட்ட சொல் அல்ல.

இது இயற்கையாக அல்லது அசரீரியாக யோகியர்களின் மனச் செவியினால் கேட்கப்பட்ட சொல் ஆகும்.

ஒரு சாதகன் (ஆன்மிகவாதி) ஆன்மிகத் துறையில் முன்னேற்றம் பெற்று தன் உடல், நாடிகள் (நரம்புகள்), மனம் ஆகியவற்றில் தூய்மையடைந்து, குண்டலினி சக்தியின் ஒரு பகுதியோ அல்லது முழுவதுமோ இதய மையத்தை அடைந்துவிடும் நிலையில் ஒருவர் அனாகத ஒலியான 'ஓம்' என்ற ஒலியைக் கேட்க முடிகிறது.

ஆதலின் 'ஓம்' என்னும் மந்திரம் ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறப்புரிமையாக உள்ள

சொல். அதனாலேயே எந்த ஒரு தனி மனிதனோ, எந்த ஒரு குறிப்பிட்ட மதமோ, எந்த ஒரு நாடோ, எந்த ஒரு பிரிவினரோ, ஆண் மட்டுமோ அல்லது பெண் மட்டுமோ, தனக்கே உரித்தான ஒன்றாக இதைக் கொள்ள முடியாது. இந்த மந்திரம் பொது மறையான ஒன்று. இதைப் பயனுள்ள வகையில் அனைவரும் பொதுவானதோர் பொதுமறை மந்திரமாக ஏற்றுப் போற்ற வேண்டும்.

முன்பே கூறியுள்ளது போலப் பரம்பொருள் அல்லது எல்லையற்ற ஒன்றுக்கு உருவம் கிடையாது. இந்த உருவமற்ற தன்மையை நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே புரிந்து கொள்ள முடியும். இந்த நிலையைத் தவிர்த்து (நிர்விகல்ப சமாதி நிலை) வாழ்க்கை என்பது இருவேறு நிலைகளைக் கொண்டதாக இருக்கிறது.

ஒருவர் தான் எண்ணிய பொருளை மனத்தில் உருவகப்படுத்திப் பார்த்த பிறகு தான் அதைப் பற்றிய எண்ணத்தைப் பெற முடியும். ஆதலின் ஒருவர் 'ஓம், என்ற சொல்லை உச்சரித்தவுடன் மனத்தில் அதற்கான ஓர் உருவம் எழுகிறது. அந்த உருவம் அவரவர் புரிந்து கொள்ளும் பாவனைக்கேற்ப அல்லது அந்த வார்த்தைக்கு அவர் சொல்லும் பொருளுக்கேற்ப தூல அல்லது சூக்கும உருவ அமைப்பை நினைவில் கொள் கிறார்.

ஓர் ஆன்மிகவாதி முன்னேறும் நிலையில் குண்டலினி சக்தி பகுதி அளவிலோ அல்லது

முழுமையாகவோ இதய மையத்துக்குப் போய்ச் சேருகிறது. அப்போது பல்வகையான ஒலிகள் கேட்கின்றன. மனத்தினாலோ அல்லது கண் முன்பாகவோ மின்னல் உருவிலும், மினுக்கட்டாம் பூச்சிகள் கூட்டாகச் செல்வது போலவும், தீப்பந்து போலவும், பிறைச் சந்திரன் போலவும், பரந்து வியாபிக்கும் வெள்ளிக்கோடு போலவும் பல்வேறு காட்சிகள் புலனாகும்.

ஆதலின் உதய சூரியன் (சோதி) உருவை 'ஓம்' என்ற சொல்லுக்கு உரித்தான குறியீடாக தியானத்தின் போது எடுத்துக் கொள்ளலாம்.

'ஓம்' என்ற மந்திரம் போலவே 'சோதி'யை அகண்டைக மதத்தின் குறியீடாக அமைத்துக் கொள்ளலாம். எந்த ஒரு மதமோ, எந்த ஒரு தனிப்பட்ட மனிதனோ, சாதியோ, ஆணோ அல்லது பெண்ணோ இந்தச் சோதிச் சின்னத்தை தனக்கே உரித்தான ஒன்றாக உரிமைகொண்டாட முடியாது. மனிதனுக்குப் பிறந்த ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறப்புரிமையாக இருப்பது இது!

# தியானம் செய்யும் முறை

உடல் தூய்மை, மனத்தூய்மையோடு கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவோ நிமிர்ந்த நிலையில் அமர வேண்டும். நல்ல எண்ணங்களை வெளிச் செலுத்த வேண்டும்.

அதாவது, 'எல்லோரும் எல்லாமும் அமைதி நிறைந்த ஆனந்தத்துடன் நீடூழி வாழ்க!' - என்ற முறையில் அந்த நல்லெண்ண அலைகள் அமைய வேண்டும். இந்த நல்லெண்ண அலைகளை கிழக்கு மேற்கு— வடக்கு, தெற்கு, மேல், கீழ் திசைகளை நோக்கிச் செலுத்த வேண்டும்.

பின்னர் 'ஓம் சாந்தி', 'ஓம் சாந்தி', 'ஓம் சாந்தி' எனச் சொல்ல வேண்டும்.

நன்றாக மலர்ந்ததொரு எட்டு இதழ் தாமரையை இதய மையத்தில்— அதாவது மார்புப் பகுதியில் இருத்தி பாவனை செய்ய வேண்டும். அந்தத் தாமரையின் மத்தியில் உதயசூரியன் அமைப்பில் சோதிச் சுடர் வீசுவதாகப் பாவிக்க வேண்டும். இந்தச் சோதிச் சுடரே மேலான பரம்பொருளெனவும், உன்னுள் உள்ள ஆன்மாவே

எனவும், 'ஓம்' எனும் சொல் எனவும் (அனைத்தும் ஒன்றிய ஒன்றெனவும்) எண்ணல் வேண்டும்.

மனத்தினால் 'ஓம்' என்ற மந்திரத்தை இடைவிடாது மனனம் செய்தபடி அதே மனத்தை 'சோதி'யில் நிலை நிறுத்தி, இயலுமானால் அதை அதன் ஒளியில் போய்க் கலக்கச் செய்ய வேண்டும்.

ஆனால் நீங்கள் தியானத்தில் ஈடுபட்டு 'சோதி' ஒளியில் மனத்தை நிலை நிறுத்த முயலும் போது அதிலுள்ள சிரமம் உங்களுக்கு அப்போது தான் தெரியும். ஒரு கண நேரகால அளவுக்குக்கூட மனம் ஒரு குறிப்பிட்ட புள்ளியில் நிற்காமல் போவதை உணர்வீர்கள்.

ஒரு பொருளிலிருந்து மற்றொன்றுக்கு உடனுக்குடன் தாவுவதையும், ஓர் எண்ணத்தை விட்டு மற்றொன்றுக்கு மாறுவதையும் உணர் வீர்கள். இது போன்ற சலனத்தையும், எண்ணற்ற எண்ணங்கள் வேக வேகமாக வந்து வந்து போவ தையும் காணும் மேலோட்டமான சொற்ப அறிவே படைத்த சிலர், மனத்தைக் கட்டுப்படுத்துவது இயலாத காரியம் என்று அடித்துப் பேசுகின்றனர். ஆனால் உண்மை இதுவல்ல. இவ்வாறு வருணிப் பதும் பெருந்தவறு!

முக்கியமாக இதற்கான பயிற்சியை மேற் கொள்ள எல்லையற்ற பொறுமையையும், இடை விடாத முயற்சியையும் ஒருவர் மேற் கொள்ள வேண்டும்.

வரும் எண்ணங்கள் வந்துபோய்க் கொண்டே இருக்கட்டும். அதைச் சட்டை செய்ய வேண்டாம். 'ஓம்' எனும் மந்திரத்தை மனனம் செய்து கொண்டே இருங்கள். அதே நேரத்தில் மனத்தை நினைவின் புள்ளி மீது (சோதிச் சின்னத்தின் மீது) கொண்டு வந்து நிறுத்திக் கொண்டே இருங்கள். இதைச் செய்யும்போது அதிகமாக அலட்டிக் கொள்ளக் கூடாது. கெட்ட எண்ணங்கள் மேலுக்கு எழுந்து வந்து விழுந்தாலும் கவலை வேண்டாம்.

தியானம் செய்யும் சமயத்தில் ஆபாசமிக்க கெட்ட எண்ணங்கள் அடிக்கடி மனத்தில் எழவும் கூடும். இதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு.

ஒவ்வொரு முறை ஆழ்ந்து சிந்திப்பது எனில் நம்மையுமறியாமல் சித்தத்தை (மனக்கோப்பை) போய்த் தாக்குவது என்று பொருள். சித்தத்தில் எண்ணற்ற கடந்தகால ஆசைகளும், எண்ணங்களும் அனைத்துமே காரண நிலைகளில் பதிந்து போய்த் தங்கியுள்ளன.

இவை இந்தப் பிறவியில் ஏற்பட்டவை மட்டுமல்ல. எண்ணிலடங்கா முற்பிறவிகளில் ஏற்பட்டவையாகும். இத்தகைய முற்பிறவிப் பதிவுகள் தியானத்தின்போது மூளைமையம் வரைக் கிளம்பி வந்து மேற்கூறிய இடைஞ்சல்களை விளை விக்கின்றன.

ஒரு கோப்பை நிறைய கலங்கல் தண்ணீரை எடுத்து நீ அதை ஒரு அறையில் வைத்துவிட்டு

மறுநாள் அதைப் பார்ப்பாயானால் தண்ணீரின் மேற் பரப்பு தெளிந்திருப்பதைப் பார்க்கலாம். ஆனால் நீ அதைக் கலக்கி விட்டாயானால் தண்ணீருக்கடியில் உள்ள வண்டல் மீண்டும் மேலுக்குக் கிளம்பி வந்து தண்ணீர் முழுவதும் கலங்கிய நிலைக்கு வந்து விடுகிறது. ஆனால் பல தடவை அந்த தண்ணீரை ஒரு துணியில் வடிகட்டி வடிகட்டி எடுப்பீர்களேயானால் நீர் தெளிந்து காணப்படும். ஓரிரு நாட்கள் கழித்த பிறகும் அதைக் கலக்கினாலும் அது கலங்காது. தெளிந்த நிலையிலேயே இருக்கும்.

அது போலவே 'ஓம்' —ஐ மனனம் செய்தபடி மனத்தை இடையறாது திருப்பித் திருப்பிக் குறியீட்டின் மீது (தியானத்திற்கான உருவச் சின்னம்) கொண்டு வந்து நிறுத்தும் பயிற்சியே மனத்தையும், சித்தத்தையும் தூய்மைப்படுத்துவதற்கான எளிய முறை.

தினசரி காலை, மாலை இரண்டு வேளையிலும் உங்கள் தியானப் பயிற்சியை ஒழுங்காகவும், ஒரே சீராகவும் தொடர்ந்து செய்ய வேண்டும் இந்தப் பயிற்சியில் உண்மையுடன் ஈடுபட்டால் மன நிலையில் பெருத்த மாறுதலைத் திண்ணமாகக் காணலாம்.

அதாவது மனம் ஒரு நிலைப்பட்டு அதன் அலைபாயும் போக்கு வேகமாகக் குறைந்து கொண்டே வருவதைப் பார்க்கலாம். மனத் தூய்மை

எய்தியவுடன் நீங்கள் அமைதியையும் ஆனந்தத்தையும் அனுபவிக்க முடியும்.

ஆரம்ப கட்டத்தில் ஒரு முறை தியானத்தில் அமரும்போது குறைந்தது அரை மணியிலிருந்து ஒரு மணி அவகாசத்திற்கு அமரவும். அதில் உங்களுக்கு ஆனந்தமும் தெம்பும் ஏற்பட்ட பிறகு கொஞ்சம் கொஞ்சமாக தியானத்தின் அவகாசத்தை அதிகரித்துக் கொண்டே போய் ஒரே முறையில் மூன்று மணிநேரம் தொடர்ந்து தியானம் செய்யும் கால அளவு வரை கொண்டு செல்லவும்.

இதற்கு நேரம் ஒதுக்க இயலுபவர்கள் வெகு விரைவில் பலனைப் பெற ஆசைப்பட்டால் நாளொன்றுக்கு நான்கு முறைகள் — அதாவது காலை, மதியம், மாலை, நடுநசி நேரங்களில் தியானத்தில் அமர வேண்டும்.

தியான காலங்கள் தவிர ஓய்வு நேரத்திலும் உடலுழைப்பு மேற்கொள்ளும் காலத்திலும்கூட மந்திரத்தை மனதில் நினைவுறுத்திக் கொண்டே இருப்பின், அது மேலும் பல வழிகளில் துணை புரிவது மட்டுமின்றி தியானத்திற்கும் மிக்க உதவியாக அமையும்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# இனம்--அதன் ஆரம்பம் வளர்ச்சி--மறைவு

## (CAST, ITS ORIGIN GROWTH AND DECAY)

BY : SWAMY NARAYANANANDA



From:

The Complete Works Of Swamy Narayanananda, Vol–14.

# இனம் - அதன் ஆரம்பம், வளர்ச்சி, மறைவு

## இனம்

எல்லா மதங்களுமே ஏதாவதொரு வகையில் அல்லது ரூபத்தில் இனப் பாகுபாடு கொண்டுள்ளன.

முதலில் இனம் எவ்வாறு தோன்றியது, எப்படி வளர்ந்தது, எப்படி உருக்குலைந்தது என்பதைப் பார்ப்போம்.

ஒரே மாதிரியான ரசனைகள், குணங்கள், இயல்புகள், போக்குகள் உடைய பொருள்கள் ஒரே கூட்டமாக அமைந்தும், தாமாகவே அமைத்துக் கொண்டும் 'இனம்' என்ற தோற்றத்தைப் பெறுகின்றன. இது இயற்கையில் அமைந்த ஒரு விதி. நாம் இதைப் பற்றி இப்போது ஆய்வு செய்வதற்காக தாதுப் பொருள்களில் துவங்கி மேல் நிலைப் பொருள்கள்வரை சென்று பார்க்கப்

போகிறோம். பல்வேறு மாதிரிகளை உடைய இவை எப்படி, தமக்குள்ளேயே கூட்டம் கூட்டமாக அமைந்து கொள்கிறது என்பதைக் காணப் போகிறோம்.

இந்த உலகில் வகைவகையான மண் வாகுகள் இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட வகை மண் சில குறிப்பிட்ட பகுதிகளிலேயே காணப்படுகிறது. பல்வேறு தினுசுகளாக உள்ள மண்ணை ஒன்று கூட்ட முயல்வோமேயானால் இவை எளிதில் ஒன்றுடன் ஒன்று கலப்பதில்லை. அவற்றை நன்றாகப் பிசைந்து மிதித்துக் கலந்தால் கெட்டி யான மண் கீழ்த்தர வகையைச் சார்ந்த மண்ணை தன்னுள் உறிஞ்சிக் கொள்கிறது. அதனால் விளைந்த கலவை ஒரு புதிய வடிவம் அல்லது வாகு பெறுகிறது.

ஓர் ஆற்றுப் படுகையைப் பரிசோதித்துப் பார்த்தால் கூழாங்கற்களும், மணலும், பலதரப் பட்ட மிருதுவான மண்ணும் வெவ்வேறு அடுக்கு களாகத் தனித் தனியே படிந்திருப்பதைக் காண லாம். அவை ஒன்றோடொன்று கலப்பதில்லை. மிருதுவான மண் ஓரிடத்தில் தனியாகக் குவிந் திருக்கும். வேறொரு இடத்தில் மணல் திட்டாகப் படிந்திருக்கும். பிறிதொரு இடத்தில் சரளைக் கற்கள் குவியலாகக் காணப்படும். அதுபோலவே பொன், வெள்ளி, இரும்பு, பித்தளை போன்ற உலோகங்களுக்கான மூலப் பொருள் சில குறிப் பிட்ட பகுதிகளில் மட்டுமே தனித் தனியாக

அமைந்துள்ளன. இதிலிருந்து அதன் தோற்றம் எதுவாக இருப்பினும் இனம் என்ற ஒன்று மண்ணிலும் கனிமப் பொருள்களிலும்கூட இருக்கிறது என்று தெரிகிறது.

இப்போது தாவரங்களின் வாழ்க்கையை எடுத்துக் கொள்வோம். இயற்கையிலேயே தாவரங்கள் செழிப்பாக வளர்ந்துள்ள தோட்டங்களிலும், காடுகளிலும் ஒவ்வொரு குறிப்பிட்ட பரப்பளவிலுள்ள ஒரு தனிப்பட்ட மண்வாரிப் பிரதேசத்தில் ஒரு தனி வகைப் புல், மூலிகை அல்லது செடிகள் மட்டுமே வளர்கின்றன. மற்ற இனச் செடிகளோ தாவரங்களோ அங்கு வளர்வதில்லை. அதனால் தாவர வாழ்க்கையிலுங்கூட இனத்திற்கு எல்லை வகுக்கப் பட்டிருக்கிறது.

எறும்புகள், தேனீக்கள், குளவிகள் போன்ற புழு பூச்சிகளை எடுத்துக் கொண்டோமானால் இவற்றிலும் மேலும் ஒருபடி இனப்பாகுபாடு வளர்ந்திருப்பதைக் காணலாம்.

எறும்புகள், தேனீக்கள், குளவிகள் போன்றவற்றில் உள்ள பல்வேறு வகைகளின் கூட்டங்கள் தங்களுக்குச் சொந்தமாக வாழ்வதற்கு வெவ்வேறு காலனிகளை அமைத்துக் கொள்கின்றன. ஒரு காலனியைச் சேர்ந்த எறும்போ, தேனீயோ அல்லது குளவியோ மற்றொரு காலனிக்குள் அனுமதிக்கப் படுவது கிடையாது. இரு வேறு காலனிகளைச் சேர்ந்த ஒரே வகுப்பைச் சார்ந்த இரண்டு தேனீக்

களோ அல்லது குளவிகளோ சந்தர்ப்ப வசத்தால் சந்திக்க நேரிட்டால், அவை ஒன்றுடன் ஒன்று சண்டையிட்டு அழிந்து போகின்றன.

மேலும் ஒரே காலனியைச் சேர்ந்த எறும்புகளும் தேனீக்களும் குளவிகளும்கூட தமக்குள்ளேயே வெவ்வேறு வகுப்புகளாக பிரித்துக் கொண்டுள்ளன. ஒவ்வொரு காலனியிலும் ஓர் இராணியோ அல்லது இராணிகளோ உள்ளன. (தேனீக்கள் தம் காலனியில் ஒரே ஓர் இராணி ஈயையும், எறும்புகளும் குளவிகளும் தமது காலனிகளில் ஓர் இராணிக்கு மேலுங் கொண்டுள்ளன.)

இராணியே காலனியின் தலைவி. பிறகு தொழிலாளர்கள் வருகிறார்கள். தொழிலாளர்களிலும் மூன்று வகுப்புகள் உண்டு. அவை கட்டுமானம் செய்பவை, உணவு தேடிக் கொண்டு வருபவை, காலனியைக் காத்து ஒப்பிக்கக் கூடிய மெய்க்காப்பாளர்கள் அல்லது காவலர்கள் ஆகும். கடைசியாகச் சோம்பேறி ஆண் ஈக்களும் உண்டு. எந்த வேலையையும் செய்யாமல் இவை இராணியின் பக்கத்திலேயே இருந்து கொண்டிருக்கும். பல்வேறு வகுப்புகளாக உள்ள தேனீக்களும் எறும்புகளும் குளவிகளும் தத்தமக்கான பணிகளில் கட்டுப்பாட்டுடன் உறுதியோடு வேலை செய்கின்றன. ஆதலின் புழு பூச்சிகளில்கூட விஞ்ஞான பூர்வமாக மிகச் சிறந்த முறையில் இன ஒதுக்கம் வளர்ச்சி பெற்றிருக்கிறது.

பறவைகளுக்கு வருவோம். பல்வேறு வகை யாக உள்ள பறவைகள் ஒவ்வொரு வகையும் தனித்தனிக் கூட்டமாகச் சேர்ந்துள்ளன. ஒரு குறிப்பிட்ட வகையைச் சார்ந்த ஒரு கூட்டம் மற்றொரு வகை பறவை இனத்துடன் எளிதில் கலப் பதில்லை. இதிலிருந்து பறவைகளிலும்கூட இனப் பாகுபாடு இருப்பதைக் காணலாம்.

மிருகங்களிலும் இன அமைப்பு முறை இருக் கின்றன. காட்டு மிருகங்களான மான்கள், காட்டெ ருமைகள், யானைகள் பல தரப்பட்ட குரங்குகள் தனித்தனி மந்தைகளாக வகுத்துக் கொண்டு வாழ் கின்றன. ஒரு மந்தையைச் சார்ந்த ஒரு மிருகம், ஒரே வகையைச் சார்ந்ததாக இருப்பினும் மற்றொரு மந்தைக்குள் பிரவேசிக்க அனுமதிக்கப்படுவதில்லை. ஒரே வகையைச் சார்ந்த சம பலம் பெற்ற இருவேறு மந்தைகள் ஒன்றையொன்று சந்திக்கும்போது, அவற்றுக்குள்ளேயே கோரமாகச் சண்டையிட்டுக் கொள்கின்றன.

ஒரு மந்தையிலுள்ள வலுவுள்ள மிருகம் ஆட்சி புரிந்தால் மற்றுமுள்ள மிருகங்கள் அதற்குப் பணிந்து போகின்றன. குரங்குகள் தமக்கென ஒரு வகை அரசாங்கத்தையே அமைத்துக் கொள் கின்றன. ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவன் உண்டு. மிகப் பெரிய மந்தையில் ஐம்பதிலிருந்து நூறு குரங்குகள் வரை உள்ளன. ஒரு பெரிய தலை வனின் கீழ் உபதலைவர்கள் உண்டு. ஐந்திலிருந்து பத்து குரங்குகளை (குட்டிகள், பெண் குரங்குகள்)

ஒவ்வொரு உபதலைவரும் அடக்கியாண்டு அவற்றை வழி நடத்திச் செல்கின்றன. பல்வேறு குழுக்களைச் சார்ந்த பெண் குரங்குகள் தம்முடைய குழுவைச் சார்ந்த ஆண் குரங்குகளுக்கு மட்டுமே சேவை செய்து வாழ்கின்றன.

நீளமான வால் படைத்த குரங்கு ஜாதிகள் நாடோடிகளாக வாழ்கின்றன. ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கும், ஒரு காட்டிலிருந்து மற்றொரு காட்டிற்கும் இடம் பெயர்ந்து செல்ல வேண்டுமாயின் அவை தம்முடைய பிரதான தலைவரிடமிருந்து அன்புக் கட்டளையைப் பெற வேண்டும்.

மிருகங்களில்கூட இனப் பாகுபாடு மேலே விளக்கப்பட்ட ரீதியில் அமைந்துள்ளன. இதே இனம் மனித குலத்தில் மிகச் சிறந்த விஞ்ஞான ரீதியில் வளர்ந்துள்ளது. ஏதோ ஒரு ரூபத்தில் இனம் என்பது இல்லாத நாடே கிடையாது.

தாங்கள் அனைவருமே ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று பிரகடனப்படுத்திக் கொள்ளும் மக்கள்கூட மூன்று வெவ்வேறு பிரதான பிரிவுகளாக, சுயமாகவே பிரிக்கப்பட்டுள்ளனர். அதாவது செல்வந்தர், நடுந்தர வகுப்பினர், ஏழைகள் ஆவர்.

செல்வந்தர் எப்போதுமே மற்ற செல்வந்தர்களுடன் கூடிப் பழகவே விழைகிறார்கள். ஒரு தனவான் ஏழைகள் மத்தியில் தாராளமாகக் கலந்து

பழகுவது கிடையாது. அதை அவன் ஒரு இழிவுச் செயலாகவும் அல்லது சிரமமானது எனவும் கருதுகிறான். அதே சமயத்தில் பணக்காரர்களாக உள்ளவர்கள் மத்தியில் அவன் எளிதில் பழகுவதை விரும்புகிறான். அதே போல நடுத்தர வகுப்பினரும், ஏழைப் பிரிவினரும் ஒருவரோடொருவர் தாராளமாகப் பழக முடிவதில்லை. அவ்வாறு பழகுவதை ஒவ்வொரு பிரிவினரும் கூடாத ஒன்றாக எண்ணுகின்றனர்.

நடுத்தர வகுப்பைச் சார்ந்த ஒரு மனிதன் விடுதிகளிலும் திருமண நிகழ்ச்சிகளிலும், சமூக நிகழ்ச்சிகளிலும் தன்னைப் போன்ற நடுத்தர இனத்தவருடனும் தன்னையொத்த வசதி படைத்த மக்களோடும் தாராளமாகக் கலந்து பழகுவதையே விரும்புகிறான்.

ஏழை மனிதன் மற்ற ஏழைகள் மத்தியில் இருப்பதையே மன நிறைவாகக் காண்கிறான். மனிதர்கள் இதே ரீதியில் இயற்கையாக அமைந்த குழுக்களாகவும் இனங்களாகவும் வகுத்துக் கொண்டனர்.

போகப் போக இந்த மூன்று பிரதான குழுக்களை அவர்கள் செய்யும் தொழில்களுக்கு ஏற்ப எண்ணற்ற குழுக்களாக அமைத்துக் கொண்டனர்.

பணக்காரர்கள் தங்களை அரசர்கள், பிரபுக்கள், பிரதானிகள், துரைகள், ஆலை முதலாளிகள், வியாபாரிகள் என்ற வகையில் பிரித்துக் கொண்

டனர். நடுத்தர ஏழை வகுப்பினர் தம்மை ஆசிரியர்கள், அர்ச்சகர்கள், சிறு வியாபாரிகள், உழவர்கள், கொல்லர்கள், தச்சர்கள், வண்ணார் கள், குப்பை கூட்டுபவர்கள் போன்ற வகையில் பிரித்துக் கொண்டனர்.

உலகிலுள்ள பல்வேறு மதங்களில் இந்து மதம் ஒன்றுதான் நான்கு முக்கிய இனங்களாக பிரித்துக் கொண்டுள்ளன. அதாவது பிராமணர்கள் அர்ச்சகர் கள், க்ஷத்திரியர்கள் (அரசாள்பவர்கள் போர் வீரர்கள்), வைசியர்கள், (வியாபாரி அல்லது விவசாயி), சூத்திரர்கள் (உழைப்பாளிகள்) ஆவர்.

ஆரியர்கள் நாடோடி வாழ்க்கையை மேற் கொண்டிருந்தபோது அவர்களுடைய ஜனத் தொகை மிகவும் கொஞ்சமாக இருந்ததால் அவர் களிடையே ஜாதி முறை அமையவில்லை. அதனால் அப்போது அரசர்களோ, அரசாங்கமோ இல்லை.

பிறகு ஒவ்வொரு குடும்பத்தையும் அந்தக் குடும்பத்தில் மூத்தவரான ஆண் மகன் தலைமை ஏற்று நடத்தினார். அந்தக் குடும்பத்திலிருந்த எல்லா இளைய அங்கத்தினர்களும் தலைவருக்கு அடங்கி மரியாதை செலுத்தினர்.

பல்வேறு குடும்பங்களுக்கும் அததற்கான குடும்பத் தலைவன் இருந்தான். இந்த தலைவர்கள் அரசர்களும் சர்வாதிகாரிகளும் பெற்றிருந்த அந்தஸ்தைப் பெற்றிருந்தனர். பல குடும்பங்களும் பல தலைவர்களும் இருந்த போதிலும் எல்லாரும் அருகருகே வாழ்ந்து கலந்து பழகினர்.

ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்து அதன் மண் வளத்தையும் செழிப்பையுங் கண்டு அவர்களுடைய நாடோடி வாழ்க்கையை விட்டுக் கொஞ்சம் கொஞ்ச மாகக் குடியமைத்துக் கொண்டனர். பலதரப்பட்ட குடும்பங்களாக தங்களுக்கு உறவாக அமைந்த குடும்பக் குழுக்களாக அருகருகே வசித்தனர். கால ஓட்டத்தில் ஒவ்வொரு குடும்பத்தின் அங்கத்தினர் எண்ணிக்கையும்பெருகியது. பெரிய குடும்பங்களாக விரிந்தன. அதன் பிறகு சண்டை சச்சரவுகளும், போர்களும் மூண்டன. பலமுள்ள குடும்பங்கள், பல வீனமான குடும்பங்களை வெற்றி கொண்டு அடக்கி யாண்டன. நாளடைவில் வெற்றி கொண்டவர்கள் அரசர்களாகவும் சக்கரவர்த்திகளாகவும் பதவி ஏற்றனர். அந்த நிலையில்கூட ஜாதிப் பாகுபாடு நிலை பெறவில்லை. மேலோட்டமாக அது தலை நீட்டிக் கொண்டிருந்தது.

ஆரிய மக்கள் தொகை கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே வந்தவுடன் அவர்கள் பல்வேறு இராஜ்ஜியங்களை அமைத்துக் கொண் டார்கள். தேச வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் அறிஞர்கள் ஒன்றுகூடி மக்கள் தொகையை பல்வேறு ஜாதிகளாகப் பிரிப்பது அவசியம் என்று எண்ணினர். அதன் மூலம் அவர வர்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தையும் கலாசாரத் தையும்வாழ்க்கை முறைளையும் ஏற்று அந்தக் குறிப் பிட்ட திசையில் முன்னேற்றமடைந்து மொத்தத்தில் தேச நலனை வளர்க்க முடியும் என்றெண்ணினர்.

இந்த ஜாதிப் பிரிவினை விஞ்ஞான பூர்வமானதாக வும் இயற்கையின் அடிப்படையில் அமைந்ததாகவும் இருந்ததினால் எல்லாத் துறைகளிலும் தேசமானது ஓங்கி வளர்ந்து மகோன்னத நிலையை அடைய முடியும் என்ற நம்பிக்கையை அளித்தது. உதாரண மாக நமது பள்ளிகளில் நம்முடைய குழந்தை களுக்கு ஆரம்பக் கல்வியின்போது பல்வேறு பாடங் களைப் போதிக்கிறோம்.

உயர்நிலைப் பள்ளிக்குப் போனவுடன் மேல் படிப்புக்கு வேண்டிய சில குறிப்பிட்ட பாடங்களை அவர்கள் அறிவுக்கும் திறமைக்கும் பொருத்த முடையனவாகத் தேர்ந்தெடுத்துக் கற்றுத் தருகிறோம். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங் களில் மேல்படிப்புக்குத் தேவையான விசேஷப் பாடங்களை மட்டும் கற்றுத் தருவதால், அந்த மாணவர்களை சகலகலா வல்லுநர்கள் ஆக்கும் வகையில் ஆராய்ச்சிகளைச் செய்யவும் புதியவற்றை கண்டுபிடிக்கவும் வசதிகளைச் செய்து ஊக்குவிக் கிறோம். அதன் காரணமாகவே தற்போதைய கல்வி முறை பலதரப்பட்ட அறிவுத் துறைகளில் நல்ல முன்னேற்றத்தை அடைந்துள்ளன.

இதுபோன்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டதே பல சாதிகளாக வகுத்தும், மாபெரும் மன்னராகவும் ரிஷியாகவும் (ஞானி) இருந்த மனு அந்தப் பல்வேறு ஜாதியினருக்கும் அவரவர்களுக் கான கடமைகளை (தர்மங்களை) வகுத்தளித் தார்.

முதன் முதலாக இந்துச் சட்டம் வகுத்தளித்த பெரியவர் மனு ஆவார். நான்கு சாதிகளுக்கான தர்மத்தை (கடமையை) முடிவு செய்துஅளித்த மிகப்பெரிய சாசனமாக இன்றைக்கும் நிலவிவருவது மனுஸ்மிருதியாகும். அதாவது பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் ஆகிய நான்கு சாதியினர்களுக்கான தர்மங்களே அவை. மனு இதற்கும் மேலே ஒருபடி சென்று மனிதனுடைய வாழ்க்கையை நான்கு பகுதிகளாகப் பிரித்தார். அதாவது பிரம்மச்சாரி (மாணவன்), கிரகஸ்தன் (இல்லறத்தான்), வானப்பிரஸ்தி (ஓய்வு பெற்ற வாழ்வுடையவன்), சன்னியாசி, (துறவி) ஆகும். ஒவ்வொரு ஆசிரம முறையிலும் பின்பற்றுவதற்கான கண்டிப்பான விதிகளையும் ஒழுக்கமுறைகளையும் வகுத்துத் தந்துள்ளார்.

இந்த நான்கு சாதிகளிலும் பிராம்மண சாதிக்கு கல்வி போதிப்பது, தர்மத்தைப் பாதுகாப்பது, மத நெறியை ஒழுங்குபடுத்துவது ஆகிய கடமைகளைச் செய்ய வேண்டுமென விதித்துள்ளார். பிராம்மணன் தூய வாழ்க்கையை அதாவது ஒழுங்கு முறையையும் சுயகட்டுப் பாட்டையும் அனுசரித்து ஒழுகும் எளிய வாழ்க்கையை வாழ வேண்டும் என்ற விதியை வகுத்தளித்தார். அவர்கள் வேதங்களைக் கற்றறிந்து தர்மத்தைப் பரப்ப வேண்டும். அவர்கள் செல்வத்தைச் சேர்க்கக் கூடாது. மாறாக அனைத்தையும் துறந்த வாழ்வை மேற்கொண்டு பொதுப்படையான தெய்வீக அறிவை தகுதி வாய்ந்தமாணவர்களுக்குப்

போதிக்க வேண்டும். பிராம்மணர்கள் உண்மை வாழ்க்கையை மேற்கொண்டிருந்த காலத்தில் அவர்கள் ஆற்றல் மிகுந்திருந்தனர். எங்கு சென்றாலும் உயர்ந்த சிறப்புகளைப் பெற்றனர். மாமன்னர்களுங்கூட அவர்களிடம் ஆழ்ந்த மதிப்பு கொண்டிருந்தனர்.

க்ஷத்திரிய சாதியினர் நாட்டை ஆள்பவர்களாக இருந்தனர். நாட்டின் பாதுகாப்பையும், எதிரிகளிடமிருந்து காக்கும் பொறுப்பையும் அவர்களிடம் கொடுத்திருந்தனர்.

க்ஷத்திரிய வகுப்பினரே மாமன்னர்களாகவும், போர் வீரர்களாகவும் இருந்தனர். எதிரியோடு போரிடுதல், நாட்டையும் நாட்டு உடமையையும் பாதுகாத்தல், சட்டத்தையும் ஒழுங்கையும் பராமரித்தல்,அமைதி காத்து நாட்டை வளப்படுத்துதல்ஆகியவையே க்ஷத்திரிய குலத்தவரின் கடமையாக ஆயிற்று.

உழுது பயிர் செய்தல், வாணிபம் செய்தல், ஆடு மாடுகள் வளர்த்தல், நாட்டு வளத்தை மேம்படுத்திச் செழிப்பாக்க புதிய ஆதாரங்களைக் கண்டுபிடித்தல் போன்றவை வைசியரின் கடமைகளாகளாக்கப் பட்டன.

இந்த மூன்று உயர் சாதியினருக்குப் பணி புரியும் தொழில் சூத்திரர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது.

இந்த சாதி ஏற்பாடு நல்ல முறையில் வலுப் பெற்று அமைந்திருத்தது.

புராதன காலத்தில் எந்த இடத்தில் சண்டை மூளுமானாலும் க்ஷத்திரியர்களே அந்தப் போர்களில் ஈடுபட்டனர். மற்ற மூன்று குலத்தவரும் எந்தவிதத் தட்டுத் தடங்கலுமின்றி அவரவர்களுக்கு வகுக்கப் பட்டிருந்த கடமைகளைத் தொடர்ந்து செய்தனர். அதுபோல போர்க் காலங்களில் இந்த நாட்களில் நடப்பது போல் இல்லாமல் தேசத்தின் முழு நட வடிக்கையும் சீர் குலையாமல் நடந்து கொண்டி ருக்கும்.

நான்கு குலத்தவரும் அவரவருக்கான தர்மங் களை (கடமைகளை) ஒழுங்காகக் கடைப் பிடித்து வந்தபோது இந்திய நாடு வளம் பெற்று வாழ்ந்து பல்வேறு கலைத்துறைகளில் மகோன்னத முன்னேற்றத்தை அடைந்து செல்வம் கொழித்து உயர் நிலையை எட்டியது.

துவக்கத்தில் ஜாதி ஏற்பாடு கண்டிப்பானதாக இல்லை. பிறப்பினால் மட்டும் சாதி வகுக்கப்பட வில்லை. ஒருவருடைய திறமைகளும் அதற்கான அடிப்படையாகக் கருதப்பட்டது.

ஆன்மீகத்தில் உன்னத நிலையைப் பெற்ற ஞானியும், அறிஞனும், நன்றாகக் கற்றுணர்ந்த பேரறிஞனும் போற்றப்பட்டு உன்னத இடத்தில்

அமர்த்தப்பட்டு பிராம்மணன் என்றழைக்கப்பட்டு 'பிரம்மரிஷி' என்ற பட்டமும் அளிக்கப்பட்டான். கால ஓட்டத்தில் பல்வேறு சாதிகள் சீர்குலைந்து சுயநலம் மிகுந்து, சாத்திரங்களைத் தவறாகப் பொருள்படுத்தி, எல்லா வகைச் சூழ்ச்சிகளும் உட்புகுந்த காரணத்தால் பிறப்பைக் கொண்டே சாதி வகுப்பது என்ற முறை வழக்கில் வந்து விட்டது. அவற்றிற்காக வற்புறுத்தப்பட்டிருந்த மற்றெல்லா சட்ட திட்டங்களும் ஒதுக்கித் தள்ளப்பட்டன. ஆதி சாதி ஏற்பாட்டின் அடித்தளத்தில் ஊடுருவி இருந்த சித்தாந்தம் மனிதனின் பார்வையிலிருந்து முழுமையாக மறைந்து போயிற்று.

மற்ற இடங்களில் சாதி முறை இயற்கையாகவே எவ்வாறு வளர்ந்தன என்பதைப் பார்ப்போம். விளக்கத்திற்காக ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். ஒரு விவசாயிக்கு நான்கு மகன்கள் இருந்தனர். இந்த நான்கு பிள்ளைகளும் அறிவு நிலையிலும் மனப்போக்கிலும் ஒரே மாதிரி இல்லை. பல வழிகளில் அவர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்டே இருந்தனர்.

ஒருவருக்கு மதத்திலும், தத்துவத்திலும் மிகுந்த விருப்பம் இருக்கும்.

இரண்டாமவர் அரசியலிலும் மூன்றாமவர் வியாபாரத்திலும் ஆர்வமுடையவராக இருப்பார்.

நான்காமவர் புத்தி ஈனனாக இருந்தாலும் உடல் வலிமையுடையவராக இருப்பார். இயல்

பிலேயே அவர் உழைத்துப் பாடுபடுபவராக இருப்பார். இந்த நான்கு பிள்ளைகளும் அவர்களின் வாழ்க்கையிலும் உடைகளை அணிந்து கொள்வதிலும் உண்பதிலும் அவரவர்களுக்கான தனித் தனி வழிகளையே வளர்த்துக் கொண்டிருந்தனர்.

தத்துவவாதி இயற்கையாகவே எளிய, தூய, தியான வாழ்க்கையை மேற்கொள்வான். அவன் தன் சுவைக்கு ஏற்ற மக்களுடன் கலந்து பழகுவான். அவன் திருமணம் செய்து கொண்ட போதிலும் தன்னுடைய போக்குகளுக்கு உகந்த பெண்ணையே தேர்ந்தெடுப்பான்.

இரண்டாவது மகன் அரசியலில் ஈடுபட்டுள்ளதால் மாறுபட்ட தன்மையுடைய மக்கள் மத்தியிலே சுறுசுறுப்பான வாழ்வை மேற்கொண்டு உலா வருவான். அவனது வாழ்க்கைமுறை, சிந்தனைகள், உடை அணிதல் போன்றவை தத்துவ வாதி சதோதரனுடையதற்கு முழுவதும் மாறுபட்டிருக்கும். அவன் திருமணம் செய்து கொள்ளும்போது அவனுடைய சொந்த ரசனைகளுக்கு ஏற்ற வாழ்க்கைத் துணையையே தேர்ந்தெடுப்பான்.

மூன்றாவது மகன் பொருள் சேர்ப்பதிலேயே சுறுசுறுப்பாக இருப்பான். அவன் இலாபத்தை எதிர்பார்த்து அதற்கான திட்டங்கள் தீட்டி செல்வத்தைச் சேர்ப்பதற்கான வழிவகைகளைக் கண்டுபிடிப்பதில் ஈடுபடுவான். அவனுடைய வாழ்க்கை முறை,

உடை அணிதல், உணவு சாப்பிடுதல், ஆகிய அனைத்துமே தன் சகோதரர்களின் சுபாவத்திலி ருந்து மாறுபட்டதாகவே இருக்கும். இயல்பிலேயே அவன் ஒரு உலோபி. வாழ்க்கையில் பரந்த நோக்கு இல்லாதவன்.

அவன் திருமணம் செய்து கொள்ளும்போது அவன் ரசனைக்கேற்றவளையே மனைவியாகத் தேர்ந்தெடுக்கிறான்.

நான்காவது மகன் உடலுழைப்பை மேற் கொண்டு மண்ணிலும், சேற்றிலும் பாடுபட்டு, உழைத்து வெயிலென்றும் மழையென்றும் பாராமல் பாடுபடுவதால் தன்னுடைய மற்ற சகோதரர்களைப் போலத் தூய்மையாக இருக்க முடிவதில்லை.

நல்ல தூய ஆடைகளை அணிந்து கொள்ளவும் அவன் செல்வ நிலை இடம் தராது. அவன் சகோதரர்களைப் போல எல்லா நேரங்களிலும் சுத்தமாக இருக்க வேண்டுமென்றாலும் அவனால் முடிவதில்லை.

அவன் தனக்கான மனைவியைத் தேர்ந் தெடுக்கும்போது, தன்னோடு சேர்ந்து உழைக்கக் கூடிய தன் தொழிலுக்கேற்றவளையே தேர்ந் தெடுப்பான்.

இது போன்ற எளிய நிதரிசனமான உண்மை நிகழ்ச்சிகளையே நாம் எங்கும் காண்கிறோம்.

மாறுபட்ட நோக்கங்களைப் பெற்று மாறுபாடான ரசனைகளையுடைய தத்தம் மனைவி மக்களோடு கூடி தனித்தனியே வாழும் இந்த நால் வகையினரும் ஒருவரோடொருவர் எல்லா சமயங்களிலும் தாராளமாகக் கலந்து பழக மாட்டார்கள். அவ்வாறு ஏதோ சில நேரங்களில் அவர்கள் கலந்து பழகுவதாயிருந்தாலும் அது அவர்களுடைய பெற்றோர்களின் ஆயுள் பரியந்தமே அப்படி நடந்து கொள்வார்கள்.

தங்களுடைய தாய் தந்தையர் இறந்த பிறகு இந்த நான்கு பிள்ளைகளும் அவரவர் மனைவி குழந்தைகளுடன் சம்பாத்தியத்திற்காக வெவ்வேறு இடங்களில் போய்க் குடியேறி விடுவார்கள். சில ஆண்டுகள் கழிந்த பின்னர் முன்போலக் கலந்து பழக விரும்ப மாட்டார்கள்.

அவர்களுக்குள் எவ்வளவு மனமாற்றங்கள் இருந்தாலும், இந்தக் குடும்பங்களின் முதல் தலை முறையினருக்கு மட்டும் அவர்கள் அனைவருமே ஒரே தந்தை தாய் வழியில் வந்த வம்ச வழியினர் என்பதையும், ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள் என்பதையும் அறிந்திருப்பர்.

ஆனால் சில தலை முறைகளுக்குப் பிறகு அந்தப் பாரம்பரியத்தைச் சேர்ந்தவர்கள் ஆதியில் அவர்களை ஈன்ற மூல கர்த்தாக்களை அடியோடு மறந்து விடுகிறார்கள். ஆதி கர்த்தாவைத் தொடர்ந்து

வந்த வம்ச வழியினர் தங்களுக்குள் நால்வகைச் சாதியினராகப் பெருகிப் பிரிகின்றனர்.

சாதி ஏற்பாடே இல்லாத தேசத்திலுங்கூட தந்தை தாய் வழி வந்த வம்சாவழியினர் பல்கிப் பெருகிய போது அவரவர் விருப்பத்திற்கேற்ப தங்களுக்குள் பல்வேறு சாதியினராகப் பிரிந்து வாழ்ந்தனர். உலகிலுள்ள பல்வேறு நாடுகளில் இதைக் கண் கூடாகக் காண்கிறோம்.

மக்கள் நான்கு முக்கிய சாதிகளாகப் பிரிந்து போகாத தேசம் வளர்ச்சி பெறாமலிருந்த ஆரம்ப கால கட்டத்தில் இந்தியாவிலும் அவரவர் ரசனை, போக்கு, தொழில் போன்றவைகளுக்கு உகந்த வகையிலேயே சாதிகள் இருந்து வந்தன.

மகரிஷி மனு என்பவர் பல அறிஞர்களின் உதவியுடன் பூராதேசத்தையும் நான்கு முக்கிய பிரிவுகளாக (சாதிகளாக்க) ஏற்பாடு செய்தார்.

அவரவர் குணம், கர்மம் (பாரம்பரியமாக வந்த குணம், தொழில்) ஆகியவற்றை அடிப் படையாக வைத்து அந்தந்த சாதிக்கான தொழில் களைக் கட்டாயமாக்கினார். இந்த நால்வகைக் குழுக்களைச் சேர்ந்தவர்களுடைய பிள்ளைகளும் பெண்களும் அந்தந்த சாதிக் குழுவிற்கான கடமைகளை ஏற்றுக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதும் கட்டாயமாக்கப்பட்டது.

சாதாரணத் திறமை படைத்தவர்கள் அவர்களுக்கான தர்மத்தைச் (சாதிக்கடமையை) செய்து வந்தனர்.

பரவலாக இருந்த அளவற்ற திறன் படைத்த ஆண்களும் பெண்களும் போற்றிப் புகழப்பட்டு பிராமணர்கள் என்ற உயர்ந்த ஸ்தானத்தை அவர்களுக்கு அளித்தனர். இதை ருசுப்பிப்பதற்கான சான்றுகள் பல உண்டு.

பிறப்பினால் க்ஷத்திரியனாக இருந்த விசுவாமித்திரர் கடும் தவம் புரிந்து (விரதமேற்று) நிர்விகல்பசமாதி நிலையை எய்தினார். அதன்பிறகு அவருக்கு பிரம்மரிஷி என்ற பட்டம் பட்டது.

ரிஷி வால்மீகி ஆரம்பத்தில் ஒரு காரர். ஆனால் அவர் ஞான நிலை அவரைப் பிரம்மரிஷியாக அமர்த்தினர்.

நாரதர் ஒரு வேலைக்காரியின் மக பெற்றிருந்த மேலான ஞானத்தெளிவு, யறாத கடவுள் பக்தி ஆகியவற்றின் அவருக்கு தேவரிஷி என்ற பட்டம் பட்டது.

வியாசர் ஒரு மீனவருடைய மகள் பிறந்தவர். ஆனால் அவர்தான் தனது துணை கொண்டு நான்கு வேத பதினெண் புராணங்களையும் நூல்

அமைத்துத் தந்தார். அதைத்தொடர்ந்து அவருக்கு ஜகத்குரு (பரம ஆசான் அல்லது உலகின் ஆசான்) என்ற பட்டம் அளிக்கப் பட்டது. இன்றைக்கும் நான்கு சாதிகளையும் சேர்ந்த அனைவருமே வியாசரை வியாச பவுர்ணமி தினத்தன்று (இதைப் பொதுவாக குரு பௌர்ணமி என்பர்) போற்றி வணங்குகின்றனர்.

அதனால் ஆரம்பத்தில் சாதி முறை கட்டாய முறையாக இல்லை. இந்தச் சாதி ஏற்பாட்டின் உண்மை என்ன வென்பதை அப்போதிருந்த மக்கள் நன்றாகப் புரிந்து வைத்திருந்தனர். அதனால் ஒவ்வொரு சாதியினரும் அவரவர்களுக்கான சுதர் மத்தைக் கடைப்பிடித்து மற்ற சாதிக் குழுவினர் களோடும் நேச பாவத்துடன் பழகி வாழ்ந்தனர்.

கீதையில் கிருஷ்ண பகவான் கூறுகிறார் (அத்தியாயம் III. சுலோகம் 35):

"நிறைவுடன் இல்லாது போனாலும் ஒரு வருடைய சொந்த தர்மமே, நிறைவுடன் செய்யும் பிறர் தர்மத்தை அனுஷ்டிப்பதைவிட மேலானது. சொந்த தர்மத்தைக் கடைப் பிடிப்பதால் இறப்பே நேரிடினும் அதுவே சிறந்தது. பிறருடைய தர்மத் தைக் கடைப் பிடிக்கும் போது அச்சம் வந்து சேருகிறது."

'ஒரு குறிப்பிட்ட சாதியில் அல்லது குடும் பத்தில் பிறந்து விடுவதால் மட்டுமே மோட்சம்

கிடைத்து விடுவதில்லை' என்ற உண்மை அந்த நாட்களில் இருந்தவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ஒருவன் தனது சுய தர்மத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்து, தனது கடமைகளைச் சரியானபடிச் செய்து வந்து, சுயக்கட்டுப்பாடு மிகுந்த தூய எளிய வாழ்வை மேற்கொள்வதால் மட்டுமே ஞானம் சித்திக்கும் என்பதையும் அந்த நாட்களில் வாழ்ந் தவர்கள் அறிந்திருந்தனர்.

மேலும் அவர்கள் வாழ்வின் நால்வகைக் குறிக்கோள்களான தர்மம் (அறநெறி), அர்த்தம் (செல்வம்), காமம் (இன்பம் அனுபவித்தல்), மோட்சம் (விடுதலை) என்பனவற்றையும் புரிந்து வைத்திருந்தனர்.

தூய தெய்வீக நெறியைக் கடைப் பிடித்து வாழ்ந்தால் எந்தச் சாதியாரும் மோட்சத்தை எய்தலாம்.

ஒரு குறிப்பிட்ட சாதியில் பிறந்து விடுவதால் மட்டுமே ஒரு மனிதனை அது தூய்மையாள னாகவும், புனிதமானவனாகவும் செய்து விடாது; செய்யவும் முடியாது. உண்மையிலேயே ஒருவன் குறிப்பிட்ட சாதியில் பிறந்து விடுவதாலோ, குறிப் பிட்ட ஒரு தொழிலைச் செய்வதாலோ மட்டுமே மோட்சம் கிடைத்து விடுவதில்லை. தூய ஒழுக்கம் மிக்க வாழ்வினாலேயே அது சித்திக்கும்.

ஒரு தொழிலைச் செய்யும்போதும் தருமத்தைச் செய்யும் போதும் உள்ளார்ந்த குறிக்கோளுடனும் உண்மையான ஈடுபாட்டுடனும், அதைத் செய்தால் தான் அதற்கு மதிப்பே ஒழிய வெளிக்கு அவ்வாறு செய்தால் அதற்கு உண்மையான பலன் கிட்டாது.

இரண்டு நபர்களை எடுத்துக் கொள்வோம். ஒருவர் அதில் குருக்கள்; மற்றவர் குப்பை கூட்டு பவர்.

வழக்கம்போல குருக்கள் கோயிலுக்குச் சென்று நம்பிக்கை இல்லாத நிலையில் பார்ப்பவர்கள் மெச்சிக் கொள்வதற்காக கடவுளைத் தொழுது விட்டு வருகிறார்.

ஆனால் குப்பை கூட்டுபவர் குப்பை சேர்ந்து விட்ட தெருக்களையும், துர்நாற்றமிக்க சாக்கடை களையும் மிகுந்த அக்கறையோடும், கடவுளிடம் முழு நம்பிக்கை வைத்தும் துப்புரவு செய்கிறார். அந்த வேலை செய்யும்போது அது ஆண்டவனுக் காகச் செய்யும் வேலை என்றும், தனது தொழி லால் விளையும் விளைவுகளைத் தனது போற்று தலுக்குரிய ஆண்டவனுக்கு அர்ப்பணித்தும் அதைச் செய்து முடிக்கிறார்.

இந்த இருவரில் யார் கடவுள் அரவணைப்பைப் பெறக்கூடியவர்? அவருடைய ஆசிகளுக்கு உரித் தானவர் யார்? இதில் யாருடைய பணி போற்று தலுக்குரியது?

குப்பைக் கூட்டுபவர்தான் கடவுள் அன்புக்குப் பாத்திரமானவர். அவர் பணியே குருக்களின் பணியைவிடச் சிறந்தது என்பதையும் திடமாகச் சொல்லலாம்.

அதனால் ஒருவர் பிறப்பினால் பிராம்மணனாகவோ, க்ஷத்திரியனாகவோ, வைசியனாகவோ அல்லது சூத்திரனாகவோ இருக்கக்கூடும். ஆனால் அவர் மோட்சத்தை அடைய முக்கியமானவையாக உள்ளவை செய்யும் காரியத்தில் முழு ஈடுபாடு, இதயத்தூய்மை, பணியில் முழு அக்கறை, மாசு மருவற்ற தூய அன்பு போன்றவையே.

இது தொடர்பாகக் கீதையில் கிருஷ்ண பகவான் பின்வருமாறு கூறுகிறார்:

"செய்யும் தொழிலை ஆராதனையாக பாவித்துச் செய்தல் வேண்டும். தான் செய்யும் தொழிலிலும், அதன் விளைவிலும் முழுப்பற்றுதல் வைக்கக் கூடாது. தொழிலுக்காகவே தொழில் என்ற வகையில் செய்யும் ஒவ்வொரு தொழிலையும் செய்தல் வேண்டும்.

''தனது சுதர்மமாக உள்ள (குலத் தொழிலாக உள்ள) எந்தத் தொழிலையும் விருப்பு வெறுப்பின்றிச் செய்ய வேண்டும்.

''அதே சமயத்தில் தன் கடமையில் ஓர் அணுவளவேனும் தவறக் கூடாது. இந்தக் குறிக்கோளை மனத்தில் நிறுத்தி பல்வேறு சாதியினரும் அவரவர்களுக்கான தர்மங்களை (சாதி ஏற்பாட்டுக்கான

சாத்திர விதிகள்) அனுசரித்து தங்கள் கடமைகளைக் குற்றங்களில்லாமல், சிறிதும் சுய நலமின்றிச் செய்வார்களாயின் பேரமைதியையும், ஆனந்தத்தையும், ஆன்ம விடுதலையையும் பெறலாம்.''

**பிறப்பினால் வரும் சாதி:**

கட்டாய சாதி முறை இந்தியாவில் முதலில் ஏற்படுத்தப்பட்டபோது பல்வேறு சாதியினர் தத்தம் கடமைகளைப் பொறுப்புடன் செய்தாக வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. அரசாங்கமும் அதையே அமல் படுத்தியது.

அந்த முறையில் பல்வேறு மக்களும் அவரவர்களுக்கான கடமைகளைப் பணிவுடன் ஏற்றுச் செய்து வந்தார்கள். அதனால் தேசத்தில் வளர்ச்சி ஏற்பட்டது; வளம் கொழித்தது.

ஆரம்ப கட்டங்களில் மூன்று உயர் மட்ட சாதிப் பிரிவினர்களிடையே அதிகப் பாகுபாடு இல்லாமல் இருந்தது.

இந்தியாவில் ஆதியில் ஆரியர்களால் வெற்றி கொள்ளப்பட்டு ஆளப்பட்ட ஆதிவாசிகளிடமிருந்தே சூத்திர சாதியினர் தோன்றினர். இவர்கள் அடக்கி வைக்கப்பட்டு, மற்ற மூன்று உயர் சாதியினருக்குள்ள உரிமைகள் அளிக்கப்படாமலிருந்தது.

மனு ஸ்மிருதியின்படி பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய சாதிகளைச் சேர்ந்தவர்களுக்குப் பிறக்கும்

ஆண் பிள்ளைகள் பூணூல் அணிந்த பிறகு (பூணூல் அணிவிழாவிற்குப் பிறகு அவரை'திவிஜன்' என் பார்கள். அதாவது இரண்டாவது பிறவியுடையவன் என்பர்) அவர் குருவுடன் (ஆசானுடன்) தங்கி வேதங்களைக் கற்க வேண்டும். இருபத்தைந் தாவது வயது நிறைவு பெறும்வரை அவ்வாறு பயில வேண்டும். அதன் பிறகு அவர்கள் விரும்பி னால் இல்லற வாழ்க்கையை ஏற்கலாம். பிரம்மச் சரிய நெறியைப் பின்பற்ற விரும்புபவர்கள், வாழ் நாள் பூராவும் கற்பு ஒழுக்க நெறியை ஏற்று வாழ்வார்கள்.

உயர் சாதிப் பிரிவினரின் வாழ்க்கை முறையை நான்கு பகுதிகளாக்கினர். அதாவது பிரம்மச்சாரி (கற்பொழுக்க நெறியுடன் கூடிய மாணவப் பருவம்) கிருகஸ்தன் (இல்லறமேற்று நடத்துதல்), வானப் பிரஸ்தன் (உலகைத்துறந்த தனிமை நிலை), சந்நியாசி (பற்றற்ற நிலை) ஆகியவையே அவை.

சூத்திர சாதியினருக்கு இந்த வசதிகள் எதை யும் ஏற்படுத்தித் தரவில்லை. ஒரு சூத்திரனுடைய கடமை மேல் சாதியினருக்கு சேவை செய்து கொண்டிருத்தல் என்று கூறப்பட்டது. அவன் வேதங்களைப் படிப்பதும் மறுக்கப்பட்டது. மேலும் அவன் வானப்பிரஸ்தியாவதற்கோ அல்லது சந்நியாசியாவதற்கோகூட உரிமை கிடையாது.

இதிலிருந்து நமக்குப் புலனாவது என்ன வெனில் மூன்று உயர் சாதியினரும் ஆரியர்

களாகவே இருந்ததால் அவர்களுக்கென தனிப் பட்ட உரிமைகளை ஒதுக்கிவைத்துக் கொண் டார்கள்.

பல தலை முறைகளுக்குப் பிறகு இந்த மூன்று உயர் சாதியினரும் அவரவர்களுக்கான குறிப்பிட்ட தர்மத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்ததால் தனிப்பட்ட தனித்தனி பழக்க வழக்கங்கள் அந்தந்தச் சாதியினரிடம் வலுத்துக் கொண்டே வந்து விட்டன. அதனால் அவர்கள் மூன்று சாதியினரிடமும் பொது வானதாக முதலில் இருந்த பழக்க வழக்கங்கள், அன்றாட வாழ்க்கை முறைகள் அனைத்துமே முழு மாற்றம் பெற்று விட்டன. மூன்று வெவ்வேறு அமைப்புகளாக உருவாகி விட்டன.

இந்த முறையில் கால ஓட்டத்தில் இந்த மூன்று உயர் சாதியினருங்கூட அவர்களுக் குள்ளேயே ஒருவரோடொருவர் கலந்து பழகவும், விருந்துண்ணவும், பெண்கொடுத்து வாங்கவும் மிகவும் சிரமமாகிவிட்டது.

## சாதியும் பரம்பரையும்

முன்பே நாம் விளக்கியிருப்பதைப் போல சாதி ஏற்பாடு அவ்வளவு கண்டிப்பாக இல்லாத கட்டத்தில் இந்திய மக்கள் அவர்களுக்கே உரித் தான சாதிகளை அவர்களுடைய ரசனைகளுக்கும் போக்குகளுக்கும் ஏற்ப வகுத்துக் கொண்டனர்.

ஆனால் சாதி ஏற்பாடு கட்டாயமாக்கப்பட்டு அறுதி செய்யப்பட்டவுடன், ஒரே தகப்பனுக்குப்

பிறந்த பிள்ளைகள் மாறுபட்ட ரசனைகளும், திறமைகளும் பெற்றிருந்தாலுங்கூட அவர்களுடைய தந்தை செய்த தொழிலையே அவர்களும் செய்ய வேண்டும்.

ஒரு குடும்பம் சில தலைமுறைகள்வரை ஒரு குறிப்பிட்ட தொழிலைக் கடைப்பிடித்துச் செய்தால், இயல்பிலேயே அந்தக் குறிப்பிட்ட தொழிலில் சில நூதன நுட்பத் திறன்களைப் புகுத்தும் ஆற்றல் விளைந்து, பரம்பரைத் தொழிலாக அதைச் செய்து வருவதால் அந்த குடும்ப வாரிசுகள் தொழிலில் கைதேர்ந்த விற்பன்னர்களாகி விடுகின்றனர்.

இதை விளக்குவதற்காக ஓர் உதாரணத்தை இங்கே கூறுவோம்.

பத்து வயதுடைய இரண்டு சிறுவர்களை எடுத்துக்கொள்வோம். அதில் ஒருவன் ஒரு கிராமத்தில் விவசாயப் பண்ணையில் வேலை செய்யும் அந்த ஊர் விவசாயியின் மகன்

மற்றொரு சிறுவன் நகரத்தில் வாழும் ஒரு டாக்டரின் மகன்

விவசாயிக்குப் பிறந்த சிறுவன் தன் பெற்றோர்களுடன் கூடவே இருக்கும் பழக்கத்தால் பயிர் நடுவது, எருவிடுவது, தண்ணீர்ப் பாய்ச்சுவது போன்ற நுட்பங்களை எளிதில் கற்றுக்கொள்கிறான். மேலும் பல்வேறு மரம், செடி, கொடிகளின் பெயர்களையும் தெரிந்து கொண்டுள்ளான்.

ஆனால் நீங்கள் அவனை ரேடியோ, சினிமா, போன்றவற்றைக் குறித்துக் கேட்டால் அது அவனுக்குக் கண்ணைக் கட்டி காட்டில் விட்ட மாதிரி இருக்கும். அதே சமயத்தில் டாக்டர் மகன் முக்கிய மருந்துகளின் பெயர்களைக் கூறும் ஆற்றல் பெற்றிருப்பான். ரேடியோவைப் பற்றியும், டெலிபோனைக் குறித்தும், இது போன்ற அவனறிந்த பலவற்றைப் பற்றியும் எடுத்துப் பேசுவான். ஆனால் தாவர வகைகள், பயிர்வகைகள் குறித்துக் கூற அவன் இருட்டறையில் விட்டமாதிரித் திகைப்பான்.

அதுபோலவே ஒரு பிராம்மணனுடைய மகன் மதம், வழிபாடு போன்றவற்றில் எளிதில் பழகி விடுகிறான்.

ஓர் இளவரசன் எப்படி கட்டளையிடுவது என்பதையும், பொது இடங்களில் ராஜரீகமாக எந்த உடையில் எப்படித் தோற்ற மளிக்கவேண்டும். என்பதையும் தன் பெற்றோர்களிடமிருந்து தெரிந்து கொள்கிறான்.

ஒரு வியாபாரியின் மகன் ஒரு பொருளை வாங்கி விற்று லாபம் சம்பாதிப்பது எப்படி என்று எளிதில் கற்றுக் கொள்கிறான்.

ஆதலின் சாதி ஏற்பாட்டை ஏற்படுத்தி அதைக் கட்டாயமாக்கிய நமது சட்டமேதை (மனு) நாட்டின் செல்வச் செழிப்புக்கும், பல்வேறு துறைகளின் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியுள்ளார்.

பிராம்மண வகுப்பினர் தங்களுக்கான சுதர் மத்தை (சாதிக்கடமை) பல தலை முறைகள் காலம் காலமாகத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்ததால் உயர்ந்த தத்துவத்தை வேதங்களாகவும, வேதாந்த மாகவும் உலகுக்கு ஈந்தனர்.

ஒன்றோடொன்று இணைந்து போகக்கூடிய மகோன்னதமான இந்த தத்துவத்தையும், மதத் தையும் நிறுவியதோடு கூடவே அவர் புதிய கண்டு பிடிப்புகளாக ஆயுர்வேதம் (மருத்துவத் துறை), கணிதம், வரைகணிதம் (ஜாமெட்ரி) எண்கணிதம் (அல்ஜீப்ரா), வானசாத்திரம் போன்ற வற்றையும் வகுத்தளித்தனர்.

க்ஷத்திரியர்கள் போர் முறை விஞ்ஞானத்திலும் நிர்வாகத் துறையிலும் முன்னேற்ற மடைந்தனர்.

வைசிய வகுப்பினர் வியாபாரத்திலும் அயல் நாட்டு வாணிபத்திலும் நல்ல முன்னேற்றத்தைப் பெற்று நாட்டின் செல்வ வளத்தை பெருக்கினர்.

ஆரம்ப காலங்களில் பல்வேறு ஜாதிகளைச் சேர்ந்த மக்கள் கடுமையாகவும் உண்மையாகவும் உழைத்து நாட்டை வளப்படுத்தினர். பல தலை முறைகளுக்கு நாட்டை பிராம்மண ஆதிக்கமே ஆட்சி புரிந்தது.

ஆனால் நமது தேசம் அளவு கடந்த அலட் சியப் போக்குடன் சுகபோகங்களில் திளைப்பதில் கவனம் செலுத்தினர்.

பிராமணர்கள்கூட எளிய வாழ்க்கை, உயரிய நோக்கம் போன்ற இலட்சியங்களை மறந்து காமத்துக்கும் பொன்னுக்கும் பலியாயினர். இந்த வீழ்ச்சியின் விளைவாக வேதங்களின் ஞானகாண்டம் (வேதங்களில் அல்லது உபநிடதங்களில் உள்ள ஞான போதனைப்பகுதி) புறக்கணிக்கப் பட்டது. வேதங்களின் கர்மகாண்டத்திற்கு (தெய்வீக காரியங்களை விளக்கும்பகுதி) முக்கியத்துவம் தரப் பட்டது. அதன் விளைவாக யாகங்களும், யக்ஞங்களும் (வேள்வித் தீ வளர்த்தல்) நடைமுறையாக்கப்பட்டன. நாட்டிலிருந்த அரசர்களும் செல்வச் சீமான்களும் சுயக்கட்டுப்பாட்டையும் மன ஒருமைப்பாட்டையும் பயில்வதற்குப் பதிலாக பணத்தைச் சிலவழித்து யாகங்களையும் யக்ஞங்களையும் செய்வதை, எளிய மார்க்கத்தில் சொர்க்கத்தை அடையும் பயணச் சீட்டாகக் கருதினர்.

பிராம்மணர்கள் ஏராளமான செல்வத்தைக் குவித்து செல்வந்தர்களாகவும் சுயநலமிகளாகவும் மாறி கீழ்த்தரமான வெட்கித் தலை குனியக் கூடிய வாழ்க்கையை வாழ்ந்தனர்.

உண்மையில் இவர்கள்தான் அவர்களுடைய சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப சாத்திரங்களைத் தவறாகப் பயன்படுத்தி மக்கள் கூட்டத்தை பாதை மாற்றி விட்டு விட்டார்கள். இந்த வகையில்தான் ஆதி சாதி ஏற்பாட்டின் சாரம் அடியோடு சுண்டிப்போய் மனித இனத்தின்

பார்வையிலிருந்தே மறைந்து விட்டது. நாட்கள் செல்லச் செல்ல இதே ஜாதி ஏற்பாடு பெரிய நரக வேதனையாக மாறி விட்டது.

பிராம்மண ஆதிக்கம் வீழ்ச்சி பெற்ற உடன் பல தலைமுறைகள்வரை க்ஷத்திரிய ஆதிக்கம் மேலோங்கி இருந்தது. காலப் போக்கில் அந்த ஆதிக்கமும் மறைந்து போய், அந்த இடத்தை வைசிய ஆதிக்கம் பிடித்துக் கொள்ள வழி வகுத்தது.

இப்போது அந்த வைசிய ஆதிக்கமே பல தலை முறைகளாக ஆட்சி புரிந்து வந்தாலும் அதுவுங் கூட இப்போது முடிந்துபோகும் அளவுக்கு வந்திருக் கிறது.

சூத்திர ஆதிக்கம் மேலோங்குவதற்கான காலம் இப்போது கனிந்து வந்திருக்கிறது. அது நம் கண் களுக்கும் புலனாகிக் கொண்டிருக்கிறது.

இந்த ஆதிக்கம் பிரமிக்க வைக்கும் உயரத்தை எட்டியதுமே அது எல்லாக் கலாசாரங்களையும் அழித்துவிடப் போகிறது. இந்த ஆதிக்கம்கூட காலப் போக்கில் ஒரு முடிவுக்கு வந்தேயாக வேண்டும். அதன் பிறகு மீண்டும் உலகின் தோற்றம் புதிதாக உருவெடுக்கும்.

ஒருவனுடைய சாதியைக் கண்டுகொள்ள வேண்டுமானால் நாம் மூன்று விஷயங்களைப்

பார்க்க வேண்டும். அதாவது அவனுடைய பாரம் பரியம், சகவாசம், திறமை ஆகும்.

ஒரு குழந்தை தன் பெற்றோரிடமிருந்து சில நல்லதும் தீயதுமான பண்புகளைப் பெறுகிறது. இவ்வாறு பெறப்பட்ட பாரம்பரியப் பண்புகள் ஓரளவிற்கு ஒருவருடைய குணாதிசயத்துக்கு உதவவோ கெடுக்கவோ கூடும்.

இரண்டாவதாக ஒரு மனிதன் அவனுடைய சக வாசங்களுக்கு ஏற்பத் தன் குணத்தை வளர்த்துக் கொள்கிறான். சகவாசம் சரியானபடி அமைந்து விடுமானால் பாரம்பரியக் குணங்களைக்கூட அது மாற்றி விடும்.

கடைசியாக ஒருவனிடம் இயல்பிலேயே உள்ள திறனும் திறமைகளும் அவனுக்கு மிகவும் துணை புரிகின்றன.

ஒரே பெற்றோருக்குப் பிறந்த குழந்தைகள் ஒரே மாதிரியான பாரம்பரியத்தையும் சகவாசத்தை யும் பெற்றிருந்தாலுங்கூட அவர்களுடைய பண்பும், ரசனைகளும், போக்குகளும் வெவ்வேறு வழிகளில் வளர்ச்சியடைகின்றன. இதற்குக் காரணம் அவர் களுக்கு இயற்கையில் கிடைத்த — முற்பிறவியில் இருந்து வந்த திறமை என்னும் வரப்பிரசாதம். அதாவது கர்ம பலனால் (முற்பிறவியின் விளைவு களால்) ஏற்படும் விளைவுகளாகும்.

## அனைத்துக்கும் மூலகாரணம் மனம்

பல பெயர்களும், வடிவமைப்புகளும் உடைய இந்த அகிலம் (பிரம்மாண்டம்) மனம் பிறந்தபோது அதோடு கூடவே பிறந்து வந்தது.

உங்களுடைய மனம் மறையும்போதே அது உங்கள் பார்வையிலிருந்து கரைகிறது அல்லது மறைகிறது.

விழிப்பு நிலையில் இந்த அகிலம், தோற்றத்திற்கு உண்மையானதாகவே தோன்றுகிறது. நீங்கள் தூங்கியதும் கனவு நிலையில் இந்த விழிப்பு நிலை உலகம் முழுவதுமே உங்களுக்கு உண்மையானதாகத் தோன்றுகிறது.

இந்தக் கனவு உலகம் பொய்யானது என்று சொன்னாலும் அதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். கனவில் காணும் காட்சிக்கு ஏற்ப நீங்கள் அழுகிறீர்கள் அல்லது சிரிக்கிறீர்கள்.

எந்தவிதக் கனவுகளும் தோன்றாத ஆழ்ந்த உறக்க நிலைக்குப் போனவுடன் கனவு நிலை உலகையும், அதே போல விழிப்பு நிலை உலகையும் கூட நீங்கள் அடியோடு மறந்து விடுகிறீர்கள். எதனால் இப்படி நடக்கிறது?

மூளை மையத்திலிருந்து மனம் விலகிவிடுவதால் இந்த நிலை ஏற்படுகிறது. ஆழ்ந்த உறக்க நிலையில் மனம் கண நேரத்திற்கு ஆன்மாவில் (தனிப்

பட்ட மனித உயிர் அல்லது ஜீவன்) போய்க் கலந்து இருக்கிறது.

இந்தத் தினசரி அனுபவத்திலிருந்து உனக்குத் தெரியும் இந்த அகிலம், உன் மனத்தால் விளையும் தோற்றமே என்பது புலனாகிறது. மனம் இல்லாத போது உலக அனுபவம் உன் பார்வைக்குக் கிடைப்பதில்லை.

ஒருவன் முதன் முதலாகப் பிறக்கும்போது அவன் ஆட்டத்தை எந்தவிதக் கர்ம பலனும் (முற்பிறவி விளைவுகள்) இன்றித் துவக்குகிறான். இதை விளக்க ஒரு உதாரணம் தரப்படுகிறது. சுயேச்சையாகப் பறக்கும் ஓர் தேனீ தோட்டத்தில் சுதந்திரமாகப் பறந்து திரிகிறது. அந்தத் தோட்டத்திலுள்ள மாளிகையின் கதவு அகலத் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. வாயில் வழியைப் பார்த்த அந்தத் தேனீ மாளிகையின் அகன்ற அறைக்குள் புகுந்து விடுகிறது.

அதன் பிறகு அது வெள்ளை நிறச் சுவர்களைப் பார்த்து அதையும் ஒரு வழி என்று நினைத்து அந்த சுவரை நோக்கிப் பறந்து சென்று தன் தலையை அதில் மோதிக் கொண்டு குழம்புகிறது.

வாயிற்கதவு அகலத் திறந்தபடி இருந்தாலும் குழப்பம் விளைந்ததால் அந்தத் தேனீ சாளரத்திலிருந்து சுவருக்கும் சுவரிலிருந்து சாளரத்திற்குமாக ஓடியாடி மோதி விழுந்து அந்த அறைக்குள்ளேயே இறந்து போகிறது.

அது போலவே ஓர் உயிர் சுதந்திரமானதாக இருப்பினும் மனம் ஐம்புலன்களுடன் பற்றுக் கொள்வதால் புலன்கள் அடிக்கடி மனத்தை அதன் போகப் பொருள்களிடம் வெளியே இழுத்துச் செல்கின்றன.

இவ்வாறு அடிக்கடி வெளியே ஓடிப்போகும் மனம் பலவீனமடைகிறது. அழுக்கேறி விடுகிறது. அதனிடம் மூடத்தனம் மிகுந்து விடுகிறது. அப்பழுக்கில்லாத அதன் தூய தன்மையை இழந்து விடுகிறது. இதே ரீதியில் மனம் கர்மத்தையும், கர்ம பலனையும் (செய்கையையும் அதன் விளைவுகளையும்) உண்டாக்கிக் கொள்கிறது.

ஆன்மா (ஜீவன் அல்லது உயிர்ச்சார உணர்வு) வெளிப் பொருள்களைக் கண்டு உணர்வதற்கான கருவியாக இருப்பது மனம்.

ஆன்மாவின் (ஜீவன் அல்லது உயிர்ச்சார உணர்வு) உணர்வுக் கருவியாக இருப்பது மனம். அது சூக்கும சக்தியாக இருக்கிறது. அதனிடத்தில் உயிர் உணர்வும் இருக்கிறது. அதனால் அது செய்வது அதற்குத் தெரியும்.

இயந்திர சக்திக்கு உயிர்ப்பு கிடையாது. அந்த இயந்திர சக்திக்கு உயிர்ப்பு ஒரு காரணமாக மட்டுமே இருக்கிறது. அதனாலேயே இயந்திர சக்திக்கு அதுஎன்ன செய்கிறது என்பது புரியாது. இதுவே மனத்திற்கும் இயந்திர சக்திக்கும் உள்ள வித்தியாசம். மனம் ஒரு சூக்கும சக்தியாக இருப்ப

தால் அதற்கென ஒரு நிறமோ, உருவமோ கிடை யாது. ஆனால் அது எண்ணும் பொருளினுடைய நிறத்தையும் உருவத்தையும் எடுத்துக் கொள்கிறது. எண்ணத்தின் இயல்புக்கு ஏற்ப மனமானது எண்ணிய பொருளின் நிறத்தையும் உருவத்தையும் மூளை மையத்தில் விழச் செய்கிறது. இந்தச் செய் முறை நிகழா விட்டால் எண்ணிய பொருளைப் பற்றிய அனுபவமும் ஞானமும் விளங்காது. விழிப்பு நிலையில் ஒருவர் எண்ணற்ற ஆசைகளையும் எண்ணங்களையும் தினந்தோறும் உற்பத்தி செய்து கொண்டேயிருக்கிறார். அதனால் அவருடைய உலக பந்தம் மேலும் மேலும் வலுவடைகிறது. அவருடைய சொந்த மனம் புலன்களின் கைகளில் சிக்குவதால் ஆதரவற்றவராகி விடுகிறார்.

ஏற்கெனவே கூறி இருப்பதுபோல மனத்திற்கு நிறமோ உருவமோ கிடையாது. அது எண்ணிய பொருளின் நிறத்தையும் உருவத்தையுமே எடுத்துக் கொள்கிறது. இந்தக் காரணங்களை அனுசரித்தே புத்தகங்கள், புலன்களின் அடக்கம், மனத்தின் நல்ல சகவாசம், உயர்ந்த கல்வித்தரம், நல்ல அடக்கம், போன்றவை இன்றியமையாதன வாகின்றன. அதனாலேயே உன் எண்ணம் போலவே நீ ஆகிறாய். நீ விதைத்ததையே நீ அறுவடை செய்கிறாய். கடந்த பிறவிகளில் ஆசை கள் எண்ணங்கள் செய்கைகள் உருவிலே நீ என் னென்ன விதைத்தாயோ அதையெல்லாம் நீ இப்பொழுது அறுவடை செய்கிறாய். அதனால்

உன்னுடைய அதிர்ஷ்ட வசத்தையும் துரதிர்ஷ்ட நிலைமையையும் உண்டாக்குவது நீயேதான். இப்போது நீ கொள்ளும் ஆசைகளையும் எண்ணங் களையும் செய்கைகளையும் பொறுத்தே உனது எதிர்கால வாழ்வும் தாழ்வும் அமையும்.

உருவங்கள் மாறுவதையே இறப்பு என் கிறோம். இறப்பின்போது பரு உடல் மட்டுமே அழிந்து போகிறது. உனக்கு மூன்று வகையான உடல்கள் உள்ளன. அதாவது தூல உடல், மனம், (விண்ணுடல்) காரணஉடல் ஆகும்.

இறப்பின்போது சூக்கும உடல் காரண உடல் மனம் அகங்காரம், புத்தி, சித்தம் (மனக் கோப்பு) ஆகியவை இறப்பதில்லை. அவை ஒருங் கிணைந்து இடம் பெயர்ந்து சென்று புதிய பிறவி எடுக்கிறது. ஒருவன் செய்யும் செய்கைகளில் உள்ள புண்ணிய பாவங்களே மறுபிறவியை நிச்சயிக் கின்றன.

மனத்தையும் சித்தத்தையும் மனக்கோப்பையும் கட்டுப்படுத்துவதன் மூலம் ஒருவனுடைய பூர்வ பிறவியில் ஏற்பட்ட சம்பவங்களையும் நிகழ்ச்சி களையும் படம் போட்டுப் பார்க்கலாம். கடந்த கால வாழ்க்கையை ஞாபகத்தில் கொண்டு வந்து சொல்லக் கூடிய எத்தனையோ நிகழ்ச்சிகளை ஆதார பூர்வமாகப் பார்த்து வருகிறோம். மனோ தத்துவ நிபுணர்கள்கூட இதைப் பரிசோதித்து ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

சிலரால் பிரகடனப் படுத்தப்பட்டுள்ள ஒரே பிறவி சூத்திரத்தை ஒரு சிலர் நம்பி விட்டாலும் அதற்கு எள்ளளவும் ஆதாரமில்லை. அது இப்போது பொருளற்றுப் போயுள்ளது. இந்த ஒரே பிறவி சூத்திரத்தை வைத்துக் கொண்டு ஓர் ஆணுக்கும் மற்றொரு ஆணுக்கும் இடையிலேயும், ஒரு பெண் ணுக்கும் மற்றொரு பெண்ணுக்கும் இடையிலும் ஓர் ஆணுக்கும் மற்ற உயிர்களுக்கு இடையிலும் தோன்றும் வித்தியாசங்களுக்கு என்ன காரணங் களைச் சொல்லி நிருபிக்க முடியும்?

மேலும் சிலர் பிறவிக் குருடாகவும் மற்றும் சிலர் பிறப்பிலேயே மூளைக் கோளாறுடனும், ஊன முற்றவர்களாகவும் பிறக்கிறார்கள். அவர்கள் சொல்வது போல இந்த ஊனப் பிறவிகள் முதல் முதலாக உலகில் வந்து பிறந்தவர்கள் என்று சொல்வோமாயின் ஏன் அவர்களைக் கடவுள் ஊனப்படுத்திப் பிறப்பித்தார்?

ஒவ்வொருவரும் கடவுளை நல்லவர், அன்பா னவர், தயைபுரிபவர், நீதிமான் என்றெல்லாம் அழைக்கிறார்கள். முன் சொன்ன பிறவி ஊனங் களை எடுத்துக் கொண்டால் கடவுளை இந்தப் புகழ் வார்த்தைகளால் போற்ற முடியுமா? அத்தகைய கடவுள் இருந்து என்ன பயன்? இதற்கு எளிதாகப் பதில் சொல்லலாம். முன்னரே நாம் கூறியுள்ளது போல ஆசைகள் எண்ணங்கள் செயல்கள் வடிவிலே முற்பிறவியில் நாம் என்னவெல்லாம் விதைத்தோ மோ அதன் பலன்களையே இப்போது அறுவடை

செய்து கொண்டிருக்கிறோம். இதற்கெல்லாம் கடவுள் பொறுப்பாளியே அல்ல. நம்முடைய சுக — துக்கங்களுக்கு நாமே பொறுப்பாளிகள்.

ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்றும் வருவதில்லை. இது ஒரு சூத்திரம் போன்றது. 'படைப்பு' என்ற சொல் பொய்யானது. நாம் கடவுளை எங்கும் வியாபித்துள்ள உயிர்ச்சார உணர்வின் மகாசமுத்திரம் என்று சொல்லும்போது அவர் எப்படி ஒன்றைப் படைக்க முடியும்? எதிலிருந்து படைக்க முடியும்? அவ்வாறு செய்ய முடியவே முடியாது. இந்தப் படைப்புக் கருத்தைச் சொல்வதால் எல்லையில்லாத ஒன்றுக்கு நாம் எல்லை வகுத்துக் கொண்டிருக்கிறோம். ஆதலின் மனிதன் அனுபவிக்கும் சுக-துக்கங்களுக்கு அந்த மனிதனே பொறுப்பாளி.

வாழும் உயிரினங்களில் மனிதனிடம் மட்டுமே அறிவு முழு அளவுக்கு வளர்ச்சி பெற்றிருக்கிறது. பூரண நிலை அடைந்திருக்கிறது என்றும் சொல்லலாம். இந்த அறிவு ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு ஒருவன் அற்புதங்களைச் செய்யலாம். இந்த விலையுயர்ந்த மாணிக்கத்தைப் பயன் படுத்தி உயரிய சித்திகளை எய்துவதற்குப் பதிலாக ஒரு மனிதன் அதையே கீழ்த்தர உலக போகங்களைப் பெறுவதற்காக உபயோகிப்பானாகில் அவன் அதோடு தீர்ந்து போகிறான். அதற்குப் பதிலாக அவன் அளப்பரிய அபராதத்தைச் செலுத்தியேயாக வேண்டும்.

கட்டுப்பாடுடைய ஒழுங்குடன் இயங்கும் தூய மனம் மகோன்னத ஆற்றல் படைத்தது. அத்தகைய மனம் ஓர் அருமை நண்பனைப் போன்று உதவி செய்யும். ஒழுங்கு முறைக்குக் கட்டுப்பட்டு வரும் தூய்மையான மனத்தை நீங்கள் பெற்றிருப்பீர் களானால் இதே உலகில் இந்தக் கணத்திலேயே சொர்க்கத்தை அனுபவிக்கலாம்.

எதிர் மாறாக மாசு படிந்த மனம் கணத்துக்குக் கணம் துரோகம் செய்து கொண்டே இருக்கிறது. அது உங்கள் எதிரியைப் போலச் செயல்படுகிறது. அழுக்குள்ள மனத்தை வைத்துக் கொண்டு நீங்கள் நரகவேதனைப் படுகிறீர்கள். ஆதலின் சொர்க்கமும் நரகமும் உங்கள் மனத்தளவில்தான் இருக்கிறது.

எண்ணற்ற பாப ஆசைகளாலும், எண்ணங் களாலும் செய்கைகளாலும் மனத்தில் அழுக்கேறி விடுகிறது.

நேர்மையான வாழ்க்கை, மந்திர ஜபம், தினசரித் தியானங்கள் போன்றவை மனத்தைத் தூய்மையாக்குகின்றன. உங்களுக்கே நீங்கள் செய்து கொள்ளும் மேலான நன்மை உங்கள் புலன் களையும் மனத்தையும் அடக்குவதுதான்.

உலகில் நாம் கண்டிப்பாக செல்வத்தைச் சேர்க்க வேண்டியதுதான். ஆனால் மனக்கட்டுப் பாடு இல்லாத வெறும் செல்வச் செழிப்பு மட்டும் போதாது. அதற்கு அர்த்தமே கிடையாது. அது உங்களை நல்ல நிலைமையில் வைத்திருக்காது.

மனத்தையும் புலன்களையும் கட்டியாளக் கூடிய ஒன்றுமில்லாத ஒருவனுக்கு இருக்கும் மகிழ்ச்சிகூட உங்களுக்கு இருக்காது.

ஏராளமான செல்வத்தை ஒருவன் பெற்றிருப் பினும் அவனுடைய மனத்தையும் புலன்களையும் கட்டுப்படுத்தாமற் போனால் அவன் பெருத்த வேதனைக்குள்ளாகிறான். ஆதலின் மனக்கட்டுப் பாடு மிகமிக இன்றியமையாத ஒன்று. உண்மை யான அமைதிக்கும், செல்வ வளத்துக்கும் நாம் படாதபாடு படுகிறோம். அதற்கு மனக்கட்டுப்பாடு இருந்தால்தான் நல்லது. உலகின் நவநாகரீகப் போக்கால் இந்த நிலையில் பெருத்த தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஏராளமான செல்வச் செழிப்பு டன் வாழும் தேசங்கள் உண்பதற்கும் மகிழ்ச்சியில் திளைப்பதற்கும் தேவைக்கு மீறிய வசதிகளைப் பெற்றிருந்தாலும், அமைதி குலைந்து துன்பத்தில் உழலுகின்றன. அந்த நாடுகள் புலன் போகங் களைத் தேடி அலைந்து புலன் இன்பங்களை அதிக மாகப் பெற வேண்டுமென்ற ஆர்வத்தில் ஏமாற்ற மடைந்து குழம்பிப் போயிருக்கின்றன. பரிதாபத் துக்குரிய அவர்கள் உண்மையான அமைதியை யும் ஆனந்தத்தையும் எப்படிப் பெறுவது என்பதை அறிந்து கொள்ளாத நிலையிலிருக்கிறார்கள். வேறொரு புறத்தில் உலகிலுள்ள அரைப்பட்டினி நாடுகள் செல்வச் செழிப்பை அடைந்து விட்டாலே மகிழ்ச்சியைப் பெற்று விடலாம் என்று நினைக் கின்றன. இது தவறான கருத்து. எது எப்படி

இருந்தாலும் எந்த ஒரு தேசமும் இந்த இரு இன்ப நிலைகளையும் இதுவரை பெற்றதே இல்லை. அதற்குக் காரணம் இந்த நாடுகளில் உள்ள தலைவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் ஆண் களும் பெண்களும் ஏதுமறியாத அப்பாவி களாகவே இருக்கிறார்கள். அவர்கள் பேராசை பிடித்தவர்களாகவும் மனம் புலன்களின் அடிமை களாகவும் இருக்கிறார்கள். அதுபோன்ற தலைவர் கள் மக்களை எப்படி வழி நடத்திச் செல்ல முடியும்? முடியவே முடியாது.

இந்தக் காலத்தில் மற்றொரு சுபாவம் காட்டுத் தீ போல உலகெலாம் பரவி வருகிறது. அதுவே சுதந்திர கோஷமாகும். பெரும்பாலானவர்களுக்கு உண்மையான சுதந்திரத்திற்குப் பொருள் தெரியாது.

அவர்கள் மனத்தில் எந்தவித ஆசை தோன்றி னாலும் அதை உடனே தீர்த்துக் கொள்வதுதான் சுதந்திரம் என்று நினைக்கிறார்கள். இது எத்தகைய அப்பாவித்தனம்!

மனத்தில் தோன்றும் அனைத்தையும் நல்லது — கெட்டது ஆய்ந்து அடக்காமல் ஒட்டுமொத்தமாக திருப்தி செய்துவிட வேண்டுமென்று நினைக்கும் ஆண் அல்லது பெண் அதோடு தம் வாழ்க்கைக்கு முடிவு கட்டிக் கொள்ள வேண்டியதுதான்.

அது போன்ற செய்கை அடிமை நிலையையே தோற்றுவிக்கும். இந்த எளிய உண்மை யாருக்கும் புரிவதில்லை.

எப்போதும் நீங்கள் உங்கள் மனம், புலன்களை அடக்கும் அதிகாரிகளாக இருங்கள். அதற்குப் பிறகே நீங்கள் மகிழ்ச்சியைப் பெறலாம்.

முடிவாக ஒன்றைக் கூறுவோம். நாடுகளின் உண்மையான சமாதானம், செல்வ வளம், முன்னேற்றம், பொருளாதார ஆன்மீக முன்னேற்றத்தில்தான் அமைந்திருக்கிறது. இந்த இரண்டின் இணைப்பே மிக மிக இன்றியமையாதது.

# கடவுளும் மனிதனும்

# GOD AND MAN

BY

SWAMY NARAYANANANDA



From:

The Complete Works Of Swamy Narayanananda.

Vol–15.

# கடவுளும் மனிதனும்

'முடிவான பேருண்மை' என்பது ஒன்றே ஒன்று தான். இரண்டாவதற்றது. அதைப் பல பெயர் களிட்டு அழைக்கிறோம். அதாவது பிரம்மம், கடவுள், மேலான பரம்பொருள், மகாசக்தி, மகாத்மா, பரமாத்மா, பேருண்மை போன்ற பெயர் களால் அழைக்கிறோம்.

பெயர்கள் மாறுபடும். ஆனால் பொருள் என்னமோ ஒன்றேதான்!

கடவுளுக்கென ஒரு குறிப்பிட்ட பெயரோ உருவமோ கிடையாது. அதே நேரத்தில் அதற்குப் பல பெயர்களும் உருவங்களும் உள்ளன.

கடவுளை அவன், அவள் அல்லது அது என்று சொல்ல முடியாது. அதே சமயத்தில் கடவுளை அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் சொல்கிறோம்.

கடவுள் என்பது ஒரு வட்டத்தின் மையப் புள்ளிக்கு ஒப்பானது. பல்வேறு மதங்களும்,

கொள்கைகளும், குறிக்கோள்களும் மேற்கொள்ளும் பலதரப்பட்ட பாதைகளும் பொதுவான ஒரே மையப் புள்ளியை வந்தடையும் பலப்பலவான ஆரங்கள் (Rades) போன்றாகும்.

கடவுள் அகிலாண்டத்தின் அதிபதி. அவனே காரணங்களுக்கெல்லாம் ஆதிகாரணமானவன். பொருள்களுக்கெல்லாம் மூலப் பொருளாக உள்ளவன். அவன் எல்லையில்லாதவன். அடிமுடி யற்றவன். சர்வ வியாபி. அசைவற்றவன். மாறுத லற்றவன். பிறப்பில்லாதவன். வளர்தல் அற்றவன். இறப்பில்லாதவன். ஆண் — பெண் பேதமற்றவன்.

இந்த அகிலத்தைப் படைத்தவனும் அவனே. கட்டிக் காப்பவனும் அவனே. அழிப்பவனும் அவனே. படைத்தல், காத்தல், அழித்தல் அனைத்தும் கடவுள் தன்மையோடு இணைந்தவை. இந்த முத்தொழில்களும் நடக்காத நாளே கிடையாது. அவ்வாறு நடக்காத நாளும் இனி இருக்கப் போவதில்லை. இந்த முத்தொழிலும் நின்று போகும் நாளும் ஏற்படப் போவதில்லை. படைத்தல் எப்போது துவங்கிற்று என்று கேட்பது கடவுள் எப்போது படைக்கப்பட்டார் எனக் கேட்ப தற்கு ஒப்பாகும். எப்போது பிறந்தார் என்ற கேள்வியே அபத்தமாகும்.

நாம் எப்போது கடவுளைச் சர்வ வியாபி என்று சொல்லி விட்டோமோ, அப்போதே கடவுளில் லாமல் ஒரு சிறு துரும்பும் இல்லை என்பது ருசுப்

பிக்கப்பட்டு விடுகிறது. கடவுளை விட்டு ஒரு பொருளும் தனித்து வாழ முடியாது. இந்த அகிலத்துக்கான ஆதார மூலப் பொருளாக இருப்பது கடவுள். எல்லா உயிர்களும் கடவுளிடமிருந்தே வருகிறது. அவை கடவுளிடமே போய்ச் சேருகின்றன. பெயர்களும் உருவங்களும் பெற்ற இந்த அகிலம் கடவுள் இல்லாமல் இயங்க முடியாது.

''இந்த அகிலம் என்பது பொய்; கடவுள் மட்டுமே மெய்'' என்று கூறுவதன் பொருள் என்னவெனில், பெயர்களும் உருவங்களும் கொண்ட இந்த அகிலம் அடிக்கடி மாறிக் கொண்டே வருகின்றது. மாற்றமடையும் எந்த ஒரு பொருளும் நிலையானதாகவோ, பொய்யானது அல்ல என்றோ சொல்லக் கூடியதாகவோ இருக்க முடியாது. ஆயினும் மாற்றமடையும் இந்த அனைத்துப் பொருள்களுக்கும் பின்னணியில் மாறாத ஒரு பொருள் எப்போதும் மாற்றமில்லாமலிருக்கிறது. இந்த மாற்றமில்லாத—மாற்ற முடியாத ஒரு பொருளே கடவுள். அதனால் அகிலத்திலுள்ள அனைத்துப் பெயர்களையும் உருவங்களையும் நீக்கி விட்டுப் பார்த்தோமானால் மீதமிருப்பது 'கடவுள்' மட்டுமே.

ஒன்றுமில்லாததிலிருந்து யாதொன்றும் வர முடியாது. இது ஒன்றோடொன்று இணைந்துள்ளவை. அதனால் இந்த அகிலமானது கடவுளிடமிருந்தே தோன்றி, கடவுளிடத்திலேயே வாழ்ந்து, கடவுளிடத்திலேயே கரைந்து போகிறது.

கடவுள் மிகவும் நுட்பமான பொருளினும் அதி நுட்பமானது. பெரிதினும் பெரிது; மிகச் சிறிதினும் சிறியதாகவும் மிகப் பெரியதினும் பெரியதாகவும் உள்ள பொருள். மனிதனின் மனப்புலனால் காண முடியாதது. அதனால் கடவுளையும் காணமுடியாது என்பது பொருளாகும். காண்பது என்றால் ஒரு பொருளுக்கு உருவம் கொடுத்துப் பார்ப்பது என்று பொருள். கடவுள் எல்லாப் பொருள்களுக்குமே மூலப் பொருளாக உள்ளவர். உண்மை அதுவாக இருக்கும் போது அவரை உருவகித்துப் பார்ப்பது எவ்வாறு? அது இயலாதது. நாம் அறிவதற்கு உதவும், நாம் அறிந்துள்ளதாக அறியும் அறிவுக்கு அப்பாற் பட்டவர் கடவுள்.

நம் ஆன்மாவே கடவுள். நமது அந்தராத்மா வாக அவர் நமக்குள்ளேயே இருக்கிறார். நிலைமை இதுவாக இருக்க, நம்முடைய உயிரின் இயல்பை ருசுப்படுத்துவதற்கு வேறென்ன ஆதாரம் வேண்டும்? நமக்குள் இருக்கும் உயிர் உணர்வை நாம் எப்படி மறுக்க முடியும்? இது முடியாதது.

கடவுளைப் பற்றி மனித மனம் உருவாக்கியுள்ள மிக உயரிய ஒன்றே சத்து — சித்து ஆனந்தம் (உயிர், அறிவு, பேரானநதம்). இந்த மேலான கருத்துக்கும் அப்பால் மனித மனத்தினால் கடவு ளைக் குறித்து வேறெந்த நிலையையும் காண முடியாது. எல்லையில்லாத ஒன்றுக்கு எல்லை யிட்டுக் காட்டுவது இந்த சத்— சித்— ஆனந்த

நிலையேயாகும். அதற்கு மேல் விளக்க வேறெந்த வழியுமில்லை.

கடவுள் சத்—சித் ஆனந்தம் மட்டுமின்றி அதை விடவும் உயர்ந்தவராவார். அந்த நிலை எது என்பது அவருக்கு மட்டுமே தெரியும். அவருக்கு இல்லாத நிலை எது என்பதையும் அவர் மட்டுமே அறிவார். இருப்பினும் இந்த மேலான பரம்பொருளை விளிப்பதற்கு வேறொரு அரிய பெயரும் உண்டு. அதை உயிர்ச்சார உணர்வின் மகா சமுத்திரம் எனலாம்.

இந்த அரிய நிலையை 'நிர்விகல்ப சமாதி' நிலையில் மட்டுமே (ஆழ் நிலைத் தியானநிலை) அனுபவித்து உணர முடியும். வேறெந்த நிலையிலும் இயலாது.

மிகச் சிறந்தது எனக் கருதப்படும் எந்த ஒரு பொருளையும் விட மேலான உண்மை படைத்தது கடவுள். அவர் எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் இருக்கிறார். அவரேஅனைத்திற்கும் மூலம். உலகிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் எல்லா உயிருக்கும் பொது உடைமைச் சொத்தாக நிற்பவர் அவரே. எந்த ஒரு தேசமோ, மதமோ கொள்கையோ, ஜாதியோ, இனமோ, ஆண் அல்லது பெண்ணோ, ஞானியோ அருளாளரோ அவரைத் தம்முடையவர் —தனக்கே உரித்தானவர் என்று உரிமை கொண்டாட முடியாது.

அவரை அடைவதற்கு யார் ஒருவர் உள்ளார்ந்த ஈடுபாடு கொள்கிறாரோ அவரே அவரை அடைகிறார்; அனுபவிக்கிறார். சம்சார சக்கரத்திலிருந்து (பிறப்பு, வளர்ச்சி, முதுமை, இறப்பு ஆகிய வாழ்க்கைச் சகடம்) விடுவிக்கப்படு கிறார்.

கடவுள் தாதுப் பொருள்களில் அசையாது உறங்குகிறார். காய்கறிகளில் அவர் கனவு நிலை யிலிருக்கிறார். மிருகங்களில் அவர் விழித்துக் கொண்டிருக்கிறார். மனிதனில் முன்னும் பின்னும் பார்த்து தன்னைத்தானே அறிந்து கொள்கிறார்.

ஓர் உயிருள்ள உடலுக்குள்ளே எண்ணற்ற உயிரணுக்களின் மத்தியிலே வாழும் ஜீவாத் மாவைப் போன்றே (தனி மனித ஆன்மா) எண்ணி லடங்காத உலகங்களுக்குள்ளும் உயிர்களுக்கும் இடையில் கடவுள் வசிக்கிறார். ஜீவான்மா உடலை விட்டுப் பிரிந்ததும் உடலிலுள்ள எண்ணற்ற உயிர ணுக்கள் அனைத்துமே அழிந்து போகின்றன.

உண்மை இதுவாக இருக்கும்போது எல்லை யற்ற பரவெளியில் மனிதனுடைய பட்டம், பதவி, இருப்பிடம் எல்லாம் எம்மாத்திரம்? ஒரு சின்னஞ் சிறு சிகப்பு அல்லது வெள்ளை இரத்த அணு ஒரு மனித உடலில் எம்மாத்திரமோ அம்மாத்திரமே கோடிக்கணக்கான உயிரினங்கள் வாழும் பரந்த உலகில் மனிதன் வகிக்கும் பதவியும் பட்டமும் ஆகும்.

பரந்து விரிந்த எல்லையற்ற பரவெளியில் நாம் வாழும் உலகம் ஒரு சிறு புள்ளி போன்றதுதான். இதில் மனிதனுடைய நிலையை நினைத்துப் பார்த்தால் அவன் எவ்வளவு அற்பமானவன், சிறு துரும்புக்குச் சமானமானவன் என்பது விளங்கும். இதற்கெல்லாம் நேரெதிரிடையாக இந்த அறிவீனம் படைத்த மனிதன் எவ்வளவு அப்பாவித் தனமான நினைப்பைக் கொண்டுள்ளான், அவன் மார் தட்டிக் கொள்ளும் நாகரீகம், விஞ்ஞான முன்னேற்றம் போன்றவற்றை நினைத்து அகங்காரப் படுகிறானே அந்தோ!

ஒரு சில கருவிகள் யந்திரங்களைக் கண்டு பிடித்து விட்டான். விண்ணிலே பறக்கவும் கடல்களைக் கடக்கவும் மோட்டார் கார்களிலே பூவுலக நிலப்பரப்பின் குறுக்கும் நெடுக்குமாக ஓடி யாடவும் தெரிந்து கொண்டு விட்டான். இந்த மனிதன் எல்லாவற்றையும் தான் அறிந்து கொண்டு விட்டதாக எண்ணி இறுமாந்து கடவுள் இருப் பதையே மறுக்கும் அளவுக்கு வந்து விட்டான்! என்ன அல்பத்தனம்! எவ்வளவு முட்டாள்தனம்! மிக மிக அற்பமான உயிரணுவும்கூட அதற்கான உயிரையும் ஒளியையும் நமது ஆன்மா, உயிர் அல்லது ஜீவனிலிருந்து பெறுகிறது. அந்த ஆன்மா இல்லையேல் அந்த அற்ப அணு ஒரு கணம்கூட உயிர்வாழமுடியாது. இந்த ஆன்மா உடலைவிட்டுப் பிரிந்த உடனே நமது உடலில் பலகோடி நூறாயிரக் கணக்கிலுள்ள அற்ப உயிரணுக்களின் கதி என்ன

ஆகிறது? இதை நாம் அறிவோம். கோடிக் கணக்கான அற்ப உயிரணுக்களுக்கும் அவை வாழும் உடலுக்கும் ஆன்மா எப்படியோ அவ்வாறே கடவுள், எண்ணிலடங்கா உலகங்களுக்கும் அவற்றின் கணக்கற்ற உயிரினங்களுக்கும் ஆகிறார். ஆதலின் மனிதனைப் போல் பரவெளியில் சிறு துரும்புக்குச் சமமாக உள்ள இந்த அகிலம் கடவுளின்றி ஒரு கணமேனும் இயங்க முடியுமா? இந்த அகிலத்தின் பரம ஆன்மாவாக இருப்பது யார்? பின்னர் ஏன் இந்த மனிதனுக்கு அறிவீனமும் மதியீனமும், அகங்காரமும்?

அவன் மிகவும் அடங்கிய நிலையில் இவை அனைத்தையும் உதறிவிட வேண்டும். நல்லறிவு பெற்று, கடவுள் நம்பிக்கை பெற்று, நிரந்தர அமைதியையும் ஆனந்தத்தையும் அனுபவிக்க வேண்டும்.

எல்லா உயிர் இயக்கங்களின் உயிர் மூச்சாக இருப்பது கடவுள் — எண்ணிலடங்கா உலகங்களும் அவற்றிலுள்ள உயிரினங்களின் உயிர் மூச்சும் கடவுள்.

ஜீவாத்மா (உடலிலுள்ள உயிர், இல்லாமல் எண்ணற்ற உயிரணுக்கள் ஓர் உடலுக்குள் உயிர் வாழ முடியாது. அதேபோல் எண்ணிலடங்கா உலகங்களும் அவற்றில் வாழும் உயிரினங்களும் கடவுள் இன்றேல் இயங்க முடியாது.

இந்த நிலையில் மனித உடலில் வாழும் கண்ணுக்குப் புலப்படாத மிகவும் அற்பமான ஒரே

ஒரு சிகப்பு அணுவோ, வெள்ளை இரத்த அணுவோ தனக்குள்ள மயக்கத்தினாலும் கர்வத்தினாலும் பரமான்ம உயிர் ஒன்றுள்ளது என்பதையும் அதன் முக்கியத்துவத்தையும் அத்தியாவசியத்தையும் மறுத்து ஒதுக்கும் உதாசீனப் போக்கையும், இறு மாப்பையும் நாம் என்னென்று நினைப்பது? அது ஒரு பகுத்தறிவற்ற அபத்தமான செய்கை. அதைப் பற்றி மனிதன் வெட்கித் தலை குனிந்து வேதனைப் பட வேண்டும்!

ஓர் உயிருள்ள உடலில் ஒவ்வொரு உயிர் அணுவின் உயிரியக்கமும் மற்ற உயிரணுக்களின் உயிரியக்கத்துடன் நெருங்கிய தொடர்பு பெற் றுள்ளன. ஓர் உயிர் அணுக்கோசத்திற்கு ஊறு விளைந்து பழுதாகியோ அல்லது நோய்வாய்ப் பட்டோ விடுமானால் அதோடு நெருங்கி இணைந் துள்ள மற்ற உயிர் அணுக்கோசங்களும் அதே பாதிப்பைப் பெறுகின்றன. உடலில் நல்ல ஆரோக்கியம் நிலவ, உடலிலுள்ள எல்லா உயிர ணுக்களும் ஆரோக்கியத்துடனிருந்து நல்லபடி இயங்க வேண்டும்.

ஓர் உடலிலுள்ள எண்ணிலடங்கா சின்னஞ்சிறு உயிரணுக்கள் ஒன்றோடொன்று நெருங்கி இணைந் திருக்கிறது. இதே போல் உயிர்கள் நிரம்பிய உலகங்களும் ஒன்றுடனொன்று இணைந்து கடவு ளோடும் பிணைந்து இயங்குகின்றன. இது போன்ற அமைப்பில் ஒருவர் தான் மட்டும் சுய நலம் படைத்த வராக இருப்பாராயின், அதே சமயத்தில் மகிழ்ச்சி

யோடும் இருக்க வேண்டுமென்றால் அது இயலாது மற்றவர்களைக் கொள்ளையடித்து ஊறுவிளை விக்கும் அதே நேரத்தில், தன்னைத் தானே கொள்ளையடித்து தனக்கே ஊறு விளைவித்துக் கொள்வது போன்றதாகும்.

எதிர் மாறாக ஒருவர் அன்பு காட்டுகிறார். சேவை செய்கிறார், மற்றவர்களுக்கு உதவி புரிகிறார். இப்படிப்பட்டவர் தனக்குத் தானே உதவிக் கொண்டு தன்னைத் தானே உயர்த்திக் கொண்டு மகிழ்ச்சி எய்துகிறார்!

ஓர் அணுவிற்கும் மற்றொரு அணுவிற்கு மிடையேயும், ஓர் உயிருக்கும் மற்றோர் உயிருக்கு மிடையிலேயும், ஓர் உலகத்திற்கும் மற்றொரு உலகத்திற்குமிடையிலேயும் இணைப்பு வளையமாக இருப்பது கடவுள். எல்லாமாயுள்ள அனைத்து உலகங்களுக்கும் அவற்றில் வாழும் உயிரினங் களுக்கும், உயிரணுக்களுக்கும் பின்னால் உயர் தத்துவமாக இருப்பது கடவுள்!

ஒவ்வொரு பொருளிலும் எல்லா இடங்களிலும் கடவுள் இருக்கிறார். தன் மனத்திலுள்ள அழுக்கின் காரணமாக மனிதன் அவரைக் காணத் தவறி விடுகிறான். மனிதனின் மனம் அழுக்கடைவது,புலன் களோடும் புலன் போகப் பொருள்களோடும் அது பெற்றுள்ள பந்தத்தினால்தான்! புலன்களும், புலன் போகப் பொருள்களும் அடிக்கடி மனத்தை வெளியே இழுத்துக் செல்கின்றன! இந்தப் புலன் போகப்

பொருள்கள் ஆசைகளை உண்டாக்குகின்றன. ஆசைகளே மனத்தில் உண்டாகும் மாசுக்கும், மயக்கத்திற்கும் பந்தத்திற்கும் காரணமாகின்றன.

உலகம் ஒருவனுடைய சொந்த மனத்தினால் தோற்றுவிக்கப்பட்டதேயாகும். ஒருவன் தான் எண்ணுவது போலவே ஆகிறான். நாமிருக்கும் நிலைக்குக் காரணமாக இருப்பது நம் எண்ணங் களே, நம்மை இந்த நிலைக்கு ஆளாக்கி இருப்பதும் நம்முடைய எண்ணங்களே. கடந்த காலத்தில் நாம் கொண்டிருந்த எண்ணமே நாம் இன்றுள்ள நிலைக்குக் காரணம்.

இன்று நமக்குள்ள இன்பத்துக்கும் துன்பத் துக்கும் கடந்த கால எண்ணங்களும் செயல்களுமே காரணம்.

ஏனெனில் மனமானது சூக்குமமானது. அதற்கென்று தனியாக நிறமோ உருவமோ கிடையாது. எண்ணிய பொருளின் உருவத்தையும், நிறத்தையுமே அது எடுத்துக் கொள்கிறது. அதனால் ஒரு மனிதன் இடையறாது கடவுளையே நினைத்துக் கொண்டிருந்தால், அவருடைய பெருமையையும், கீர்த்தியையும் நினைத்துக் கொண்டிருந்தால் அவன் மனம் தூய்மையடை கிறது. அவனே கடவுளைப் போல் ஆகிறான்.

கடவுள் தன்மைகளையும் எய்தி விடுகிறான்.

மாறாக அவன் மனம் கீழ்த்தரமான புலன் ஆசைகளிலும் புலன் போகங்களிலும் ஈடுபடுகிறது.

அதிலேயே திளைத்திருக்குமாயின் அது மாசடைந்து விடுகிறது. தூய்மையை இழந்து அதற்கிருந்த சுபாவமான நல்ல சக்திகளையும் இழந்து சிதறுண்டு போகிறது. இத்தகைய தூய்மையற்ற நிலைமைக்கு வந்து சேர்ந்த, மன ஒருமுகப்பாட்டை இழந்த தன்மைகளே இந்த அகிலத்தில் ஏற்படும் பந்தத்திற்கும் துன்பத்திற்கும் காரணமாகின்றன.

எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் நிலவி நிற்கும் கடவுள் ஒன்றே ஒன்றுதான். உண்மை அதுவாயின் ஒன்றெனும் ஒருமைக்குப் பதிலாக மனிதன் பலவற்றைக் காண்கிறானே அது எப்படி? இதுகூட மனித மனம் அழுக்கடைந்து இருப்பதாலும் அவனுடைய அறியாமையினாலுமே யாகும்.

உதாரணமாக ஒன்றை விளக்கிடுவோம் சூரியனை எடுத்துக் கொள்வோம். கண்ணாடியில் ஒளிக்கதிர்கள் விழுகின்றன. சூரியனுடைய உருவத்தையும் கண்ணாடி காட்டுகிறது. அது மேலும் ஒளியைப் பிரதிபலிக்கிறது. பிரதிபலிக்கப்பட்ட ஒளிக்கதிர்கள் அழுக்கடைந்து அலைகள் நிரம்பியுள்ள ஒரு குளத்தின் நீர்ப் பரப்பின் மேல் விழுகின்றன. கண்ணாடியினால் பிரதிபலிக்கப்பட்ட சூரிய ஒளி நீர்ப்பரப்பின் மேல் போய் விழுந்த போதிலும் அந்த நீர்ப்பரப்பு சூரியனது உருவத்தைக் காட்டத் தவறி விடுகிறது.

அதே தண்ணீர் அதிக அழுக்கில்லாமலிருந்து அலைகளும் அதிகமாக இல்லாமலிருக்குமானால்

பிரதிபலிக்கப்பட்ட உருவத்தை மங்கலாகக் காண் கிறோம். அதே தண்ணீர் சுத்தமாக இருந்து அலைகளே இல்லாமலிருந்தால் பிரதிபலிப்பை மிகத் தெளிவாகக் காண்கிறோம்.

இங்கே சூரியனைக் கடவுளுக்கு ஒப்பிடலாம். தனி உயிரான ஜீவான்மாவை கண்ணாடிக்கு ஒப்பிட லாம், மூன்று வெவ்வேறான நிலைகளிலிருக்கும் குளத்து நீரை மனத்தின் மூன்று வகைத் தன்மை களுக்கு ஒப்பிடலாம். மிகுந்த அழுக்குடனும் அலை கள்அதிகமாகவும் உள்ள நீர் நிலையை தாமச குணம் படைத்த மனத்திற்கு (தூய்மையற்ற மந்தமான மனம்) ஒப்பிடலாம். பாதி அழுக்குடனும் ஒரு சிறிதே அலைகளுடனும் உள்ள நீர்ப் பரப்பை இராஜஸ மனத்திற்கு (சுறுசுறுப்புடனும் தூய்மை யற்றும், ஆசை நிறைந்தும் உள்ள மனம்) ஒப்பிட லாம்!

அலைகளற்ற பளிங்கு போன்ற நீர்ப் பரப்பை சாத்வீக மனத்துக்கு (தூய்மையும், சூக்குமமும் ஒரு நிலைப்பட்ட தன்மையுங் கொண்ட மனம்) ஒப்பிட லாம்.

(உயிர்களின் மனங்களை பல்வேறு பிரிவு களாகப் பிரிக்கலாம். ஆனால் நமது வசதிக்காக வற்றை மூன்று முக்கிய பிரிவுகளாக்கிக் கொண்டுள் ளோம்.)

இந்த மூவகை நீர் நிலைகளின் மீது பிரதி பலிக்கும் கிரணங்கள் ஒரே சீராக விழுந்தாலும்,

முதல் வகைப் பிரிவில் நாம், உருவம் முழுவதை யுமே காண முடிவதில்லை.

இரண்டாவது வகையில் ஓரளவுக்கு உருவம் தெரிகிறது.

மூன்றாவது நிலையில் பிரதிபலிக்கப்பட்ட உருவத்தை மிகத் தெளிவாகக் காண்கிறோம்.

நமது அகிலத்தில் ஒளி பரப்பும் சூரியனைப் போலவே கடவுள் உலகெங்கணுமுள்ள ஒவ்வொரு உயிருக்கும் பின்னணியில் உண்மையான உயிராக இருக்கிறார்.

சீவன் (ஆன்மா) என்பது அந்த மேலான பரம் பொருளின் பிரதிபலிக்கப் பட்ட ஒளிக்கதிர்கள் எப்படி நீர்ப் பரப்பினால் பெறப் படுகிறதோ அதேபோல மனம் தனக்கான உயிரையும், ஒளியையும் ஜீவான் மாவிலிருந்து பெறுகிறது.

மனம் அழுக்குற்றிருந்தால் (தாமச மனம்) ஜீவான்மாவின் பிரதிபலிப்பைத் தன்னுள் வாங்கத் தவறி விடுகிறது. அது போன்ற மனத்தைப் பெற்ற உயிர், புலன் போகங்களில் மூழ்கி உலகாயத விஷயங் களோடு பிணைப்பை ஏற்படுத்திக் கொள்கிறது.

இராஜஸ மனம் எண்ணிறந்த ஆசைகளையும் அபிலாஷைகளையும் உடைய சுறுசுறுப்பான மனம். அத்தகைய மனம் கடவுள், தர்மம் (அறவழி) போன்றவற்றின் அவசியத்தைப் புரிந்து கொள் கிறது. அப்படி இருந்தும் அது உலகப் பொருள்

களின் மீது பற்று வைக்கிறது. ஆபத்து வரும் போதோ அல்லது மரணம் நெருங்கும் போதோ இராஜஸ மனம் கடவுளை நினைக்கிறது; கடவுளைப் பிரார்த்திக்கிறது.

ஒருவருடைய மனம் குளத்தின் பளிங்கு போன்று — தூய நீர்ப் பரப்பைப் போன்று தூய்மையாகவும் சூக்கும நிலை கொண்டதாகவும் ஒரு முகப் பட்டதாகவும் இருக்கும்போது (சாத்வீக மனம்) அது பிரதிபலிப்பைப் பிடித்துக் காட்டுகிறது. அதாவது அது ஆன்மாவை, உயிரைக் கண்டு கொள்கிறது.

சமாதி நிலை அல்லது கடவுளைக் காணும் நிலை என்பது ஒளிக் கதிர்களை குளத்தின் நீர்ப் பரப்பிலிருந்து சூரியனிடம் திருப்பிச் செலுத்துவது போன்றது. ஆதலின் சமாதி நிலையை எய்த வேண்டுமாயின் மனத்தைத் தூய்மையாகவும் அமைதியாகவும் ஒருமுகப்படுத்தியும் வைத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு அதை ஜீவான்மாவிடம் திரும்பக் கொண்டு செல்ல வேண்டும். அவ்வாறு கொண்டு சென்றபிறகு அதை பரமான்மாவுடன் இணைக்க வேண்டும். இதுவே மோட்சம் (விடுதலை) அல்லது கடவுளை அறிந்த நிலை,

மெய்யுணர்வு பெற்ற அல்லது மெய்யுணர்வற்ற நிலையிலேயே ஒவ்வொரு உயிரும் விடுதலையை நோக்கியே போராடிக் கொண்டிருக்கின்றன. இந்த அகிலத்தின் இயக்கங்கள் அனைத்துமே இந்த ஒரே குறிக்கோளை நோக்கியே சென்று கொண்டி

ருக்கின்றன. இந்த விடுதலைக்கான நோக்கம் ஒரு புல்லிதழில்கூடப் படிந்து போயிருக்கிறது.

துன்பத்தை ஒருவரும் விரும்புவதில்லை. வேதனையை ஒருவரும் வரவேற்பதில்லை, நோய் சாவு என்றாலே எல்லோருக்கும் பயமேற்படுகிறது. உண்மை இதுவாக இருப்பினும் மனித உயிர்களின் செய்கைகள் பாதை மாறிப் போவதால் மனிதன் மகிழ்ச்சிக்குப் பதிலாக வேதனையும், விடுதலைக்குப் பதிலாகப் பந்தத்தையும் அடைகிறான்.

அவன் செல்வத்தைச் சேர்ப்பதாலும், பெயரையும் புகழையும் பெறுவதாலும் புலன் போகங்களை அனுபவிப்பதாலுமே ஆனந்தத்தைப் பெற முடியுமென்று எண்ணுகின்றான். உண்மையிலேயே இவை அனைத்தும் உண்மையான ஆனந்தத்தை அளிக்கின்றதா? இல்லை. மாறாக, அவை ஒருவனைத் :துன்பத்தில் ஆழ்த்தி பந்தத்திற்கும் சொல்லொணாத் துயரங்களுக்கும் காரணமாக்குகின்றன. பின் உண்மையான விடுதலை எதில் இருக்கிறது? அதன் பதில் எளிமையானது.

ஒருவன் தன்னுடைய உண்மை நிலையை அறிந்து கொண்டாலே போதுமானது. அதாவது இறையுணர்வைப் பெற்று விட்டாலே போதுமானது. இதையே 'உண்மையான விடுதலை' என்கிறோம். இந்த நல்ல முடிவை அடைவதற்கு ஒருவர் தனது மனத்தைத் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். அதை அடக்கியாளவும் வேண்டும். இந்த நல்ல

பண்புகளைப் பெறத் தன்னிடமுள்ள எல்லாப் புலன் களையும் கட்டுப்படுத்த வேண்டும். உன்னத லட்சியங்கொண்ட, ஒழுக்கம் மிக்க வாழ்வைக் கடைப் பிடித்து வாழ வேண்டும். அதாவது நல்லொழுக் கத்துக்கான விதிகளாக உள்ள உண்மை பேசுதல், கற்பு நெறியைக் கடைப்பிடித்தல், அன்பு கொண்டு ஒழுகுதல், தருமம் செய்தல், தன்னலமில்லாமை, போதுமென்ற மனநிறைவுடன்இருத்தல், தூய்மை யைக் கடைப்பிடித்தல், பேராசை கொள்ளாத் தன்மை போன்றவற்றை கடைப்பிடித்து வாழ வேண்டும். இவற்றை எண்ணம், சொல், செயல் மூன்றினாலும் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

உண்மையிலேயே உலகத்திலுள்ள எல்லா மதங்களுமே இவற்றின் அவசியத்தை வற்புறுத்து கின்றன. அவை அனைத்துமே இந்த அடித் தளத்தின் மீதே நிற்கின்றன.

பல்வேறு மதநிறுவனர்களும் எளிய தூய நேரிய வாழ்வுடன் வாழ்ந்து அவர்களைப் பின்பற்றி வந்த சீடர்களையும் அவ்வாறே வாழக் கட்டளையிட் டனர். இந்த நற்கொள்கைகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து வாழ்ந்த பல்வேறு கொள்கைகளைச் சார்ந்த மாபெரும் ஞானிகள் வாழ்வெனுங் கடலைக் கடந்து பேரானந்தத்தையும் பேரமைதியையும் எய்தியுள்ளனர்.

ஆனால் இப்போதோ இந்த இருபதாம் நூற் றாண்டின் மக்கள் தங்கள் தலைவர்களோடு

சேர்ந்து தள்ளாடியபடி வாழ்வின் குறிக்கோளை தவற விட்டுவிட்டனர். உலகத்து மக்கள் ஒழுக்கத்திலும் ஆன்மீக நெறியிலும் பின்னடைந்து, தாழ்வுற்றுப் போவார்களேயானால் இந்த உலகம் தீராத நரகமாக மாறி விடுகிறது. இதை, இருபதாண்டு குறுகிய இடைவெளி காலத்திலேயே நடந்துவிட்ட இரண்டு மாபெரும் கோர உலக யுத்தங்களின் போதே நாம் அனுபவித்து விட்டோம். மூன்றாவது யுத்தம் தலை நீட்டி நம்மைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

உண்மையாக உலக அமைதிக்கு வாழும் மக்கள் சுயநலம் அற்றும், தெய்வீகம் நிறைந்தும் அன்புள்ளமும் பெருந்தன்மையும் நேர்மையுங் கொண்டும் வாழ வேண்டும்.

சந்தேகம், பயம், வஞ்சனை, இரட்டைவேடம், நயவஞ்சகம், கொள்ளையடித்தல், பொய் பேசுதல் ஆகியவற்றை அறவே ஒதுக்க வேண்டும்.

பல்வேறு நாடுகளும் தூய்மையும் நேர்மையுங் கொண்ட ஆண்களையும் பெண்களையும் உண்டாக்கா விட்டால் உலகம் நரகமாகிவிடும். பொறுப்பு வாய்ந்தவர்கள், சமாதானத்தை விரும்புபவர்கள் கடவுளிடம் உண்மையும், நேர்மையும் கொண்ட வாழ்வை மேற்கொண்டு, இந்தத் தெய்வீகச் செய்தியை உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரவும்படிச் செய்தல் வேண்டும். இதுவே உண்மையான உலக சமாதானத்தை அடைவதற்கு வழி. நிலை

யான பேறுடைய வாழ்வை எய்துவதற்கும் திறவு கோல்.

அழியாப் பேரானந்த நிலை பெற்ற குழந்தை களே! உங்கள் அறியாமையை உதறித் தள்ளுங்கள். கர்வத்தையும் உதறி விடுங்கள். நல்லறிவுடன் வாழுங்கள்.

எளிய, தூய வாழ்வை மேற்கொண்டு உங்கள் பண்புகளை வளர்த்துக் கொள்ளுங்கள்.

உடல், மனம், ஒழுக்கம், ஆன்மீகம் ஆகிய அனைத்திலும் வலுப்பெறுங்கள். நிலையான அமைதியையும், ஆனந்தத்தையும் ஞானத்தையும் எய்தித் துய்த்து அனுபவியுங்கள்.

''எழுமின்! விழிமின்! வெற்றி முனையைச் சேரும் வரை தளர்வு கொள்ளாதீர்!''

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!

# விடுதலை

எத்தனையோ போர்கள் நடந்தன. கடவுள் பெயராலும் மதத்தின் பெயராலும் எவ்வளவோ அக்கிரமச் செயல்கள் செய்யப்பட்டன.

'கடவுள்' 'மதம்' ஆகிய இரண்டுந்தான் போர்கள் நடப்பதற்கும், அக்கிரமங்களுக்கும் காரணங்களாக உள்ளன என்று மனிதன் எண்ணி, அதை வீணானது என ஒதுக்க நினைத்தான். ஆனால் அவ்வாறு செய்ய இயலுமா? முடியாது. முடியவே முடியாது. அறியாமையினால் எதை வேண்டுமானாலும் முட்டாள்தனமாகப் பேசலாம்!

'கடவுள்' என்பதனைப் பலர் இன்னும் புரிந்து கொள்ளவில்லை. பலர் கடவுள் என்ற வார்த்தையை ஏதோ ஒரு வேடிக்கை வார்த்தையாக உபயோகிக்கின்றனர்.

'கடவுள்' உனக்குள்ளேயே உள்ள ஒன்று. அப்படியிருக்க அதை எப்படி மறுக்க முடியும்? கடவுள் இல்லையென்று மறுப்பதால் நீ உன்னையே இல்லையென மறுப்பதாகப் பொருள். இது எப்படி

இயலும்? நீ உயிருடன் இருக்கிறாய் என்று கூற எத்தகைய ருசு வேண்டும்? எத்தனைச் சாட்சிகள் தேவை? இது எவ்வளவு நிர்மூடத்தனமான குழப்பம் பாருங்கள்!

காரணமில்லாமல் ஏதும் நடப்பதில்லை. கடவுள் ஒரு மகா காரணமானால் இந்த அகிலமே அதன் விளைவு.

ஒன்றுமில்லாத ஒன்றிலிருந்து யாதொன்றும் வருவதில்லை.

உணர்வற்ற சக்தி அல்லது உயிரற்ற பொருள் உயிர்ச்சார உணர்வை உண்டாக்க முடியாது. உயிர்ப் பொருள்களையும் தோற்றுவிக்க இயலாது. உயிர்ச்சார உணர்வு உயிர்ச்சாரத்திலிருந்து மட்டுமே தோன்ற முடியும்.

தன்னில் தானே உயிர்ச்சார உணர்வாக வியாபித்துள்ள ஒன்றே கடவுள். இந்த அகிலத்தில் நாம் காணும் அனைத்து ஆற்றல்களும், அனைத்துச் சக்திகளும், எல்லா இயக்கங்களும் ஒன்றாகச் சேர்ந்து திரண்டு எழும் கூட்டுச் சக்தியே அது. உண்மை அப்படியிருக்க நீங்கள் எப்படி 'கடவுளே கிடையாது! என்று மறுத்துக் கூற முடியும். இது அறியாமையேயொழிய வேறொன்றுமில்லை.

'கடவுள்' என்ற வார்த்தை மிகவும் பழசாகிப் போன ஒன்று. மனிதன் அதை ஒரு பொருளில்லாத வார்த்தையாக எண்ணுகிறான்.

'கடவுள் இல்லை' என்று சொல்பவன், தான் மண்டியிட்டு வணங்கக் கூடிய ஏதோ ஒரு மகா சக்தி அனைத்துக்கும் பின்னணியில் இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் அந்தரங்க மாகத் தெரிந்து வைத்திருக்கிறான்.

'கடவுள்' என்ற வார்த்தையை உபயோகிக் காத மனிதன் 'இயற்கை' 'முடிவான பேருண்மை' 'மகாசக்தி' 'மகா காரணம்' போன்ற வார்த்தை களை உபயோகிக்கிறான். வார்த்தைகள் வேண்டு மாயின் மாறுபடலாம். ஆனால் அவை குறிக்கும் 'பொருள்' என்னமோ ஒன்றுதான்.

ஒன்றுமே தெரியாத அப்பாவி மனிதன்கூட 'என் உடல், என் புலன்கள், என் மனம்' என்றெல் லாம் கூறுகிறான். யாருமே 'அவனே உடல்' 'அவனே புலன்கள்' 'அவனே மனம்' என்று சொல்வதில்லை.

அப்போது அதற்கு என்ன என்ன அர்த்தம் உண்டாகிறது? ஏதுமறியாத அப்பாவிகூட தன்னை உடல் என்றும், புலன்கள் என்றும், மனம் என்றும் ஒப்புக் கொள்வதில்லை.

பின்னர் நீ யார்? அதைக் கண்டுபிடி. உனது உண்மையான இயற்கை நிலையைக் கண்டறிவதற் காக வகுக்கப்பட்டுள்ள வழிகளையும் வரையறுக் கப்பட்டுள்ள விதிகளையுமே, மதம் அல்லது தத்துவம் என்று கூறுகிறோம். ஆதலின் கடவுள் அல்லது மதம் உலகில் நடக்கும் போர்களுக்கும்,

இரத்தக் களறிகளுக்கும் காரணம் என்று சொல்வது சரியல்ல. அறியாமையும் விஷயங்களைச் சரிவரப் புரிந்து கொள்ளாமையுமே வெறுப்புக்கும் சண்டைக்கும் காரணங்களாக உள்ளன.

ஒரு வட்டம் ஒரே மையப் புள்ளியுடன் தானிருக்கும். ஆனால் அதன் ஆரங்கள் எண்ணிலடங்காதவையாக உள்ளன. அது போலவே இந்த அகிலம் ஒரே கடவுளைத்தான் கொண்டுள்ளது. ஆனால் 'மதங்கள்' எண்ணிலடங்காதவையாக இருக்கின்றன.

முடிவான பேருண்மையாக இருப்பது ஒன்றே ஒன்றுதான். இது போன்ற நிலையில் எந்த ஒரு தனிப்பட்ட தேசமோ அல்லது எந்த ஒரு தனிச் சாத்திர நூலோ அதைத் தன்னுடையதுதான், தனக்கு மட்டுமேதான் சொந்தம் என்று உரிமை கொண்டாட முடியாது. அதைப் பெற பாடுபடுகின்றவர்களுக்கு மட்டுமே அது கிடைக்கிறது.

எத்தனையோ பேர் கால காலமாக உழைத்து சிறுகச்சிறுகச் சேர்த்து வைத்ததே இப்போதுள்ள இந்த நாகரீக அமைப்பு. இது ஒரு தனிப்பட்ட மனிதனால் செய்து அளிக்கப்பட்டதல்ல!

ஒரு தோட்டக்காரன் அவன் பராமரிக்கும் தோட்டத்தில் உள்ள எல்லாச் செடிகளையும் ஒரே மாதிரிதான் பார்த்துக் கொள்கிறான். ஆனால் செடிகளின் வளர்ச்சி மாறுபடுகின்றன.

ஒரே மரத்திலுள்ள இரண்டு இலைகளும், இரண்டு மலர்களும், இரண்டு பழங்களுங்கூட ஒரே மாதிரியாக இருப்பதில்லை. இது ஓர் அதிசயம்! அது போலவே ஒரு தந்தையானவன் தன் குழந்தை களுக்கு ஒரே மாதிரியான உணவையும், ஒரே ஆசானையும், ஒரே மாதிரியான சூழ்நிலையையும் அமைத்துத் தந்து தன் சொத்தையும் சரிசமமாகப் பங்கிட்டுத் தருகிறான். ஆனால் அவன் குழந்தைகள் வெவ்வேறு வகையாக வளர்கின்றன.

சிலர் கோடீசுவரர்களாகின்றனர். மற்றும் சிலர் நாடோடிகளாகவும், கொள்ளையர்களாகவும் ஆகின்றனர்.

சிலர் பாடுபட்டு உழைத்து, தங்கள் செல்வத் தைச் சேர்க்கின்றனர். வேறு சிலர் பணத்தை ஊதாரித்தனமாகச் சிலவழித்து ஏழைகளாகின் றனர். இதற்கு யார் பொறுப்பு?

திறமைகள் மாறுபடுகின்றன. புரிந்து கொள்ளும் ஆற்றல்களும் ஒரே மாதிரியாக இருப்ப தில்லை. ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு தினுசாக வித்தியாசப்படுகின்றன. இவை அனைத்தையும் எப்படிச் சமமாக்க முடியும்?

செய்யும் தொழிலை எடுத்துக் கொண்டால் அதற்குப் பலன் கிடைப்பது உண்மை. நாம் எதை விதைக்கிறோமோ அதையே அறுவடை செய் கிறோம்.

கடந்த காலத்தில் ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் வடிவில் என்னென்ன விதைத்தோமோ அதன் விளைச்சலையே இப்போது அறுவடை செய்கிறோம். உங்களது கடந்த கால ஆசைகளும் எண்ணங்களும் செயல்களுமே உன்னை இந்த நிலைக்கு ஆளாக்கி இருப்பதும், இப்போது நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பதுமாகும்.

வாழ்க்கையில் உங்களுக்குள்ள இப்போதைய வாழ்வும் தாழ்வும் நீங்கள் கடந்த காலத்தில் செய்த நல்லதுங் கெட்டதுமான செய்கைகளால் விளைவதேயாகும். ழுநீங்கள் முற்பிறவியில் செய்த நல்ல செய்கைகளாலும் தீவினைகளாலும் உங்களுடைய தற்போதைய வாழ்வும் தாழ்வும் ஏற்படுகின்றன என்றால், உங்களுடைய எதிர்கால வளர்ச்சியும் வீழ்ச்சியும் நல்லதும் கெட்டதும் தற்போது நீங்கள் எண்ணும் எண்ணங்களையும் நீங்கள் செய்யும் செயல்களையும் பொறுத்தே அமைகின்றன. அதனால் உங்களுடையசெல்வ நிலைக்கும் வறுமை நிலைக்கும் நீங்களேதான் பொறுப்பாளிகள்.

வாழ்வில் வெற்றி கண்டு, சிறப்புடன் வாழ வேண்டுமானால் உயர்ந்த லட்சிய வாழ்வைக் கடைப்பிடித்து கடுமையாக உழைக்க வேண்டும்.

உங்கள் வாழ்நாளை சோம்பல் மிகுதியாலும் உதவாக்கரை வம்பளப்பிலும் வீணடிக்காதீர்கள்.

பணக்காரனாகவோ ஏழையாகவோ இருப்பதும் அல்லது செல்வந்தரின் குடும்பத்தில் பிறப்பதோ

ஏழைக் குடும்பத்தில் பிறப்பதோ பூர்வ கர்மவினை யினால் (முற்பிறவியில் செய்த நல்லது அல்லது கெட்ட செயல்களினால்) விளையும் விளைவுகளே யாகும். அப்படி இருக்கும்போது செல்வந்தர்களை வெறுப்பது ஏன்? ஒரு தேசத்திற்கு செல்வந்தர் களும் தேவையானவர்களே.

விவசாய நிலங்களுக்கு ஒரு பெரிய அணை இருக்குமானால் அதிலுள்ள தண்ணீரை மழை யில்லாத காலத்தில் நிலங்களுக்குப் பாய்ச்ச உதவும் அதேபோல ஒரு பணக்காரனிடமுள்ள பணம் பஞ்ச காலத்திலும், யுத்த காலங்களிலும் ஏழைகள் உயிரைக் காப்பாற்ற உதவும். அவ்வாறிருக்க பணக்காரரை வெறுப்பது ஏன்?

ஓர் ஆலைத் தொழிலாளி பொறுப்பில்லாத வனாக இருந்தாலும் அவனுக்குச் சேர வேண்டிய கூலித் தொகை என்னமோ கிடைத்து விடுகிறது. வேலை முடிந்த பிறகு அன்றைய இரவு பூராவும் அவனுக்கு முழு ஓய்வு கிடைக்கிறது. ஆனால் ஆலை நிறுவனருக்கு மிகப்பெரிய பொறுப்புகள் உள்ளன.

வேலை நேரம் போக மீதமுள்ள ஓய்வு நேரத்திலும் அவர் தன் ஆலையின் எதிர்காலத் திட்டத்தைக் குறித்து சிந்திக்க வேண்டியுள்ளது. அவருடைய வியாபாரம் நசித்தால் ஆலையை மூடிவிட வேண்டிய நிலை ஏற்படுகிறது. தனது எதிர்காலத்தைக் குறித்தே வெகுவாகக் கவலைப்

பட நேரிடுகிறது. அவர் உழைத்த கடும் உழைப்புக்கு யார் ஈட்டுத்தொகை உதவப் போகிறார்கள்? நிலைமை அப்படி இருக்கும்போது ஏழைகளின் இரத்தத்தை உறிஞ்சுபவர் என்று அவரை ஏன் சொல்வது? நீங்கள் எதற்காகச் செல்வந்தரை வெறுக்கிறீர்கள்? இவ்வாறு செய்வது எப்படி நியாயமாகும்?

அழிப்பது சுலபம். ஆக்குவதுதான் மிகவும் சிரமம். புரட்சி செய்வது எளிது, உயர்ந்த பண்பாளனை உருவாக்குவது மிகவும் சிரமம். நவீன காலத்து மனிதன் சுதந்திரத்தின் பெயரால் பழமையாக இருந்த நல்ல விஷயங்களை எல்லாம் எதிர்த்துப் புரட்சி செய்தான். அதே சமயத்தில் அவனுக்குத் தன் காலிலேயே சுயமாக நிற்க முதுகெலும்பில்லை. அடித்தளம் இல்லாமலேயே மாளிகை கட்ட எண்ணுகிறான்.

'விடுதலை' என்னும் வார்த்தையை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. தன் தூய்மையற்ற மனம் போனபடி எல்லாம் ஆட்டம் போடுவதுதான் 'விடுதலை' என்று நினைக்கிறது நாகரீக சமூகம். இதுசரிதானா? இல்லவே இல்லை! தூய்மையற்ற மனம்போனபடி யெல்லாம் செயல் புரிவது அப்பட்டமான அடிமைத்தனமே ஒழிய வேறொன்றுமில்லை.

தன் மனத்திற்கும் புலன்களுக்கும் அடிமையாகிப் போன மனிதன் தன்னை எப்படிச் சுதந்திரமானவன் என்று கூறிக் கொள்ள முடியும்? ஒருவன்

தன்னைச் சுதந்திர மனிதன் என்று சொல்லிக் கொள்வது நியாயத்திற்குப் புறம்பானது.

மாறாக ஒருவன் தன் மனத்தையும் புலன்களையும் அடக்கியாளக்கூடிய எஜமானனாக இருந்தால் அவன் தன்னைச் சுதந்திர மனிதன் என்று சொல்லிக் கொள்ளலாம்.

ஒவ்வொரு உயிரின் சுயமான இயக்கமும் 'விடுதலை' பெற வேண்டியே இயங்கிக் கொண்டிருக்கிறது. அதை எவ்வாறு பெறுவது என்பது ஒரு சிலருக்கே தெரியும். பெரும்பாலானவர்கள் புலன் போகங்களை அனுபவிப்பதனால் மட்டுமே மகிழ்ச்சியோடு வாழ முடியும் என்று நினைக்கிறார்கள். இத்தகைய மகிழ்ச்சியைப் பெறுவதற்காகவே இந்த நாகரீக உலகம் நல்லொழுக்கத்திற்கான சம்பிரதாயங்களையும் நேர்மைக்கான நற்குணங்களையும் காற்றில் பறக்க விட்டு விட்டது. இதனால் உலகம் சீர்திருந்தியதா? நாகரீக சமூகத்தை மேம்படுத்தியதா? இல்லவே இல்லை. மனிதனை அது குழப்பி ஆபாசமாக்கி நிம்மதி இழக்கச் செய்திருக்கிறது. மனக்கட்டுப்பாடு இல்லை என்றால் அமைதியோ மகிழ்ச்சியோ செல்வவளமோ கிடைக்கவே கிடைக்காது. ஆதலின் மனக்கட்டுப்பாடு மிக மிக அவசியம். மனஒருமைப்பாடு அடைவதில் பல இரகங்கள் உள்ளன. ஒருவன் மிகவும் விரும்பி நேசிக்கும் ஒரு பொருளின் மீது வெகு எளிதில் மனம் ஒருமுகப்பட்டு நின்று விடுகிறது. இதைச் சுயமான ஒருமுகப்பாடு என்று கூறுகிறோம்.

உடலுறவுப் பருவம் வரும்போது காட்டு ஆண் மிருகங்கள் ஒன்றாடொன்று சண்டையிட்டுக் கொண்டு இறந்தும் விடுகின்றன.

ஒரு விஞ்ஞானி ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட பொருளில் அவன் மனத்தை ஒருமுகப் படுத்துகிறான். செய்தித் தாள்கள் அல்லது நெடுங் கதைகள் படிப்பதிலே பழகிப் போன ஒருவன் புத்தகம் படிப்பதிலேயே பல மணி நேரங்களைக் கழித்து விடுகிறான். இங்கே கூறப்பட்டுள்ள அனைத்து விஷயங்களிலும் மனம் சுயமாக ஒரு முனைப்படும் வகையைச் சேர்ந்தவை. ஆனால் நமக்குத் தேவைப்படுவது நாம் விரும்பும்போது மனம் ஒருமுகப்பட வேண்டும். ஒரு சிலரிடமே இந்த ஒருமுகப்படுத்தும் திறன் இருக்கிறது. இத்தகைய ஒருமைப்பாட்டை எய்துவதற்கு ஒருவருக்குப் பயிற்சி தேவை. கீழ்த்தர உயிரினங் களில் இந்தப் பயிற்சி முடியாது. மனிதனால் மட்டுமே இதைச் செய்ய இயலும். அப்படியாயின் ஏன் நீங்களும் இது போன்ற மனம் ஒருமுகப்படும் திறனை எய்தக் கூடாது? இந்த மன ஒருமைப் பாட்டைப் பெறுவதற்காக எவ்வளவோ பேர் நரக வேதனையைக் கூட அனுபவிக்கிறார்கள்.

முழுக்க முழுக்க நல்லது அல்லது முழுமையுமே கெட்டது என்று சொல்லக் கூடிய வகையில் எந்த ஒரு பொருளோ அல்லது செயலோ இருப்பதில்லை. ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு செயலும்

நல்லவதும் கெட்டதுமான இரண்டும் கலந்தே இருக்கும்.

அதனாலேயே ஒரு பொருள் அல்லது செயல் அதிக நன்மையைத் தந்து குறைந்த தீமையை விளைவிக்கும்போது அதை ஒரு நல்ல பொருள் அல்லது நல்ல செயல் என்கிறோம். அது போலவே ஒரு பொருள் அல்லது செயல் மிகுந்த தீமையையும் குறைந்த நன்மையை விளைவிக்கும்போது அதை ஒரு கெட்ட பொருளென்றும் கெட்ட செயலென்றும் குறிப்பிடுகிறோம்.

ஒரு தேனீ பலவகையான மலர்களின் மீது அமர்கிறது. ஆனால் அது தேனை மட்டுமே எடுத்துக் கொள்கிறது. அதுபோல எல்லா இடங்களிலுமுள்ள நல்லதை மட்டும் திரட்டிக் கொள்ளுங்கள்.

ஒரு மகா பாவியிடம் உங்களிடம் இல்லாத சில நல்ல குணங்கள் இருக்கும். ஆதலின் புராதன கலாசாரங்களில் உனக்கு அளிப்பதற்காக சில நல்லனவும் இருக்கும்.

ஒவ்வொரு உயிரினத்துக்கும் பிறப்புரிமையாக இருப்பது விடுதலை. இதை எய்துவதற்கு ஒவ்வொரு உயிரும் சுயமாகவே இயங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் பெரும்பாலான உயிர்கள் தவறான பாதையில் மாறிச் செல்கின்றன.

பலரும் புலன் போகங்களினால் மட்டுமே மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்றெண்ணு

கின்றனர். புலன் போகங்கள் ஒருவனுக்கு உண்மை யான மகிழ்ச்சியை உண்டாக்குகிறதா? இல்லவே இல்லை. அளவு கடந்த புலன் போகங்களை அனுபவித்துக் கொண்டே போனாலும்கூட அது உண்மையான மகிழ்ச்சியை அளிப்பதில்லை. அவை கணநேர இன்பத்தைத் தருகின்றனவே யொழிய அதன் பிறகு அவன் பெற்ற மகிழ்ச்சியை இழக்கச் செய்து மனவேதனையையே விளைவிக் கிறது.

வேறு சிலர் கடவுளையும் மதத்தையும் எதிர்த்துப் புரட்சி செய்தனர். ஆனால் கடவுளும் மதமும் நிரந்தரமாக வாழ்கிறது. புரட்சியாளர்கள் மட்டுமே செத்துப் போனார்கள்; செத்துக் கொண்டி ருக்கிறார்கள்.

வேறு சிலர் 'அவிழ்த்து விடப்பட்ட சிற்றின்ப போகமே சுதந்திரத்தைத் தருகிறது. அதனால் அவர்கள் ஒவ்வொரு பெண்ணுக்காகவும் ஒவ்வொரு மனிதன் இருக்கிறான் என்றும் ஒவ்வொரு மனித னுக்காகவும் ஒவ்வொரு பெண் இருக்கிறாளென்றும்' நினைத்து விட்டார்கள். அவிழ்த்து விடப்பட்ட இந்த காமபோகம் மனிதனுக்கு சுதந்திரம் கொடுத்து விட்டதா, இல்லவே இல்லை!

அது கிரிமினல் வழக்குகளை அதிகப்படுத்தி விட்டது. நரம்புத் தளர்ச்சி வியாதிகளை அதிகரித்து விட்டது. மனோ வியாதிகளை ஏராளமாக்கிவிட்டது.

ஒரு பள்ளி ஆசிரியர் தன் வகுப்பில் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த வகுப்பில் ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் இருந்தனர். அழகான இளம் பெண் குழந்தைகளைப் பார்த்த ஆசிரியருக்குக் காம உணர்ச்சி எற்பட்டது. அவர் வகுப்பை மத்தியிலேயே விட்டுவிட்டு வெகு அருகிலி ருந்த தன் வீட்டிற்குச் சென்று தன் மனைவியுடன் சிற்றின்பத்தை அனுபவித்தார். பிறகு அவர் வகுப் பறைக்குத் திரும்பி மாணவர்களிடம் தனக்குள்ள சுதந்திரத்தைப் பற்றிப் பேசினார். இந்த ஆசிரியரைப் பொறுத்த வரையில் 'சுதந்திரம்' என்ற வார்த்தையை 'சிற்றின்பச் சுதந்திரம் என்ற அளவுக்குப் புரிந்து கொண்டிருந்தார்.

இதிலிருந்து ஒருவர் இந்த நாகரீகக் கலாசாரம் எங்கு போய் நிற்கிறது என்பதையும் இந்த நாகரீக சமூகம் 'சுதந்திரம்' என்ற வார்த்தைக்கு என்ன பொருள் கொண்டுள்ளது என்பதையும் தெரிந்து கொள்ளட்டும்.

உண்மையான சுதந்திரம் புலன் போகங்களில் இல்லவே இல்லை. குவிந்துள்ள செல்வம், பெயர், புகழ் எல்லாமுங்கூட ஒருவனுக்கு விடுதலையையும் மகிழ்ச்சியையும் கொடுத்து விடாது.

மனத்தைக் கட்டுப்படுத்தி உன்னுடைய மூலா தாரத்துக்கே திரும்பிச் சென்று உங்களது உண்மை யான இயற்கைத் தன்மையை அறிந்து கொள்வது தான் உண்மையான சுதந்திரம்.

மனக் கட்டுப்பாடு, மூலாதாரத்துக்கே திரும்பிப் போதல் போன்ற வார்த்தைகளெல்லாம் பலருக்குப் புதுமையான கருத்தாகத் தோன்றக் கூடும். வேறு சிலர் இதைப் பற்றி ஒன்றுமே அறிந்திராத இருளில் மூழ்கிக் கிடக்கிறார்கள். மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமானால் ஒருவர் தூய, எளிய, தெய்வீக வாழ்க்கையை மேற்கொண்டு தினந்தோறும் தியானத்தைப் பயில வேண்டும்.

மனிதனுடைய முன்னேற்றத்திற்கு மனம் எப்போதுமே எதிர்த்துப் போவதில்லை. அது உடல் ஆரோக்கியத்துடனும் மனோதிடத்துடனும் ஒழுக்க சீலத்துடனும் இருங்கள் என்கிறது. நல்லவனாகவும் அன்பு கொண்டவனாகவும் கண்ணியம் மிக்கவனாகவும் இதமான குணத்துடன் இருங்கள் எனக் கூறுகிறது. நோயாளிக்கும் முதியோருக்கும் தேவைக்காக அலைபவனுக்கும் உதவி செய்யுங்கள் என்றும் உங்களுக்கு உபதேசிக்கிறது. இவற்றை எல்லாம் செய்து மிக உயர்ந்த குறிக்கோளான சுதந்திரத்தை எய்துங்கள் என ஊக்குவிக்கிறது.

உண்மையில் ஒரு நாடு கல்வி, முறை, மதம் ஆகிய மூன்றுக்கும் பொதுவான குறிக்கோளாக இருப்பது எது? மனிதனை வளம் மிக்கவனாகவும் அமைதியைப் பெறக் கூடியவனாகவும் மகிழ்ச்சியில் திளைக்கக் கூடியவனாகவும் செய்வதேயாகும்!

ஆதலின் சுதந்திரம் என்றால் மேலான குறிக் கோளை எய்துவதாகும். மனித வாழ்வின் குறிக் கோளாக உள்ள அதை இறையுணர்வு பெறுவது என்றும், கடவுளைக் காண்பது என்றும் நிர்விகல்ப சமாதி நிலையை (ஆழ்நிலைத் தன்மை) எய்துவது என்றும் பொருள் கொள்ளலாம்.

# விந்துச் சக்தியின் மேம்பாடு

## (SEX-SUBLIMATION)

BY

SWAMY NARAYANANANDA



**From:**

**The Complete Works Of Swamy Narayanananda.**

**Vol–16.**

# விந்துச் சக்தியின் மேம்பாடு

மனம் உடல் ஆகியவற்றின் மாபெரும் ஆற்றலாக இருப்பது விந்துச் சக்தியே. மனித உடலில் அளப்பரிய வலிமைபடைத்திருப்பது இதுவேயாகும். மேலும் இது அனைத்து உருவங்களையும் எல்லா ஆற்றல்களையும் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறது. மனமும் உடலும் தமக்கான வலிமையையும் உயிர்ப்பையும் இந்த விந்துச் சக்தியிடமிருந்தே பெறுகின்றன. இதே சக்தி அல்லது ஆற்றலை விந்து கசிவுத் திரவமாக உருவாக விடாமல் அதைக் கட்டிக் காத்து 'ஓஜஸ் எனும் சூக்கும ஆற்றலாக மாற்ற வேண்டும். அவ்வாறு செய்தால் அதுவே ஆன்மீக வாழ்வுக்கான மூலதனமாக அமையும்; இன்றேல் மரணத்திற்குக் காரணமாகும். காமவெறிச் செயல்களை அடியோடு ஒழித்துக் கட்டினால் மனமானது அதனுடைய இரும்புப் பிடியிலிருந்து மீண்டு சுய ஆற்றல் நிறைந்து ஒளிர்கிறது.

விந்துச் சக்தி இரண்டு பிரதான திசைகளை நோக்கி நகர்கிறது. அதாவது கீழ் நோக்கிப் போவது ஒன்று. மேலேறிச் செல்வது பிறிதொன்று.

காமக் களியாட்டங்கள் உருவில் கீழ்நோக்கி விரையமாகிறது. ஆனால் ஒருவர் எண்ணம், சொல், செயலில் பிரம்மச்சரியத்தைக் (கற்பு நெறியைக்) கடைப்பிடித்தால் இதே சக்தி மேல் நோக்கி ஏறுகிறது.

ஒருவனிடம் விந்துச் சக்தி விரையமாகிக் கொண்டிருக்குமானால் அவன் மனமும் உடலும் வலிமை குன்றிப் பலவீனமடைகிறது. அத்தகைய ஆண், பெண்ணிடம் நாம் எந்தவித உயர்வையோ, சுய சிந்தனையையோ எதிர்பார்க்க முடியாது. காமக் களியாட்டம் மனம் உடல் ஆற்றல்களைச் சிதறடித்து விடுகின்றது.

வாழ்க்கையின் எல்லாப் படித்தரங்களிலும் விந்துச் சக்தியானது மாறுபட்ட வகைகளில் வியாபித்து நிற்கின்றது. அது மன வளர்ச்சியின் மூலமும், உடல் வளர்ச்சி மூலமும் வெளிப்பட்டு பிரகாசிக்கின்றது. விந்துச் சக்தியைக் கட்டிக் காக்கின்ற போது அது சிந்தனைத் திறனையும் நினைவாற்றலையும் மனம் உடல் வலிமையையும் பெருக்குகிறது. விந்துச் சக்தியை அதனுடைய ஆபாசப் போக்கிலிருந்து (காம ஈடுபாட்டிலிருந்து) தடுத்து நிறுத்தினால் அது ஒருவனுடைய கற்பனை வளத்தையும், நினைவாற்றலையும் மேலும் வளப்படுத்துகிறது. விந்துச் சக்தியைக் கட்டிக் காத்தால் அது படைப்பாற்றலை வெளிப்படுத்துகிறது. தொடர்ந்து கலை, கவிதை, இலக்கியம், விஞ்ஞானம் போன்ற

வற்றில் உள்ள ரசனைகளை ரசிக்கும் திறனை வளர்க்கிறது.

பெரும்பாலோரிடம் இந்த மாபெரும் சக்தி காம நுகர்வினால் வீணாகி உயர் நிலை ஆற்றல்களை வெளிப்படுவதற்கான வாய்ப்பே அற்றுப் போகிறது. இந்தச் சக்தி வீணாகிப் போகும்வரை ஒருவர் மனத்தின் உயரிய ஆற்றல்களைப் பெருக்கிக் கொள்வதற்கான வாய்ப்பைப் பெறவே முடியாது.

கண்டிப்பான பிரம்மச்சரிய வாழ்க்கை ஒருவருடைய உயரிய மனோ வல்லமையை வளர்ப்பதோடு மட்டுமன்று, அவர் ஆயுளை நீட்டித் தருகிறது. மனச் சாந்தியை நிரந்தரமாக்குகிறது.

மோட்ச கதியை எய்த பிரம்மச்சரியமே பிரதான ஆயுதம்.

நடத்தை கெட்ட ஒரு நெறி தவறியவன்கூட ஏராளமான செல்வத்தை வேண்டுமாயின் குவித்து விடலாம். உலகில் பெரும் புகழையும் பெற்றுவிடலாம். ஆனால் ஆன்மீக உலகில் இவனுக்கு இடமே இல்லை.

மதத் துறையில் உள்ள ஒரு மாணவன் கண்டிப்பான பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப் பிடிக்காமல் போனால் ஒரே ஓர் அங்குலம்கூட முன்னேற முடியாது.

தர்மம் (அறவழி) மிகமிகச் சூக்கும நிலை படைத்தது. சாத்திர நூல்களைப் படிப்பதால்

மட்டுமே அதை அறிந்து கொள்ளலாம் என்பது இயலாது. இரவும் பகலும் இடைவிடாது சாத்திரங் களைப் பயின்றாலும், எல்லாச் சாத்திரங்களிலு முள்ள ஒவ்வொரு சொல்லையும் கரைத்துக் குடித் தாலும் சிலர் அந்தச் சாத்திரங்களின் மெய்ப் பொருளைப் புரிந்து கொள்வது இயலாது.

தர்மத்தின் (அறவழியின்), சாத்திரங்களின் மெய்ப் பொருளை அறிவதற்கு மனம் தூய்மை அடைந்து சூக்கும நிலைபெற்று, ஒருமுகப்பட வேண்டும்.

மனத் தூய்மையும், மனத்தின் சூக்கும நிலை யும் ஒரு முனைப்பாடும் பிரம்மச்சரியம் ஒன்றினால் தான் எய்த முடியும்.

உட்கொள்ளும் உணவிலும் பானத்திலுமுள்ள சத்துப் பொருட்கள், திடப் பொருளாகவும். திரவ மாகவும் மாற்றம் பெறுகின்றன. அவற்றிலுள்ள சக்கைப் பகுதி மலம், சிறு நீராகி வெளியேற்றப் படுகிறது.

திட, திரவப் பொருள்களிலுள்ள மிகச் சத்துள்ள பொருட்கள் இரத்தமாகிறது. இரத்தம் தசையாகிறது. சதை கொழுப்பு நிலை பெறுகிறது. கொழுப்பிலிருந்து எலும்பு உருவாகிறது. எலும்பின் சாரத்திலிருந்து ஊட்டப் பொருள் உருவாகிறது. இந்த ஊட்டப் பொருள் சாரத்திலிருந்து விந்து கிடைக்கிறது.

மேலும் நாற்பது சேர் (நாற்பது கிலோ கிராம்) எடையுள்ள உணவிலிருந்து ஒரு சேர் தூய இரத்தம் உண்டாகிறது. ஒரு சேர் இரத்தத்திலிருந்து இரண்டு தோலா (சுமார் இருபத்தைந்து கிராம்கள்) விந்து கிடைக்கிறது. இதையே வேறு வகையாகக் கணக்கிட்டுச் சொல்ல வேண்டுமென்றால் ஒரு துளி விந்து நாற்பது துளி இரத்தத்திற்குச் சமம்!

ஒவ்வொரு உடலுறவின்போதும் ஒருவர் ஒன்றரைத் தோலா நிறையுள்ள விந்துவை இழக்கிறார். முப்பது சேர் உணவிலிருந்து கிடைக்கும் சத்தை ஒருமுறை உடலுறவினால் வீணடிக்கிறார்.

ஒருமுறை உறவினால் ஏற்படும் உடல் வலிமை, மனோ சக்தி போன்றவற்றின் இழப்பு இருபத்து நான்கு மணி நேரம் இடைவிடாது ஆழ்ந்து படிப்ப தாலோ அல்லது மூளைக்கு வேலைகொடுப்பதாலோ ஏற்படும் இழப்புக்குச் சமம். அது மட்டுமன்று எழுபத்தியிரண்டு மணிநேர கடின உடலுழைப் பினால் விளையும் சக்தியின் இழப்புக்கு இது சமமானது.

இத்தகைய உடலுறவுகளினால் ஒருவனுக்கு ஏற்படும் ஆற்றலின் பேரிழப்பு எத்தகைய பரிதாபத் துக்குரியது என்பதைப்புரிந்து கொண்டீர்களல்லவா? பல்வேறு புலன் போகங்கள், களியாட்டங்களில் காமக் களியாட்டம் ஒன்று மட்டுமே மிக மிகத் தீவிர மான வேகம் படைத்தது. ஒவ்வொரு முறை

உறவும், உடல் கட்டுக் கோப்பையே தளர்த்திப் பிழிந்து உடம்பையே குலுக்கி விடுகிறது. அது உடம்பையும், மனத்தையும் சீர்குலைத்து விடுகிறது. உடலுறவு மனத்தையும், நினைவயும், உள்ளுணர் வின் ஆற்றலையும் பலவீனப்படுத்துகிறது. அறிவை மந்தப்படுத்தி உடல் ஆரோக்கியத்தையே சிதற அடித்து விடுகிறது. யார் அபரிமிதமான காமாந்த காரத்தில் திளைக்கிறார்களோ அவர்கள் தீராத வியாதிகளாலும், பலவீனத்தாலும், சொல்லொணா வேதனைகளாலும் அல்லலுறுகிறார்கள். அவர்கள் அகால மரணமடைகிறார்கள்.

புலன் உணர்வும் புலன் போகங்களும் கட்டுப் படுத்தப்பட வேண்டும். இந்த மாபெரும் உடல் ஆற்றலை மனோ சக்தியாக மாற்ற வேண்டும். இதைக் கண்டிப்பான பிரம்மச்சரியத்தினால்மட்டுமே பெற முடியும். இந்த ஆற்றல் இழப்பைத் தவிர்ப் பதின் மூலம் ஒருவர் மனம், உள்ளுணர்வு, அறிவு, உடல் போன்றவற்றின் சக்தியை அதிகரித்துக் கொள்ளலாம். இது போன்ற சக்தி ஆற்றல் மிகுதி யால் இவ்வுலகில் அளப்பரிய அற்புதங்களைச் செய்யலாம்.

தூய பிரம்மச்சரியத்தினால் எத்தகைய நோயையும் தடுக்க முடியும். பிரம்மச்சரிய இழப் பினால் உடல் தளர்ச்சியுற்று பல்வேறு நோய்கள் உண்டாகின்றன. பிரம்மச்சரிய விரதத்தினால் எத்த கைய நோயையும் அறவே நெருங்கவொண்ணாது களையலாம். ஒரு சாதாரண மனிதன் நோயுற்றால்

குணமடைய நெடுநாட்களாகிறது. பிரம்மச் சாரிக்கோ சீக்கிரம் நோயிலிருந்து நிவாரணம் கிடைக்கிறது.

பயம், கோபம், காமம், வெறுப்பு போன்ற வை நோய்க்கு அடிப்படைக் காரணங்கள். அவை மரணத்தின் தூதர்கள். இவையே உடல மைப்பில் சிலகோளாறுகளைத் தோற்றுவிக்கின்றன. உடல் நலக்குறைவினாலேயே மன நல பாதிப்பும் ஏற்படுகிறது. மன நலமே உடல் நலமும். மனக் கோளாறினாலேயே உடல் கோளாறு ஏற்படுகிறது.

குரூர மனமும், கொந்தளிக்கும் உணர்ச்சி களும், மனக்குமுறல்களும் உடலிலும் மூளையிலும் ரசாயன மாற்றங்களை விளைவிக்கின்றன. உடல் முழுவதும் வியாபித்துள்ள உயிரணுக்களை நஞ்சாக்கி விடுகிறது. உணர்ச்சி வயப்படும் செயல் களில் காமம் ஒன்றே உடலை பெருமளவு குலைத்து விடுகிறது. ஒவ்வொரு முறை மனக் குமுறலின் போதும் லட்சோப லட்சம், கோடானுகோடி சிகப்பு இரத்த அணுக்கள் நாசமடைகின்றன.

இதுபோன்ற பாதிப்புகள் ஒவ்வொரு நாளும் உடலில் ஏற்படுமானால் அதன் விளைவு தீராத நோயும், அகால மரணமும்தான்.

ஒளி வீசும் நீண்ட ஆயுளும் செல்வச் செழிப்பும் நிரம்பிய வாழ்வை அனுபவிக்க தூய பிரம்மச்சரிய மே இன்றியமையாததாகும்.

நன்றாக வளர்ந்து ஐம்பது வயதில் பூத்துக் காய்க்கும் தகுதி படைத்த மரம் இருநூறு ஆண்டு களவரை உயிர் வாழ்கின்றது. ஐந்து அல்லது பத்தே ஆண்டுகளில் பழம் தரும் மாஅல்லது ஆரஞ்சு மரம் இருபத்தைந்து அல்லது நாற்பதே ஆண்டுகள் தான் இருக்கின்றன. நான்கைந்து மாதங்களில் வளர்ந்துஅரும்பி, பூத்துக் காய்க்கும் ஒரு செடியோ அல்லது கொடியோ ஓராண்டு காலமே இருக் கின்றன. ஓர் இளம் காளை மாட்டை அதன் பருவ வயதுவரை சீராகப் பராமரித்து வளர்த்து, அதற்குப் பின்னரும் 'பொலிப்' புக்கு விடுவதில் தக்க பாதுகாப்பு எடுத்துக் கொண்டால் அந்தக் காளை முழு ஆரோக்கியத்துடன் நீண்ட காலம் வாழ்கிறது. பருவமடைந்த பின்னர் ஒழுங்கற்ற, முறையற்ற 'பொலிப்புக்கு' உட்படுத்தக் கூடாது. தவறினால் காளையின் ஆயுள் அல்ப ஆயுளாகி விடும்.

விதையடிக்கப்பட்ட காளைக் கன்று பொலிப் புக்கு வாய்ப்பில்லாததால் அதன் வாழ்நாள் முழுவதும் திட ஆரோக்கியத்துடன் இருக்கிறது. எதிர்மாறாக பசுக்களோடு காளைக் கன்றை அதன் விருப்பம் போல் பொலிப்புக்கு வாய்ப்பளித்தால் அக்கன்று, ஓரிரு ஆண்டுகளிலேயே அடிமாடு ஆகி அற்ப ஆயுளில் போய்விடுகிறது.

தனிமையில் விடப்பட்ட ஒரு யானையோ, காட்டெருமையோ அல்லது குரங்கோ இனச் சேர்க் கைக்கான வாய்ப்பில்லாத காரணத்தால் திடமான

ஆரோக்யத்துடனும் அபார சக்தியுடனும் இயங்கி பூரண ஆயுளுடன் வாழ்கிறது.

ஒரு விளக்கை எடுத்துக் கொள்ளுங்கள். இரவு பூராவும் எரிவதற்கான மண்ணெண்ணையை அதில் நிரப்புங்கள். அந்த விளக்கு சீராக இருந்து ஒழுக்கில் லாமல் இருந்தால் அது இரவு பூராவும் எரிகின்றது. மாறாக அதில் ஓர் ஓட்டை இருந்து எண்ணெய்க் கசிவு இருந்தால் ஒரு சில மணிகளேஅது எரிகிறது.

பிரம்மச்சரிய வாழ்க்கை என்பது வாழ்வுக்கான எண்ணெயை பாதுகாப்புடன் வைத்துக் கொள்வது என்று பொருள். அதன் மூலம் ஒருவர் தான் வாழ வேண்டிய மனித ஆயுள் முழுமையும் ஆரோக்கியத் துடன் வாழ்கிறார்.

பிரம்மச்சரிய இழப்பு என்பது வாழ்வுக்கான எண்ணையில் ஒழுகலுக்குச் சமமானதாகும். இத்த கைய கசிவு அற்ப ஆயுளையும் அகால மரணத்தை யும் உண்டாக்குகிறது.

ஒவ்வொரு முறை உடலுறவும் மனம், உடல் சக்தியில் ஈடு செய்ய முடியாத நஷ்டத்தை உண் டாக்குகிறது. இந்தச் சக்தியின் இழப்பு அதிகரிக்க அதிகரிக்க ஆண்-பெண்ணின் ஆயுள் காலம் குறுகிக் குறுகிக் குறைகிறது.

ஒரு மனித உடல் முழு வளர்ச்சி பெறுவதற்கு இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. இந்த இருபத்தைந்து ஆண்டு வயதுவரை ஆண் அல்லது பெண் எண்ணம், சொல், செயல் மூன்றிலும் தூய

மையான பிரம்மச்சரியத்தைக் கடைப் பிடித்து வாழ வேண்டும். திருமணம் செய்து கொண்ட பின்னரும் உடலுறவில் ஒழுங்கு முறையைப் பின்பற்ற வேண்டும். அந்த ஆண் அல்லது பெண் உடல் வளத்துடனும், மன வளத்துடனும் தீர்க்க ஆயுளோடு வாழலாம்.

ஆண் அல்லது பெண் சத்துள்ள உயர்ந்த உணவும் பானமும் உட்கொள்ளும் நிலையில் மித மான ஒழுங்குள்ள உடலுறவு வாழ்வை மேற் கொண்டால் அதனால் ஏற்படும் சக்தியின் இழப்பு அதிகமாயினும் அவர்களுடைய உடல், மனோ நிலையை வெகுவாகப் பாதிப்பதில்லை. ஒவ்வொரு உடலுறவின் போதும் பெருத்த சக்தி இழப்பு ஏற்படுவது என்னவோ உண்மை. ஆனால் உயர்ந்த சத்துள்ள உணவும் பானமும் உட்கொள்வதால் இந்த இழப்பு ஓரளவு சரிக் கட்டப்படுகிறது.

ஏழ்மையிலுள்ள ஆணோ அல்லது பெண்ணோ உட்கொள்ளும் எளிய உணவினாலோ அல்லது பாதி வயிறே உண்ணக் கூடிய நிலையினாலோ அவதிப்படுகிறார்கள். அந்த நிலையில் உடலுறவில் அவர்களுக்கு ஏற்படும் சக்தியின் இழப்பு ஈடு செய்ய இயலாதது. அந்த ஆண் அல்லது பெண் இழந்த சக்தியை மீண்டும் இட்டு நிரப்ப முடியாத நிலை யில் பெருத்த மனோ, உடல் சீர்குலைவை அனுப விக்கிறார்கள். இதுபோன்றோர் வாழ்க்கை தர்மத் தின் (அறவழியின்) பாதையிலிருது வழுவி மனித

வாழ்வின் குறிக்கோளுக்கு வெகு தூரத்துக்கு அப்பால் விலகிப் போகிறார்கள். மாறாக வறுமையிலுள்ள இந்த ஆண்களும் பெண்களும் பிரம்மச்சரியத்தின் மதிப்பையும் அவசியத்தையும் உணர வேண்டும். கற்பு நெறியுடன் வாழ வேண்டும். பெருத்த வீழ்ச்சியிலிருந்தும் ஆபத்திலிருந்தும் வறுமையின் அவதிகளிலிருந்தும் மீண்டு நல்வாழ்வு வாழலாம்!

ஆண் அல்லது பெண் வறுமைக் கோட்டில் வாழ்பவர்களாக இருக்கக்கூடும். ஆயினும் அவர்கள் தூய பிரம்மச்சரிய வாழ்வைப் பின்பற்றுவாராயின் அவனாகட்டும் அவளாகட்டும் அபரிமிதமான வலிமையையும், அசுர சக்தியையும், துணிச்சலையும், எதையும் தாங்கும் இதயத்தையும் நற்பண்பையும் பெற்றுத் திகழ்வர். உலகாயத சக்தி எதுவுமே அருட் சக்தியை எதிர்த்து நிற்க முடியாது. மேற்கூறிய விளக்கங்களுக்கான அடிப்படைத் தத்துவம் இதுவேயாகும். அருள் வலிமைக்கு ஈடான சக்தி உலகில் கிடையவே கிடையாது. பிரம்மச்சரியத்தில் நிலைத்து நின்று அதில் வெற்றி யடைந்துவிட்டால் அவருக்கு அருள் வலிமை எளிதில் சித்தியாகி விடுகிறது. அது போன்றோர் அருளாற்றல் கைவரப் பெற்றவர்களாகி அருளாட்சி பீடத்தில் அமர்ந்து உலா வருகிறார்கள்.

நூறே ரூபாய் மாத வருமானமுள்ள பெரிய குடும்பத்தைக் கட்டிக்காக்க வேண்டிய ஒருவன் கணக்கிடாமல் கண்மூடித்தனமாக சிலவழிப்பான்.

ஆனானால் அவன் குடும்பத்திலுள்ள அனைவரை யும் பட்டினி, பரிதவிப்பில் ஆழ்த்துகிறான்.

உடலின் உயிர் நாடியாக இருப்பது விந்துச் சக்தி. உடலையும் உள்ளத்தை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள இந்தச் சக்தியின் புனித ஆற்றலே பெரிதும் உதவுகிறது. இதே சக்தியினால்தான் உள்ளமும் உடலும் வலிமையும் வனப்பும் பெற்றுத் திகழ்கிறது. இந்தச் சக்தியை முறையான வழியில் பயன்படுத்தா விட்டால்— இதே சக்தியை முறை யான முறையில் பாதுகாப்புடன் பராமரிக்கா விட்டால் குடும்பம் முழுவதுமே (உடல், புலன்கள், மனம், சிந்தனை வளம்) கடுமையாகப் பாதிக்கப் படுகிறது.

விந்துச் சக்தி விரையமாவதைக் கட்டிக் காத்து அவ்வாறு கட்டிக் காக்கப்பட்ட சக்தி மாபெரும் மனோ சக்தியாக மாற்றமடையும்போது அதையே 'ஓஜஸ் சக்தி' என்கிறோம்.

ஒருவனிடம் எவ்வளக் கெவ்வளவு இந்த 'ஓஜஸ் சக்தி' பெருகுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவனிடம் அருட் சக்தி சுடர் விடுகிறது. அந்த நிலையில் அவனிடம் தோன்றும் ஒவ்வொரு எண்ணமும் சொல்லும், ஒவ்வொரு வார்த்தையும் செய்யும் ஒவ்வொரு செயலும் பூரண முக்கியத்துவம் பெற்று விடுகிறது. எதிர்க்க முடியாத ஆற்றலுள்ள வனாக அவன் திகழ்கிறான்.

மனம், உடல் போன்றவற்றின் ஒவ்வொரு செய்கையின்போதும் உண்பது, பருகுவது, நடப்பது போன்ற செய்கைகளின் போது ஒருவர் ஓரளவு 'ஓஜஸ் சக்தி'யை விரயமாக்குகிறார். இது போன்ற மனோ உடல் செய்கைகள் அனைத்திலும் ஆகும் 'ஓஜஸ் சக்தி' விரயத்தைவிட மிகப் பெருமளவு 'ஓஜஸ்சக்தி' விரயம் ஒரே ஒரு முறை உடலுறவின்போது ஏற்படுகிறது. 'ஓஜஸ்சக்தி' யின் விரயம் என்பது ஒருவருடைய ஆயுளைக் குறைப்பது என்று பொருள். அதைக் கட்டிக் காப்பது என்பது ஒருவர் ஆயுட்காலத்தை அதிகரிப்பது என்று அர்த்தம்.

சாதாரண ஆணும் பெண்ணும் இந்த மாபெரும் சக்தியை (விந்துசக்தியை) தாம்பத்திய உறவினால் விரயமாக்குகிறார்கள்.

ஓர் உண்மையான மாணவன் இதே சக்தியை தனது உடல் ஆரோக்கியத்தையும், மனோவலிமை யையும் வளர்ப்பதில் பயன் படுத்துகிறான்.

மல்யுத்த வீரன் இந்தச் சக்தியை உடல் வலிமையாக மாற்றிக் கொள்கிறான்.

உண்மையான விஞ்ஞானி தனது ஆராய்ச்சியில் மனதை ஒருமுகப்படுத்துவதற்கு இந்தச் சக்தியை பயன் படுத்திக் கொள்கிறான்.

ஆன்மீகவாதி இறை உணர்வு பெறுவதற் கான ஈடுபாட்டில் இந்த சக்தியை முழு முயற்சி யுடன் திருப்பி விடுகிறான்.

ஒரு மாணவன் பிரம்மச்சரியத்தைக் கடைப் பிடிக்காத நிலையில் தான் கற்கும் கல்வியில் வெற்றி பெற முடியாது. அதில் அவன் பிரகாசிக்க வும் முடியாது.

மல்யுத்த வீரன் பிரம்மச்சரியத்தை பின் பற்றாவிடில் உடல் வலிமையையும் வனப்பையும் சரிவரப் பராமரிக்க முடியாது. அவனால் மல்யுத்தக் கலையில் முன்னணியில் நிற்க முடியாது.

ஒழுக்கமற்ற விஞ்ஞானியால் தனது ஆராய்ச்சி களிலும், புதிய கண்டுபிடிப்புகளிலும் வெற்றி பெற முடியாது.

பிரம்மச்சரியத்தைப் புறக்கணிக்கும் ஒரு கவிஞ னிடம் கற்பனை வளம் குறைந்து போகும்!

பிரம்மச்சரியத்தை அலட்சியப் படுத்தும் கலைஞனால் தன் கலையில் புதுமைகளைப் படைக்க முடியாது!

எண்ணம், சொல், செயல் மூன்றிலும் பிரம்மச் சரியத்தைப் பின்பற்றாத ஆன்மீகவாதிக்கு அந்தத் துறையில் முன்னேறவே முடியாது. எல்லா ஆற்றல் களும் பிரம்மச்சரியத்தினாலே கைவரப் பெறு கின்றன,

சுருங்கக் கூறின் சிற்றின்ப தூல நிலை மகிழ்ச்சியை நோக்கி விரைந்து செல்லும் விந்து சக்தியை கட்டிக் காத்து 'ஓஜஸ்சக்தி' எனும் மாபெரும் மனோசக்தியாக உருப்பெற வழிவகுக்க வேண்டும் என்பதேயாகும்.

இதைப் பற்றிய மாறுபட்ட கருத்து நிலவுவதைப் பார்ப்போம்.

பெரும்பாலான மருத்துவர்களின் கருத்து என்னவெனில் விந்துச் சக்தியைக் கட்டுப் படுத்தக் கூடாது என்பதேயாகும். சிற்றின்ப உறவில் சில விடாமல் தடுத்தால் அது நோயாக உருமாறுகிறது என்கின்றனர். பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பவர்கள் நரம்புக் கோளாறு வியாதிகளுக்கு உட்படுகிறார்கள் என்றும் சொல்கின்றனர்.

முழுக்க முழுக்கப் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பது ஆபத்தானது என்றும் அது மூளைக் கோளாறில் கொண்டுபோய்விடும் என்றும் கருதுகின்றனர்.

ஆனால் யோகியானவர் பிரம்மச்சரியமே யோகத் துறையில் வெற்றி பெறுவதற்கு இணையற்றதாக உள்ளது என்று வற்புறுத்துகின்றார். பிரம்மச்சரியம் இன்றேல் யோகம் இல்லை. பிரம்மச்சரியத்தை கடைப்பிடிக்காதவரை யோகியால் யோக மார்க்கத்தில் எந்தவித முன்னேற்றத்தையுங் காண முடியாது!

பன்னிரண்டு ஆண்டுகள் இடைவிடாது பிரம்மச்சரியத்தை எண்ணம், சொல், செயலில் கடைப்பிடிக்கும் ஆணோ பெண்ணோ தமது உடலின் முன் புறத்தில் 'மேதநாடி' (நரம்பு) என்னும் ஒரு தனித் தன்மை வாய்ந்த நாடி தோன்றுவதைக் காணலாம். இந்த நாடி தோன்றி வளர்ந்தால்

அதனால் ஆறாவது அறிவு கிட்டுகிறது. இதன் உதவியால் ஒருவர் முக்காலமும் உணரும் ஆற்றலைப் பெறுகிறார். பிரம்மச்சரியத்தில் ஊன்றி நிற்பவருக்கு இறை நிலையை'ப் பெறுவது மிகவும் சுலபம்.

நிலையான பிரம்மச்சரியத்தை மேற்கொள்ளாமல் 'இராஜயோகத்தைப் பயில்வது ஆபத்தானது. அப்படி மீறிச் செய்தால் அதனால் மூளைக்கோளாறு ஏற்படுகிறது. உண்மை நிலை இவ்வாறிருக்க மருத்துவர்கள் பிரம்மச்சரியத்தினால் தீமைகள் விளைகின்றன என்று புகல்வது ஆதாரமற்றவை. வெறுமனே மாறுபட்ட கருத்து சொல்லிவிட்டால் அது எப்படி நிரூபணம் உள்ளதாகும்? பிரம்மச்சரியத்தினால் மூளைக்கோளாறும் வியாதிகளும் விளையும் என்று சொல்வது அறியாமையாலேயே யொழிய வேறொன்றுமில்லை.

அதிசய ஆற்றல் படைத்தது விந்து சக்திச் என்பதே முடிவான கருத்து! உயர்ந்த மனோசக்தியாக மாற்றாமல் அதைத் தேக்கி வைப்பதும் ஆபத்தானது. தேக்கி வைக்கவும் இயலாது! இந்த விந்துச் சக்தியை மனோசக்தி நிலைக்கு உயர்த்தாமல் தேக்கினால் நரம்புக் கோளாறும் விளைவதற்கு ஏது உண்டு!

இந்த சக்தியை உள்ளபடி உணராமல், சரியான பாதையில் திசை திருப்பாமல் விட்டோமே யானால் அது பல்வேறு உடல், மனோ வியாதி

களை விளைவிக்கும். எனவே திசை திருப்பாமல் தேக்கி வைப்பது ஆபத்தானது; இயலாதது!

'விந்து சக்தியின்மேம்பாட்டை' எய்த கீழ்கண்ட முறைகளால்தான் இயலும். அதாவது தன்னலமற்ற சேவை (கர்மயோகம்) கடவுள் வழிபாடு (பக்தி யோகம்), மனக்கட்டுப்பாடு (இராஜயோகம்) மெய், — பொய் பகுத்தறியும் நிலை (ஞானயோகம்) ஆகியவையே அவை!

தன்னலமற்ற சேவைக்கு 'கர்மயோகம்' என்று பெயர். எந்த விதமான பிரதிபலனையும் எதிர்பாராமல் வேலைக்காகவே வேலை என்ற முறையில் உழைப்பதே அது! வாழ்க்கை என்றால் வேலை என்று பொருள். உலகில் உயிர் வாழ்வது என்பதும் வேலையே! வாழ்நாள் பூராவும் ஒருவன் இடைவிடாது தொழிலைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். அந்தத் தொழில், தொழிலின் ஒவ்வொரு 'துளி'யும் தெய்வ வழிபாடு என்ற முறையில் அமைய வேண்டும். இது போன்ற தன்னலமற்ற இடைவிடாத வேலையினால் உள்ளத் தூய்மையும்' மனத்தூய்மையும் கைவரப்பெற்று பிரம்மச்சரியத்தை அனுசரிக்க முடிகிறது! அதன் மூலம் விந்து சக்தியின் மேம்பாடு கிட்டுகிறது.

தூய தன்னலமற்ற அன்பினால் பேருண்மையைக் காண விழைவதே பக்தியோகம். தன்னுள் உள்ள அகந்தை எனும் தன்னுணர்வைவிட உயிர் நண்பன் மனிதனுக்கு வேறு ஏதும் இல்லை. இந்தத்

தன்னுணர்வை மையமாக வைத்து ஒருவன் தனக்கே உரிமையுள்ள ஒரு சாம்ராஜ்யத்தை படைத்துக் கொள்கிறான். இந்த 'நான்' என்னும் 'அற்ப'த் தைத் திருப்திபடுத்துவதற்காகவே வாழ்வில் நடக்கும் எல்லா வம்புகளும் போராட்டங்களும். 'நான்' அல்லது சின்ன 'அகந்தை'யைப் பொசுக்க வேண்டும். 'நான்' 'என்னுடையது' என்ற இரண்டும் உள்ள இடத்திலே ஒருவர் 'நீங்கள்' 'உங்களுடைய' என்ற உணர்வை கொண்டு வரவேண்டும். முழு மனத்துடன் தெய்வ ஈடுபாடு கொள்ள வேண்டும். கடவுளையே முழுக்க முழுக்க நம்ப வேண்டும். எல்லா இடங்களிலும் எல்லா வஸ்துக்களிலும் தெய்வீகத்தையே காண வேண்டும். மக்கள் சேவையே மகேசன் சேவை! நோயாளிகளுக்கு உதவுவதே கடவுளின் சேவை! அனாதைகளுக்கும் ஆதரவற்றவர்களுக்கும் உதவுவதே தெய்வீகத் தொண்டு! எல்லா இடங்களிலும், எல்லாப் பொருட்களிலும் தெய்வீகத்தைக் காண்பதன் மூலம் கடவுள் தரிசனத்தைப் பெற வேண்டும். தன்னல மனப்பான்மையை வளர்த்துக் கொள்வதன் மூலம் தம் மனத் திருப்திக்கான வேலையைச் செய்வதைத் தவிர்க்க வேண்டும். இது போன்ற ஆழ்ந்த தெய்வ ஈடுபாட்டினால் சிற்றின்ப ஆசையைத் தூய ஈடு இணையற்ற தெய்வீகக் காதலாக மாற்ற வேண்டும். உலகாயதப் பொருட்களின் மீதுஏற்படும் ஆர்வத்தை கடவுளைத் தரிசிக்க வேண்டுமென்ற பேரன்பாக மாற்ற வேண்டும். முதலில் சுயநலம் காரணமாக ஏற்படும் சாதாரண அன்பும் புலன்

போகங்களின் மீது ஏற்படும் ஆசையும் கடவுள் பக்தி யாகவும் தெய்வ தரிசனம் கிட்ட வேண்டுமென்ற ஆர்வமாகவும் திசை திரும்புகிறது. இந்தத் தெய்வத் தின் மீதான பேரன்பு ஆழ்ந்த பக்தியாக மாறும் போது விந்து சக்தி தெய்வீகக் காதலாக வெகு எளிதில் மாற்றம் பெறுகிறது. கடவுள் மீதான காதலும் தெய்வ பக்தியும் அதிகரிக்கும் நிலையில் சிற்றின்ப உணர்வுகளும், காம ஆசைகளும் முற்றிலும் மறைந்து போகின்றன. அதன் பயனாக பிரம்மச்சரியத்தை எளிதில் கடைப்பிடிக்க முடிகிறது. தானாகவே விந்து சக்தியின் மேம்பாடு சித்திக்கிறது.

இராஜயோகம் மனம், மனச்செயல்களின் இரகசியங்களை அறிந்து கொள்வதும், அதன் பின்னர் அதைக் கட்டுப்படுத்துவதையும் முடிவில் அதனால் சமாதிநிலை அல்லது மோட்சகதியைப் பெறுவதுமே இராஜயோகம்! பல்வேறு நிலைத்தளங் களில் மனத்தின் இரகசிய செய்கைகளை இராஜ யோகம் விளக்குகிறது. இந்த யோக முறையில் ஒருவர் பிராணாயாமத்தை மேற்கொள்கிறார். சிலர் மனத்தின் செயல்பாடுகளை இடைவிடாது அலசிய படி தியானம் புரிகின்றனர். மனத்தையும், மனச் செய்கைகளையும் இடைவிடாது ஆராய்ந்த வண்ணம் பலதரப்பட்ட ஆசைகளையும் எண்ணங் களையும் கட்டுப்படுத்துகின்றனர். மனத்தின் அலை பாயும் போக்கை இடைவிடாது அடக்கியாண்ட வண்ணம் ஆசைகளையும் எண்ணங்களையும் தயவு தாட்சண்யமின்றி வெளியேற்றி மனம்

புலன்களை திண்மையுடன் கட்டுப்படுத்துகிறார்கள். மனம் ஆசைகள் எண்ணங்கள் மீது கட்டுப்பாட்டை நிலை நிறுத்துவதால் புலன்கள் எளிதில் தானாகவே அடங்கி விடுகின்றன. மனம் புலன்களின் மீது கொண்டு வரப்படும் இது போன்ற ஆதிக்கத்தினால் வெகு எளிதில் ஒருவர் தனக்குப் புரிந்த நிலையில் விந்து சக்தியை 'ஓஜஸ்சக்தி' எனும் பேராற்றல் மிக்க மனோசக்தியாக மாற்றி அருளாட்சி புரிகிறார்.

பொய், மெய் இரண்டையும் பகுத்தறிந்து பேருண்மை எனும் பிரம்மத்தை உணரும் நிலையே 'ஞானயோகம்' (மேலானவாலறிவு) ஆகும்! உடல் மாறிக் கொண்டே இருக்கிறது. புலன்களும் மனமும் அதே போல் மாறுகின்றன. பேரண்டம் முழுவதுமே மாறிய நிலையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. எல்லா மாறுதல்களுக்கும் மத்தியில் ஒரே ஒரு பொருள் மட்டும் மாறுபடுவதில்லை. உயிருள்ளஉடம்பில் அதுபோன்று மாற்றமடையாமல் இருப்பது உயிர் உணர்வு.

## ஆன்மா

ஆன்மாவானது முடிவில்லாதது, நிரந்தரமானது, மாற்றமில்லாதது, அசையாதது, சுதந்திரமானது. பிறப்பற்றது, வளர்தல் இல்லாதது. அழிவற்றது. மரணமில்லாதது. ஆண்-பெண் பேதமற்றது. அதற்கு ஆரம்பம் இல்லை. முடிவும் இல்லை. உயிருள்ள உடலில் மேலான உயிர்ச்சார

மாக இருப்பது ஆத்மாவே! இடைவிடாது ஒருவர் தன்னைச் சரீரத்துடன் ஒப்பிடாமல் அலசி ஆராய்ந்துதன் ஆன்மாவுடன் இணைப்பதுதான் சரி என்று உணர்கிறார். அதன்பிறகு தன் உடல் புலன் களோடு கொண்டுள்ள பந்த பாசத்தை உதறி த்தளி தன் ஆன்மா ஒன்றே நிலையானது என்றஎள் உணர்வு பெற்று அது பரம ஆன்மாவினோடு கலந்துள் ளது என்பதை உணர்கிறார். முடிவில் தம்மிடமுள்ள அனைத்துப் பலவீனங்களும் புலன்களின் மீதான கவர்ச்சிகளும் தாமாகவே மறைந்து போகின்றன. அத்தகையவன் காம உணர்வுகளையும் காம இச்சைகளையும் எண்ணங்களையும், கட்டுப்படுத்தி விந்து சக்தியை 'ஓஜஸ் சக்தி' எனும் மாபெரும் மனோ சக்தியாக மாற்றி விடுகிறான்.

கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம், ஞானயோகம் எதுவாயினும் சிறிதளவே பயின்று அதனால் ஒருவர் விந்து சக்தியை 'ஓஜஸ் சக்தி' எனும் மாபெரும் மனோ சக்தியாக மாற்றிவிடலா மென்பது இயலாது.

பயிலும் யோகம் எதுவாயினும் அந்த யோகத் தின் பாதையில் தன் பயிற்சியை தீவிர முனைப்புடன் மேற்கொள்ள வேண்டும். அத்தகைய தீவிர முயற்சிக்குப் பின்னரே விந்து சக்தியானது மேலான மனோ சக்தியாக உயர் நிலை மாறுதலை அடையும். உடலின் பிரதான சக்தியான குண்டலினி சக்தியை விழித்தெழச் செய்து அல்லது மேல்நிலை மையங்க ளுக்கு மேலேறிச் செல்லச் செய்வதில்தான் விந்து

சக்தியின் மேம்பாட்டுக்கான முழு இரகசியமும் அடங்கியுள்ளது. (ஆசிரியரின் ''மனிதனின் ஆதார சக்தி அல்லது குண்டலினி சக்தி'' என்னும் புத்த கத்தைப் பார்க்கவும்).

அடிமட்ட மையமான 'மூலாதார சக்கரம்' எனும் நிலைத்தளத்தில் குண்டலினி சக்தி தங்கி யுள்ளவரை, ஒருவனுடைய மனப்போக்கும் ரசனை யும் பசி, தூக்கம், காம உணர்வுகள், ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் போன்றவற்றையே வளைய வந்து கொண்டிருக்கும்.

இந்த சக்தி மூலாதார சக்கரத்தில் நிலைகொண் டுள்ளவரை ஒருசாதகன் (ஆன்மீகப் பயிற்சியாளன்) எவ்வளவுதான் முயன்றாலும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்க இயலாது. குண்டலினி சக்தி அடிமட்ட மையத்தில் தங்கியிருக்கும்வரை தமோகுணமே ஒருவனிடம் மேலோங்கி இருக்கும். பிரம்மச்சரி யத்தை மேற்கொண்ட நிலையிலும் குண்டலினி சக்தியானது அடிமட்ட மையத்திலேயே நிலை கொண்டு நின்று போனால் அத்தகைய பயிற்சி யாளர்கள் நரம்புத் தளர்ச்சியாலும், மூளை பாதிப்பு, உடல்நலக் கோளாறுகளாலும் பீடிக்கப்படுகிறார் கள். இது போன்ற சாதக நிலை ஆபத்தானது. அவர் கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

குண்டலினி சக்தி இதய மையத்துக்கு மேலே கிளம்பிச் சென்றாலும் அல்லது மேலெழுந்து செல்லச் செய்தாலும் அதன்பிறகு அது குரல்வளை மையமான விசுத்த சக்கர தளத்தில் நின்றுஇயங்கும்

நிலையில் சத்துவ குணமே அந்த மனிதனிடம் மேலோங்கி நிற்கிறது. அவன் உடலுணர்வு அற்ற நிலையைப் பெறுகிறான். புலன்கள் புலன் போகங்களுக்கான இச்சைகளும் அவனிடம் மறைந்தொழிகின்றன. அவனிடம் தானாகவே விந்து சக்தி மேம்பாடு அடைகிறது.

எண்ணம், சொல், செயலில் ஒரு மனிதன் கண்டிப்பான பிரம்மச்சரியத்தை தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் கடைப்பிடிப்பானாயின் (இது குண்டலினி சக்தியை விசுத்த சக்கர தளத்திற்கு எழுப்பி மையம் கொள்ளச் செய்தபின்னரே இயலும்) 'மேதநாடி' எனும் ஒரு தனித்தன்மை வாய்ந்த யோக நாடி சுழு முனை நாடிக்கு எதிராக உடலின் முன் பாகத்தில் தோன்றுகிறது.

இந்த நாடியின் தோற்றத்தின் விளைவாக விந்து சக்தியானது 'ஓஜஸ் சக்தி'யாக தீவிரகதியில் மாற்றமடைகிறது. இந்த நிலைக்குப் பின்னர் விந்து உற்பத்தியே உடலில் ஏற்படுவதில்லை. விந்து விரயத்திற்கும் இடமில்லை. இந்த நாடி விந்து சக்தியை தன்னுள் உறிஞ்சிக் கொள்கிறது. அதை வெகு விரைவில் 'ஓஜஸ் சக்தி'யாக மாற்றி விடுகிறது. இந்த மாற்றம் விந்துவாகும் முன்னரே நிகழ்ந்து விடுகிறது.

குண்டலினி சக்தியை மேல்நிலை மையங்களுக்கு எழும்படிச் செய்யாதவரைக்கும் விந்து சக்தி

யின் மேம்பாடு இயலாதது. இந்த விந்து சக்தியை நீண்ட நாள் தேங்கியிருக்கச் செய்துவிட்டால் அது ஆபத்தை விளைவிக்கும். தோல்வியைத் தோற்று விக்கும்.

பெயர் பெற்று விடலாம்.

புகழ் அடைந்து விடலாம் - ஆனால் பெயர் புகழுக்கான ஆசையை

அடக்கவும்—அறவே மறக்கவும்

கடிது கடிது!—அந்தோ!

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# பிரம்மச்சரியத்தின் அவசியம்
# (கற்பு நெறி)

**விந்துச் சக்தி :**

ஆணுக்கும் பெண்ணுக்கும் சுரப்பிகள் பொது வானது. ஐந்தாவது வயதிலேயே காம உணர்ச்சி களுக்கு பலியாகும் துரதிர்ஷ்டவசமான குழந்தை களுக்கு இந்த சுரப்பிகள் இயங்கத் தொடங்கிவிடு கின்றன. ஆயினும் வளர்ந்த சிறுவர், சிறுமியர் ஆண்கள் பெண்களிடம் காணும் விந்து ஒழுக்கு போன்றதல்ல இது! காளைப் பருவம் பூப்புப் பருவம் அடைந்த பிறகுதான் விந்து சுரப்பு நிலை ஏற்படு கிறது. சுக்கிலம் ஆண் குறியில் உண்டாவது. சுரோணிதம் பெண் குறியில் உற்பத்தியாவது. இந்த சுரோணிதம் ஆணுக்குக் கிடையாது. சிறுமியரிடமும் பெண்களிடமும் சுக்கிலம் வெளிப்படுவதில்லை. ஆயினும், சிறுவர், சிறுமியர், ஆண்களும் பெண்களும் ஆகிய அனைவருக்கும் பொதுவான காமச் சுரப்பிகள் எண்ணிலடங்காதவை. விந்து ஒழுக்கின்போது சுக்கிலம் அதனுடன் கலந்து வந்து கருப்பையினுள்

புகுந்து அங்குள்ள சுரோணிதத்துடன் கலக்கும் போது சிசுவின் தோற்றம் ஏற்படுகிறது. பருவ நிலைக்கு முன்னரே சிறுவர் சிறுமியர் இடையே உணர்வுச் சுரப்பிகள் செயல்படுகின்றன. அந்த நிலையில் ஆண் — பெண் உறுப்புகள் மூலமாக மின்சாரம் பாய்ந்து வெளியேறுவது போன்ற அதிர்வுகள் ஏற்படுகின்றன.

மின்சாரத்திற்கும் நாடி ஓட்டங்களுக்குமிடையே நெருங்கிய தொடர்பு உண்டு. நாடி ஓட்டங்கள் என்பது சிறிய அளவிலான மின்சாரமே ஆகும் என்பதை நான் அடித்துக் கூறுவேன்.

மருத்துவ விஞ்ஞானம் நாடி ஓட்டங்களின் இயக்கத்தையும் முக்கியத்துவத்தையும் அறிந்து வைத்திருப்பது என்னவோ உண்மை. இந்த நாடி ஓட்டங்களுக்கான மின் இயக்கி சாதனம் (டைனமோ) எது என்பது இவர்களுக்குத் தெரியாது. மூளைக் கோளாறு உள்ளவர்களுக்கு மின்சார அதிர்ச்சி வைத்தியம் செய்யப்படுவதிலிருந்தே இது நிரூபண மாகிறது. இந்த அதிர்ச்சி வைத்திய முறை மிகவும் ஆபத்தானது. அது மூளைக் கோளாறு உள்ளவனை சாகடிக்கவும் கூடும்.

மூளைக்கோளாறு ஏற்படுவதே அபரிமிதமான நாடியோட்டக் கதிர்கள் மூளை மையம்வரை சென்று விடுவதால்தான்.

ஒவ்வொரு முறை ஆழ்ந்த சிந்தனையின் போதும் மனக்கோப்பு அல்லது சித்தத்தின் மீது

இனம் புரியாத தாக்குதல் ஏற்படுகிறது. காமம், கோபம், பேராசை, பயம் வெறுப்பு, துக்கம், சோர்வு போன்ற தீவிர உணர்ச்சிகளின்போது இந்த ஆழ்ந்து சிந்திக்கும் நிலை உண்டாகிறது.

மூளைக்கோளாறு ஆரம்ப நிலையில் தூக்கமின்மை அவதி ஏற்படுகிறது. இந்த உறக்கமின்மை பல நாள்கள் நீடித்தால் மூளை பாதிக்கப்படுகிறது.

மூளைக் கோளாறின்போது என்ன நிகழ்கிறது? சித்தம் அல்லது குண்டலினி சக்தியிடமிருந்து மேலெறிச் செல்லும் நாடி ஓட்டக்கதிர்கள் மூளை மையத்தில் இயங்கும் மனத்தின் பகுத்தறியும் ஆற்றலை அழித்து விடுகிறது (இந்த இடத்தில் குண்டலினி சக்தியையே சித்தம் என்கிறோம். குண்டலினி சக்தியானது தனது அளப்பரிய ஆற்றலால் முக்காலங்களிலும் நடக்கும், நடந்த நிகழ்ச்சிகள், வரலாறுகள் இடங்கள் போன்ற ஞாபகக்குறிப்புகளை தேக்கி வைத்துக் காப்பாற்றுகிறது.) மூளையின் இதுபோன்ற சூக்குமக்கருவி தனது பகுத்தறியும் திறமைக்கு ஊறு நேர்ந்து சகஜ நிலையில் இயங்காமல் போனதும் அவர்கள் நடைமுறையே வித்தியாசப் படுகிறது. இந்த வித்தியாசமான நடைமுறையே மூளைக்கோளாறு என்கிறோம். அதிர்ச்சி வைத்தியத்தின் மூலம் மருத்துவர்கள் அவர்களை அறியாமலேயே மூளையிலும் உடலிலும் அளவுக்கு மீறிப் போன குண்டலினி கதிர் ஓட்டங்களைக் குறைத்து விடுகிறார்கள்.

ஏராளமான குண்டலினி கதிர் ஓட்டங்கள் அல்லது நாடி ஓட்டங்கள் வெளியேறும் தன்மையினால்தான் விந்துச் சுரப்பி இயக்கம் நிகழ்கிறது. மூளை மையத்தில் ஆரம்பமாகும் விந்துச் சுரப்பி இயக்கம் பிறப்பு உறுப்புகள் மூலம் வெளியேறுகின்ற வரை உடல் பூராவிலுமுள்ள நாடிசக்தி அல்லது குண்டலினிக் கதிர் ஓட்டங்கள் பிழிந்துவிடப்படுகின்றன. உடலிலுள்ள நாடிகளில் ஏற்படும் இரணத்தினால் தோன்றும் வியாதிகளைத் தீர்ப்பதற்கான நல்ல மருந்து இன்னும் மருத்துவ விஞ்ஞானத்தினால் கண்டு பிடிக்க இயலவில்லை. உதாரணத்திற்கு பாரிச வாய்வு என்னும் நோயை எடுத்துக் கொள்வோம். உடலின் ஏதாவதொரு பாகத்தின் நரம்புகள் சரியான முறையில் இயங்காவிடிலோ நின்று விடுவதாலோ இந்தநோய் ஏற்படுகிறது. நரம்புகளின் இயக்கம் நின்றுபோன உடல் பகுதி என்பது அந்தப் பகுதியில் இயங்கிக் கொண்டிருந்த நாடி ஓட்டங்கள் முழுவதுமே வேறு வழியில் திசை திரும்பி விடுவதால்தான்! அதனால்தான் அந்தப் பகுதி மரத்துப் போகிறது. அதாவது நோயாளிக்கு அந்த இடத்தில் எந்தவித உணர்ச்சியும் தெரிவதில்லை. பாரிச வாயுவினால் பாதிப்படைந்த உடல் பகுதியில் இரத்த ஓட்டம் இருக்கும். ஆனால் நாடி ஓட்டக் கதிர் இயக்கம் இருக்காது. சில் வேளைகளில் வலது பக்கம் முழுமையும் பாரிச வாயுவினால் பாதிக்கப்பட்டாலும் நோயாளி பல ஆண்டுகள் உயிர் வாழ முடிகிறது. உடலின் இடது பாகம் பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டால் அவர்

உடனே இறந்து போகிறார். இதன் மூலம் நாம் அறிவது என்னவெனில் உடலிலுள்ள மற்ற நரம்பு நாளங்களைப் போன்று ஒரு மனிதனை ஆரோக்கிய முடன் வைத்திருக்க நாடிகளுக்கும் முக்கியத்துவம் இருக்கிறது என்பதை உணரலாம்.

விந்து இழப்பினால் உடல் பூராவிலுமுள்ள நாடிச் சாரசக்தி வறண்டு போகிறது. இதுவே தினசரி நடைமுறையானால் நாடிகள் தளர்ந்து சீர்கேடடைகின்றன. சீரான இயக்கம் தடைபடு கிறது. இதுவே பலநாள்கள் தொடருமானால் பாரிச வாய்வு வியாதி ஏற்படுகிறது. சில சமயங்களில் நாடியோட்டக் கதிர்களை உற்பத்தி செய்யும் மின் இயக்கி சாதனமாக உள்ள டைனமோவிலிருந்து நாடிசக்தி சிதறுண்டு போவதும் நேரிடுகிறது. இது போன்ற இழப்பு அபரிமிதமான உடலுறவினால் எளிதில் நிகழ்ந்து விடுகிறது.

உடலுறவின்போது மட்டுமே குண்டலினி சக்தி (நாடியோட்டக் கதிர்களின் டைனமோ) தீவிர கதியில் இயங்குகிறது. ஒவ்வொரு முறை விந்து இழப்பின் போதும் இந்த சக்தி சேமித்து வைத்திருக் கிற நாடிக்கதிர் ஆற்றல் விரயமாகிறது. இது போன்ற அதீத உடலுறவினால் டைனமோவின் இயக்கமே நின்று விடுகிறது. அதனால் தினசரி உடலியக்கத்திற்குத் தேவையான நாடிக் கதிர் ஓட்டம் நின்று விடுகிறது.

கீழ்நிலை மையங்களாக உள்ள மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம் ஆகிய நான்கு சக்கர நிலைகளில் குண்டலினி சக்தி தங்கி இருக்கும்போது மட்டுமே உடலுறவு உணர்ச்சிகள் ஒருவருக்கு உண்டாகும்.

உடலின் ஐந்தாவது மையமாக எள்ள சக்கர நிலைக்குச் சக்தி போய் தங்கி விடுமானால் அதன் பிறகு காம உணர்ச்சி அற்றுப் போகிறது. விந்து சுரப்பு வறண்டு போகிறது.

குண்டலினி சக்தி இல்லாமல் விந்து சுரப்பும் இல்லை. குண்டலினி சக்தியே நாடியோட்டக் கதிர் களுக்கும் விந்து உற்பத்திக்கும் மூலகாரணம்.

குண்டலினி சக்தியை மேல் நிலை மையங் களுக்கு எழுப்பிச் செல்ல கண்டிப்பான பிரம்மச்சரியம் எனும் கற்பு நெறி அத்தியாவசியம்.

கண்டிப்பான பிரம்மச்சரியமும் கற்பு நெறியும் இன்றேல் குண்டலினி மேல் நிலை மையங்களுக்கு எழும்பிச் செல்ல இயலாது.

பிரம்மச்சரியமின்றேல் குண்டலினி சக்தியின் இரகசியங்களைப் புரிந்து கொள்ள இயலாது. உயிர்ச்சார உயிரியக்கத்தில் அது வசிக்கும் முக்கிய பங்கையும் தெரிந்து கொள்ள இயலாது.

உடல் ஆரோக்கியத்தை சமச்சீராக வைத்துக் கொள்ளப் பிரம்மச்சரியம் மிக மிக அவசியமாகிறது. பிரம்மச்சரியம் (கற்பு நெறி) இன்றேல் உயர்ந்த

ஆன்மிக சித்திகள் கிட்டுவது என்பது இயலாத ஒன்று! நான் இதை ஒரு சவாலாகச் சொல்கிறேன்.

எழுபத்தி ஆறு ஆண்டுக்காலம் பிரம்மச்சரிய நெறி முறையைக் கடைப்பிடித்து வாழ்ந்தேன். என்னைச் சார்ந்த உலகின் பல்வேறு நாடுகளில் வசிக்கும் எனது சீடர்களாக உள்ள துறவிகளுடைய அதாவது ஆண்—பெண் துறவிகளுடைய அனுபவத் திலிருந்து இந்தப் புத்தகத்தை எழுதியுள்ளேன்.

# உன்னுள் மறைந்துள்ள புதையல்கள்

# YOUR HIDDEN TREASURES

BY

SWAMY NARAYANANANDA



From:
The Complete Works Of Swamy Narayanananda.
Vol-22.

# உன்னுள் மறைந்துள்ள புதையல்கள்

## 1. உமது உடல்

உங்களுடைய உடல் என்கிறேன். அதன் பொருள் என்ன? நீங்கள் உடல் அல்ல! அப்பாவி மனிதனாகட்டும், சின்னஞ்சிறு குழந்தையாகட்டும்- 'என்னுடைய உடம்பு' என்றே சொல்கிறார்கள். இதிலிருந்து என்ன தெரிகிறது. 'தான் உடல் அல்ல; உடல் தன்னுடையது' என்று 'அது சொல் கிறது! இது எப்படி இருக்கிறது? 'இது' 'என் னுடைய வீடு' என்கிற மாதிரி இருக்கிறது! வீட்டின் சொந்தக்காரன் 'நான்தான் வீடு' என்று சொல்வதில்லை! நீ 'இது என்னுடைய உடல்' என்று சொல்வதும் இதுபோலத்தான். ஒரு வீடு- அது நீ வசிப்பதற்காக! அதே மாதிரி உடல் ஆன்மா வசிப்பதற்காக! ஆகவே 'நீ' உடல் அல்ல. 'ஆன்மா' இந்த உடலின் சொந்தக்காரன்! தவறான எண்ணத்தின் காரணமாகவும், அறியாமையினாலும் நீங்கள் ஆன்மாவையும், உடலையும் போட்டுக் குழப்பிக் கொள்கிறீர்கள்!

இந்த உடல் பிரதானமாக ஐந்து சூக்கும புலன் களாலும், ஐந்து தூலப் புலன்களாலும் ஆனது. அவற்றை 'ஐந்து தன்மாத்திரைகள்' என்று சொல் கிறோம். அந்த ஐவகை சூக்குமப் பொருள்க ளாவன; ஆகாய தன்மாத்திரை; காற்று தன்மாத் திரை; நெருப்பு தன்மாத்திரை; நீர் தன்மாத்திரை; பூமி தன்மாத்திரை; தூய ஆகாயத்தை வடிவமைக்க பாதிபாகம் ஆகாயத் தன்மாத் திரையும் எட்டில் ஒரு பங்கு காற்று தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நெருப்பு தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நீர் தன்மாத்திரை யும் சேர்ந்துள்ளன!

தூல காற்றை வடிவமைக்க பாதிப்பாகம் காற்று தன்மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு ஆகாய தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நெருப்பு தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நீர் தன்மாத்திரை யும், எட்டில் ஒரு பங்கு பூமி தன்மாத்திரையும் சேர்ந் துள்ளன!

தூல நெருப்பை வடிவமைக்க பாதிபங்கு நெருப்பு தன்மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு ஆகாய தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு காற்று தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நீர் தன்மாத்திரை யும், எட்டில் ஒரு பங்கு பூமி தன்மாத்திரையும் சேர்ந் துள்ளன.

தூல நீரை வடிவமைக்க பாதிப் பங்கு நீர் தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு ஆகாய தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு காற்று தன்மாத்

திரையும், எட்டில் ஒரு பங்கு நெருப்பு தன்மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு பூமி தன்மாத்திரையும் சேர்ந்துள்ளன!

தூல பூமியை வடிவமைக்க பாதிப்பங்குபூமி தன் மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு ஆகாய தன்மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு காற்று தன்மாத்திரையும், எட்டில் ஒரு பங்கு நெருப்பு தன்மாத்தினரயும், எட்டில் ஒரு பங்கு நீர் தன்மாத்திரையும் சேர்ந்துள்ளன!

உடல் என்பது ஒரு தலை, இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரு நாசித்துவாரங்கள் கொண்ட ஒரு மூக்கு, நாக்கும் பற்களும் கொண்ட ஒரு வாய், இரு புசங்கள், பத்து விரல்கள்கொண்ட இருகரங்கள், ஒரு முண்டம், பிறவி உறுப்பு ஒன்று, இரு கால்கள், ஐந்தைந்து விரல்கள் வீதம் உள்ள இரு பாதங்கள் ஆகும். உடல் முழுவதும் வெண்மை, மாநிறம், கருப்பு அல்லது மஞ்சள் நிறமுள்ள தோலினால் மூடப்பட்டுள்ளது. அந்த தோலில் உரோமங்கள் உள்ளன. தலையில் மிருதுவான எலும்புகளும், மூளையில் மிருதுவான எம்புகளும் மூளையால் நிரப்பப்பட்ட மண்டையோடும் உள்ளது. இந்த மூளைக்குள் எல்லா சிவப்பு இரத்த நாளங்களும், நாடிகளும், நரம்புகளும் ஒன்று கூடுகின்றன. இதுவே ஜீவான்மாவினுடைய 'தலைநகரமாக' உள்ளது. இங்கிருந்ததுதான் மனம் எனும் 'பிரதம மந்திரி' இயங்குகிறது. உடலின் முண்டப் பகுதி வயிறு, சிறுகுடல்கள், ஈரல், இருதயம், நுரையீரல்,

கல்லீரல், பித்தகோசம், விதவிதமான இரத்த கோளங்கள், ஆண்களில் ஆண்குறி, பெண்களில் மார்புகள், சிகப்பு வெள்ளை இரத்த அணுக்கள், கொழுப்பு, தசை எலும்புகள், சவ்வு, நாடிநரம்பகள் ஆகியவற்றைக் கொண்டுள்ளன.

இந்த எல்லா விவரங்களைப் பற்றியும் விஞ்ஞானிகளும், மருத்துவ நிபுணர்களும் ஏராள மான ஆராய்ச்சிகளைச் செய்துள்ளனர். மனிதகுல வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் உதவும் பல இன்றியமை யாத உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளனர். மருத்துவ விஞ்ஞானமும் பலதரப்பட்ட நோய்களுக் கான எத்தனையோ அபூர்வ மருந்துகளைக் கண்டு பிடித்துள்ளன. அறுவை சிகிச்சையிலும் அவர்கள் அதிசயிக்கத்தக்க முன்னேற்றத்தை அடைந்துள்ள னர். மனித, மிருக வாழ்வுக்கு அவர்கள் ஆற்றியுள்ள மதிப்புமிக்க சேவைக்கு நாம் மிகமிகக் கடமைப் பட்டுள்ளோம். உலகாயத் தேவைகளைப் பொறுத்த வரை இந்த விஞ்ஞானிகள் மனித குலத்திற்கு ஈடு இணையற்ற சேவையைப் புரிந்துள்ளனர்.

மனம், ஆன்மா எனும் ஆன்மீக உலகைப் பொறுத்தவரை அவர்கள் ‘அ’னா ‘ஆ’வன்னா என்கிற ஆரம்ப வகுப்பிலேயே நிற்கின்றனர். நமது குறிக்கோளெல்லாம் இதுவரை அணுக முடியாதிருக் கும் மனம், ஆன்மா எனும் சூக்குமப் பகுதிகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதே. உங்களது உடல் லட்சோபலட்சம் ஜீவ அணுக்களாலானது. அதனால் அதை நான் ஜீவ

அணு என்பேன். அதற்கு நீங்களே ஏக சக்கராதிபதி. நீங்களேதான் இந்த சாம்ராஜ்யத்தை ஆள்பவர்கள். உங்களுக்குள்ள இந்த மாபெரும் பொறுப்பை நினைத்துப் பாருங்கள்! இங்குதான் உங்கள் மனம் பிரதமராகச் செயல்படுகிறது, மூளை மையம் உங்களுடைய தலைநகரமாகத் திகழ்கிறது.

உங்கள் உடல் ஆரோக்கியத்துடன் அமைவதற்கு உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியும் மிகச் சீரான முறையில் இயங்க வேண்டும். இதை அடைவதற்கு சுத்தமான காற்று, தூய, எளிய சத்துள்ள உணவு, பானம், ஏற்ற உடை போன்றவை அத்தியாவசியம். இவையே இன்றியமையாதன. உங்களுடைய பொறுப்பைப் பற்றி ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள்!

உங்களுடைய உடலை அளவுக்கு அதிகமாக வருத்தினால் நோய்தான் வந்து சேரும். அதிகமாகச் சாப்பிட்டாலோ, மிகக் குறைத்துச் சாப்பிட்டாலோ நோய்தான் வரும். நாடிக்கதிரோட்டத்தின் அளவு குறைந்தாலும் வியாதிக்கு ஆளாவீர்கள். உடலின் எந்தப் பகுதியிலும் அளவுக்கு மீறியோ, அளவில் குறைந்தோ நாடி ஓட்டம் இயங்கினாலும், நாடி ஓட்டத்தின் இழப்பு நேரிட்டாலும் அதன் விளைவு வியாதிதான்.

சமச்சீரான நாடியோட்டங்கள் இயங்கினால் தான் உடல் ஆரோக்கியமாக இருக்கும். இப்படிப் பார்ப்போமானால் உடலின் ஒவ்வொரு பகுதியும் முக்கியமானதுதான். கால் கைகளில் ஊனமே

பட்டால் நீங்கள் வாழ முடியும். வயிற்றில் ஊறு விளைந்தாலும் நீங்கள் வாழலாம். மூளையில் பாதிப்பு ஏற்பட்டால் நீங்கள் பைத்தியமாகி புத்தி பேதலிக்கிறது. குடலும், கல்லீரலும் நோய்வாய்ப் பட்டாலும் நீங்கள் வாழலாம். இருதயமும், நுரை யீரலும் இயங்காமற் போனால் நீங்கள் இறந்து விடுவீர்கள்.

உங்கள் உடலின் வலது புறத்திலுள்ள நரம்புகள் இயங்கா விட்டால் பாரிச நோய் பாதிப்புக்கு ஆளாகி சில காலம் உயிர் வாழலாம். இடது புறமுள்ள நரம்புகள் இயங்காவிடில் நீங்கள் இறந்து விடுகிறீர் கள். உடலைப் பொறுத்தவரை மருத்துவ விஞ்ஞானம் உங்களுக்கு மாபெரும் சேவை புரிந்தி ருக்கிறது. விஞ்ஞானிகளின் இந்தச் சேவை மிகவும் போற்றற்குரியது. அடுத்து நாம் இதுவரை காணாத பகுதிகளைக் கண்டறிய முற்பட வேண்டும். அதாவது மனம், குண்டலினி சக்தி, ஆன்மா இவற்றைப்பற்றி!

## உ. மூளை மனம் அல்ல; மனம் குண்டலினி சக்தி அல்ல! குண்டலினி சக்தி ஆன்மா அல்ல!

மனம் மூளை அல்ல. மூளை தூலமானது. மனம் அதிசூக்கும சக்தி படைத்தது. அது மூளை மையத்தில் செயல்படுகிறது. மூளையை வானொலிப் பெட்டிக்கு ஒப்பிடலாம். மனம் மின்சக்தி. வானொலிப்பெட்டி மின்சக்தியில்லாமல் வேலை

செய்யாது. மனத்தின் உதவியின்றி மூளை இயங்காது. அதே மாதிரி ரேடியோப் பெட்டியின்றி மின் சக்தி மட்டும் ஒலிக்காது. மூளையின்றேல் மனமும் வேலை செய்யாது. எனவேதான் ரேடியோ கருவியும், மின்சக்தியும் போல மூளையும் மனமும் அவை ஒன்றுடனொன்று ஒன்றியிருப்பது. ஒன்று மற்றொன்றின் உதவியின்றி இயங்க முடியாது.

வானொலிப்பெட்டி சீராக வேலை செய்யும் நிலையில் இருக்க வேண்டும். அப்போதுதான் ஒலி பரப்பப்படும் ஒலி அலைகளை ஒலிபரப்ப இயலும். அதுவும் மின்சார சக்தியின் உதவியினால் மட்டுமே முடியும். இவற்றில் ஏதாவதொன்றில் பழுது இருந்தாலும் எதிர்பார்த்தபடி பலன் கிட்டாது போகும். இதே மாதிரிதான் மூளை நல்ல முறையில் இருக்க வேண்டும்.

மூளை சரியானபடி வேலை செய்யாது போயின் எதிர் பார்த்த பலன் கிட்டாது. மூளை நல்ல முறையில் இருந்தாலும் மனந்தான் மூளைக்கு உயிரோட்டத்தைத் தர இயலும். மனத்தின் உதவியின்றி மூளை தான் மட்டும் தனித்து இயங்க முடியாது.

நடக்கும் போது ஐம்புலன்களும் வேலை செய்கின்றன. இரண்டு காதுகள் மூலமாக எல்லாவிதமான ஒலிகளையும் கேட்டறிகிறோம். தோல்வழியாக எல்லாவிதமான ஸ்பரிசங்களையும் அனுபவிக்கிறோம். இரண்டு கண்களாலும் பல நிறங்களையும் உருவங்களையும் காண்கிறோம். வாய், நாக்கு இரண்டினாலும் பல்சுவைகளை சுவைக்கிறோம்.

மூக்கின் மூலம் நல்லதும்— கெட்டதுமான வாசனை களை முகர்கிறோம். காதுகள், உடல், கண்கள், நாக்கு, மூக்கு போன்றவை தூலபுலன் கருவிகள். இந்த அனைத்துத் தூல புலன்கருவிகளுக்கும் முறையான சூக்கும புலன் கருவிகள் உள்ளன. இந்த சூக்கும புலன்கருவிகளுக்கான பல்வேறு நரம்புகள் மூளை மையத்தில் இணைந்துள்ளன. பலதரப்பட்ட புலன்களின் அனுபவங்களை வாங்கி பதிலனுப்புவதற்கு மனம் என்ற ஒன்று மூளை மையத்தில் இருந்தேயாக வேண்டும். இதை தொலைபேசி மையத்திற்கு ஒப்பிடலாம். பல்வேறு தொலைபேசி நிலையங்களிலிருந்துவரும் வெவ்வேறு பேச்சுகளும் மைய நிலையத்திற்கு வருகின்றன. மைய நிலையத்திலுள்ள தொலைபேசி இணைப் பாளர் அந்தந்தப் பேச்சுகளுக்கான எண்களுக்கு தொடர்புகளை அமைத்துத் தருகின்றார். தொலை பேசி இணைப்பாளர் இல்லாவிட்டால் ஒருவர் நாள் முழுவதும் தனக்கான எண்ணை சுற்றிக்கொண்டே இருந்தாலும் தனக்கு வேண்டிய தொடர்பைப் பெறவே முடியாது. அதேபோல் மனம், புலன் உணர்வுகளின் அமைப்புகளுக்கு அக்கறை காட்டா மல் போய்விடுமாயின் அந்தப் புலன்கள் மேற் கொண்டு இயங்க இயலாமற்போகும்.உதாரணமாக ஒன்று சொல்வோம். நீங்கள் மிகவும் விரும்பிப் படிக்கும் ஒன்றில் ஆழ்ந்து போயிருக்கிறீர்கள். அச் சமயத்தில் யாராவது பேசலாம்; அல்லது மோட்டார் கார்கள் உங்கள் அருகே ஓடிக்கொண்டிருக்கலாம். ஆனால் அதெல்லாம் உங்கள் காதில் படுவதே

யில்லை. மேலும் நீங்கள் களைத்துப் போய் இருப்பதாகக் கொள்வோம். அல்லது தூங்கிக் கொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். தூக்கத் தின்போது உங்களைச் சுற்றிலும் பலவிதமான சப்தங்கள் ஒலிக்கலாம். அவை எதுவுமே உங்க ளுக்குத் தெரிவதில்லை. தூக்கத்தின்போது காதுகள் அதனுடைய இடத்தில் தானிருக்கின்றன. ஒலி அலைகள் காதுக்குள் நுழைந்த வண்ணம் உள்ளன. நுழைந்து மூளை மையம்வரை எடுத்தும் செல்லப் படுகின்றன. ஆயினும் உங்களுக்கு அது கேட்ப தில்லை. ஏன் அப்படி? முதல் விவகாரத்தில் உங்கள் மனம் படிக்கும் புத்தகத்தின் ஆழ்ந்து போய் இருக்கிறது. ஆழ்ந்த தூக்கத்தின்போது உங்கள் மனம் மூளை மையத்தில் இருந்து விலகி இருக் கிறது.ஆழ்ந்த உறக்கநிலையில் மனமானது.உங்கள் மார்பின் வலப்புறத்திலுள்ள ஆன்ம இதய மையத் தில் கணநேரம் போய்த் தங்கி விடுகிறது. இந்த ஆன்ம இதய மையத்தை நிர்விகல்ப சமாதி நிலை (பிரம்மானந்தத்தில்) எய்துவதற்கு முன்னர் தரிசிக்க முடியும். மனம் மூளை மையத்தில் செயல்படா விட்டால் புலன் உணர்வுகளை மனம் வாங்கிக்கொள் வதில்லை. அதன் பயனாக எந்த ஒரு புலன் இயக்க மும் நடைபெறுவதில்லை.

புலன்கள் தன்னிசைப்படி இயங்க முடியாது. எந்த ஓர் உணர்வையும் உணர முடியாது. அவ்வ வற்றுக்கான இயக்கங்களை நடத்த முடியாது. எப்போதும் அவற்றிகளின் பின்னணியில் உயிர்ச்

சார உணர்வு ஒன்று இருந்து கொண்டே இருத்தல் வேண்டும்.

மூளை மையத்திலுள்ள நரம்பு மண்டல மையங்களுடன் இணைப்பதற்கு இந்த உயிர்ச்சார உணர்வு மிகமிக அவசியம். மூளை மையத்திலுள்ள இத் தகைய உயிர்ச்சார உணர்வே 'மனம்' எனப் படுவது.

மூளை நரம்பியல் வல்லுனர்கள் பல ஆராய்ச்சி களைச் செய்துள்ளனர். அதாவது மூளை மையத் திலுள்ள பல்வேறு நரம்பு மண்டல மையங்களில் மின்சாரத்தைப் பாய்ச்சி ஆராய்ந்தனர், உயிருள்ள மனிதன்,இறந்தவன் போன்ற இருவேறு நிலைகளி லும் ஆராய்ந்தனர். அவற்றின் விளைவுகளின் வித்தியாச நுட்பங்களைக் கண்ட பிறகுமனம் என்ற ஒன்று இல்லையென்ற முடிவுக்கே வந்துவிட்டனர். இது அடி முட்டாள்தனமானது. இந்த மேலோட்ட மான காரணங்களைக்காட்டி மறுப்பது அர்த்த மற்றது.

மூளை மையத்தில் மட்டும் மின்சாரத்தை இணைத்து புலன் உணர்வுக்கான நரம்பு மண்டல மையத்துடன் இணைக்காமலேயே ஆராய்ந்தால் அந்தக் குறிப்பிட்ட புலன்உணர்வின் பாதிப்பு எப்படி தெரியும்? அது எப்படி அதற்கான விளைவை வெளிப்படுத்தும்? மேலும் ஒலியின் மூலம் காமம்! என்ற சொல்லை காதில் உச்சரித்து மின்சாரத்தை மூளை மையத்தில் மட்டும் செலுத்தினால் காம உறுப்பு அதனால் உணர்ச்சி வயப்படுமா? இல்லை!

இது நடக்க முடியாதது. இதே ஆராய்ச்சியாளர் வேறு வகையில் நாம் கூறுவதுபோல் செய்து பார்க்கட்டும். காமம் என்ற சொல்லின் ஒலியை காதின் மூலம் அனுப்பும் அதே சமயத்தில் மூளை மையத்திலுள்ள காம உறுப்பின் நரம்பு இணையும் பகுதியில் மின்சாரத்தை பாய்ச்சிப் பார்க்கட்டும். இப்போது காம உறுப்பு செயல்படும். இதிலிருந்து என்ன தெரிகிறது? பல்வேறு புலன் உணர்வுகளுக் கான உணர்ச்சிகளை வாங்கி அவற்றைப் புரிந்து கொண்டு அதற்கான நரம்புகளின் மூலம், பல்வேறு மையங்களுடன் இணைப்பதற்கு உயிர்ச்சார உணர் வெனும் ஒன்றினால் மட்டுமே இயலும் என்பது தெளிவாகிறது. மூளை மையத்தில் இத்தகைய உயிர்ச்சார உணர்வுப்புலன் இயங்காமற் போயின் புலன் உணர்வுகளின் விளைவுகள் நடக்க முடியாது. மூளை மையத்தில் இயங்கும் உயிர்ச்சார உணர் வேனும் புலனையே 'மனம்' என்று சொல் கிறோம்.

## 3. மனம்

உயிர்ப்பை ஆதாரமாகக் கொண்டு சூக்கும சக்தியாக இயங்குவதே மனம். தான் செய்வதை அது அறியும். ஒரு பந்தை வீசும்போது அந்த ஓடும் பந்து ஒரு சக்தியை உருவாக்குகிறது. ஆனால் இந்த சக்தி ஜடமானது. அதற்கு அதன் சக்தி புரிவதில்லை. இந்த ஜடசக்தி போன்றதல்ல

மனம். மனம் உயிர்ச்சக்தி படைத்தது. உடலால் நடக்கும் எல்லாச் செய்கைகளும் மனத்தின் தீர்மானத்தைப் பொறுத்தே அமைகின்றன.

விழித்த நிலையில் மனம் மூளை மையத்தில் இயங்குகிறது. கனவு நிலையில் அது சிறு மூளை யில் வேலை செய்கிறது. ஆழ்ந்த உறக்கத்தின் போது உயிரெனும் ஆன்மாவில் ஒன்றியுள்ளது.

மனத்திற்கு நான்கு பிரதான ஆற்றல்கள் உள்ளன. உள்ளுணர்வின் ஆற்றல், உணர்ச்சி வயப்படுதல், ஆழ்ந்து சிந்தித்தல், ஒன்று திரட்டுதல் ஆகியனவே அவை.

சாதாரண மனிதர்களில் மனம் மூன்று வெவ் வேறு நிலைத்தளங்களில் வேலை செய்கின்றன. உணர்ந்த நிலைத்தளம், மறந்த நிலைத்தளம் மரத்த நிலைத்தளம்.

ஒருவனுடைய கடந்தகால நினைவுகளின் பெரும்பகுதி மறந்த நிலைத்தளத்திலும் மரத்த நிலைத் தளத்திலும் தங்கியுள்ளன. ஒருசில நினைவுகள் மட்டுமே மனத்தின் உணர்ந்த நிலைத் தளத்தில் தங்குகின்றன.

கனவுகளுக்கும் கற்பனை ஊற்றுகளுக்குமான செய்திகளை மனம் மறந்த, மரத்த நிலைத் தளங்களிலிருந்தே பெறுகின்றன.

யோகிகளுக்கு மட்டும் மனமானது யோக நித்திரை எனும் நான்காவது நிலைத்தளத்தில் இயங்குகின்றன.

மனிதன் உறங்குகிறான். அவனைச் சுற்றி சப்தங்களும் இயக்கங்களும் இருக்கின்றன. ஆயினும் அவன் அவற்றை உணர்வதில்லை. அதே நேரத்தில் அவன் நன்றாகத் தூங்கி எழுந்த சுகத்தை அனுபவிக்கிறான். தூங்கியவன் ஓய்வை அனுபவிக்கிறான். புத்துணர்வைப் பெறுகிறான். சமாதி நிலை எய்தியவன் உலகாயத உணர்வுக்குத் திரும்பிய பிறகு அந்த மனிதனின் மனம் பேரானந்த ஆற்றல் நிலையில் (Superciues Plauce) இயங்குகிறது.

பெயர், சூக்கும உருவம் அல்லது எண்ணம் அந்த எண்ணத்தின் சூக்கும வடிவம் அனைத்துமே ஒன்றுடனொன்று இணைந்தவை. ஓர் எண்ணம் ஏற்பட்டவுடன் மனம் அந்த எண்ணத்திற்கான உருவத்தை மூளை மையத்தில் தோற்றுவிக்கிறது. இந்த உருவத்துடன் கூடவே அது சூக்கும ஆகாயத்தைக் கற்பிக்கிறது. அந்தச் சூக்கும உடல் அந்தக் காட்சியைக் காண்கிறது. ஒருவருக்கு மட்டுமே அந்த எண்ணத்தின் தோற்ற வடிவம் புரிகிறது. புரிவது என்றால் அவை மூன்றாகும். பொருள், பொருளுக்கான உருவம், உருவத்தைப் பற்றிய விவரம் ஆகும்.

ஓர் எண்ணத்தைப் புரிந்து கொள்வதற்கு ஒரு சூக்கும உருவம் இருந்தே தீருகிறது (பொருள்). அந்தப் பொருளுக்கான உருவத்தை மனம்தோற்றுவிக்கிறது (எண்ணத்தின் வடிவம்). அந்த வடிவத்தைப் பற்றிய விவரத்தையும் மனமே தருகிறது.

இந்த மூன்றுமே மூளை மையத்தில்தான் நிலைத்துள்ளன. இவை ஒவ்வொரு எண்ணம் ஏற்படும் போதும் அதற்கான சூக்கும வடிவத்தை மனம் கற்பிக்கிறது. இவையின்றி ஒருவர் எதையும் புரிந்து கொள்ள முடியாது.

ஆன்மாவுக்கு உணர்த்தும் கருவியாக இருப்பது மனம். மனத்தின் மூலமே ஆன்மா உலகத்தை அறிகிறது. சாதாரண மனம் ஐம்புலன்களின்றி உலகத்தை அறிந்து கொள்ள முடியாது. அந்த ஐம்புலன்களும் மனமின்றி இயங்க முடியாது. ஒன்றை அறிவது என்றால் அதற்கான புலன்கள் வேலை செய்ய வேண்டும். புலன்களும் மூளை மையத்துடன் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். அதை ஏற்று இயக்க மனம் அங்கே நிலை கொண்டிருக்க வேண்டும், ஆழ்ந்த தூக்க நிலையில் இருப்பது போன்று மனம் மூளைமையத்தில் இயங்கா விட்டால் எதைப்பற்றியும் அறிய முடியாது. இறந்தவனிடம்கூட எல்லாப் புலன்களும் இருக்கின்றன. ஆனால் எதையும் உணரும் சக்தி அவனிடமில்லை. மனத்தின் இயக்கமில்லாமல் எதையும் அனுபவிக்க முடியாது என்பது இவற்றால் நிரூபிக்கப்படுகிறது. இது நடக்க முடியாதது.

மனம் தனக்கான உயிரையும், ஒளியையும் குண்டலினி சக்தியிலிருந்தே பெறுகிறது. குண்டலினி சக்தியின்றி மனம் ஒரு கணம்கூட உயிர்ப்பைப் பெற முடியாது. உதாரணத்திற்கு மரணத்தை எடுத்துக் கொள்வோம். இறப்பின்போது உயிர் எனும் ஆன்மா

குண்டலினியுடன் சேர்ந்து உடம்பிலிருந்து பிரிந்து போகிறது. இறந்து போன உடலில் புலன்களும், மூளையும் அப்படியே இருக்கின்றன. இருப்பினும் இறந்த அந்த மனிதனிடம் மனமும் புலனியக்கங்களும் அற்றுப் போகின்றன. இதிலிருந்து மூன்று விவரங்கள் தெளிவாகின்றன. முதலாவது மனம் என்பது மூளை அல்ல. இரண்டாவது மனத்தின் உதவியின்றி மூளையும் புலன்களும் இயங்காது. மூன்றாவது மனம், மூளை, புலன்கள் ஆகியவை அவற்றுக்கான உயிர்ப்பையும், ஒளியையும் ஆன்மா அல்லது குண்டலினி சக்தியிலிருந்தே பெறுகின்றன. உயிரெனும் ஆன்மா இல்லையேல் உடலியக்கமே நின்றுவிடுகிறது. இவை அனைத்துமே ஒன்றுடனொன்று தொடர்புடையன. எந்த விவரத்தையும் புரிந்து கொள்வதற்கு இவற்றின் இணைப்பு அல்லது தொடர்பு நிலைத்து நிற்க வேண்டும். அதாவது ஆன்மா, குண்டலினி சக்தி, மனம், மூளை புலன்கள், புலன்கள்உணரும் பொருள்களிடையே ஆன தொடர்பே இது.

விஞ்ஞானிகள் ஒலி அலைகள், ஒளி அலைகள், உஷ்ண அலைகள், குளிர் அலைகள் முதலியவற்றைக் கண்டு பிடித்துள்ளனர். இவற்றின் நுட்பங்களை ஆராய்ந்து அறிவதற்கான அதியற்புத விஞ்ஞானக் கருவிகளையும் கண்டு பிடித்துவிட்டனர். எண்ண அலை என்ற ஒன்றும் இருக்கிறது. ஒவ்வொரு எண்ணமும் ஒரு சக்தி படைத்தது. ஒருமுகப்படுத்தப்பட்ட எண்ணச் சக்தியின் ஆற்றலைக்

கொண்டு வெகுதூரத்திற்கப்பாலுள்ள ஒருவருக்கு நல்லதைச் செய்ய முடியும், அல்லது பாதிப்பையும் விளைவிக்க முடியும். இந்த எண்ண சக்தியின் எண்ண அலைகளைக் கண்டறிவதற்கான எந்தவித மான கருவிகளையும் விஞ்ஞானிகள் இதுவரை கண்டு பிடிக்கவில்லை. மனம் எண்ண சக்தியைவிட அதி நுட்பமானது. விஞ்ஞானம் மனத்தைக் கண்டுகொள் வதற்கான எந்தவிதக்கருவியையும் இதுவரை கண்டு பிடிக்கவில்லை. அந்த நிலையில் மனம், குண்டலினி சக்தி, ஆன்மா போன்றவை இல்லவே இல்லை என்று எப்படி அவர்கள் மறுக்க முடியும்? உடலின் தினசரி இயக்கமாக உள்ள மிக முக்கியமான இவற்றை மறுப்பது வடிகட்டிய முட்டாள்தனம் என்று என்று கூறுவது மிகையாகாது. சில விஞ்ஞானிகள் மட்டும் இந்த சூக்குமச் சக்திகள் உடலில் இயங்கு கின்றன என்பதையும் அவற்றைக் காண இயல வில்லை என்பதையும் பெருந்தன்மையோடு ஒப்புக் கொள்கின்றனர். இவர்கள் மிகவும் பாராட்டுக்குரிய வர்கள். சில வறட்டு விஞ்ஞானிகள் மனம், குண்டலினி சக்தி, ஆன்மா என்பவை எதுவுமே இல்லையென்கிறார்கள். இவர்கள் பரிதாபத்திற் குரியவர்கள்! இந்த அறிவீனர்கள் அவர்கள் உயிருடன் இருப்பதையே மறுப்பார்கள் போலும்! அவர்களுக்குள் உள்ள உயிரோட்டத்தைப்பற்றியும், இந்தஉலகத்தின் தோற்றத்தையும், பெயர்களையும் அவர்களுக்குப் புரியவைக்கும் உயிர்ச்சாரத்தைப் பற்றியும் விளக்குவதற்கான ஆதாரங்களை அவர் களால் எப்படி எடுத்துக்காட்ட முடியும்?

விஞ்ஞானிகள் பெருத்த ஆராய்ச்சிக்குப் பிறகு ஜடப்பொருளைக் குறித்த பரிசோதனைகளின் முடிவில் அணு என்று ஒன்று இருப்பதைக் கண்டு பிடித்தார்கள். இந்த ஜடப்பொருள் அணுவின் அளவோடு நின்றுவிடுகிறது என்பதையும் கண்டு கொண்டார்கள். மேலும் அந்த அணுவின் 'சுழல் மையத்தையும்' (Nuclear centre) அறிந்து கொண்டார்கள். சுழல்மையத்தை ஆதாரமாகக் கொண்டு இருவகை சக்திகள் சுழல்கின்றன. அந்த இரு சக்தி களை மின்னணுசக்தி (Elecrons) மின்சாரசக்தி (Protones) என்று கூறுகின்றனர். இந்த அணு சுழல் மையம்' என்பது என்ன? அவர்களுக்குத் தெரியாது. அதன்பிறகு அணுவைப் பிளந்தார்கள். பின்னரே சடம் என்ற ஒன்று கிடையாது என்றும், 'சக்தி' மட்டுமே என்றார்கள். அந்தச் சக்தி என்பது எது? பலநூறு நுண்ணணுக்கள் ஒரு கணத்தில் நூற்றைம்பது மில்லியன் அங்குலதூரம் செல்லக் கூடிய வேகத்தில் இயங்குவதே இந்த சக்தி! உயிர் சக்தியின் ஆதாரமின்றி எந்த ஒன்றும் இயங்க முடியாது என்பதை நான் இந்த விஞ்ஞானிகளுக்கு ஒரு சவாலாக எடுத்துக் கூறுவேன். சக்திக்கு முதல் காரணமாக இருப்பது உயிர்ச்சாரந்தான். இயந்திர சக்தியோ அல்லது உயிரற்ற ஜடப்பொருளோ உயிர்ப்பையும், உயிர்களையும் தோற்றுவிக்க முடியாது. உயிர்ப்புள்ள உயிர்கள் உயிர்ச்சாரத்தி லிருந்தே உற்பவிக்கின்றன. நான் கடவுள் அல்லது பிரம்மத்தை தன்னுள் தானே இயங்கும் உயிர்ச் சார மகாசமுத்திரமென்பேன். கடவுள் அல்லது

பிரம்மமே பெரும் காரணன். காரணங்களுக்கெல்லாம் மூல காரணமானவன். பேருண்மையானவன்—பிரம்மம் அல்லது கடவுளைப் பெருங்காரணமாகக் கொண்டதின் விளைவே இந்த அகிலம்.

மனத்திற்கு தனக்கென தனியானதொரு உருவமோ நிறமோ கிடையாது. எண்ணத்திற்கான பொருளின் தோற்றத்தையும் நிறத்தையுமே அது பெறுகிறது. கீழ்த்தரமிக்க பாபம் நிறைந்த அறிவீன எண்ணங்களால் நீங்களும் அதே வேகத்தில் தாழ்ந்து போகிறீர்கள். உயரிய புனிதமான பரந்த எண்ணங்களால் நீங்கள் மேலும் மேலும் உயர்ந்து அந்த உயர்ந்த குறிக்கோளின் பரிபூரணத்துக்கே எட்டி விடுகிறீர்கள். உங்களுடைய கடந்த கால ஆசைகள்; எண்ணங்கள், செயல்கள் உருவாக்கிய நிலையேதான் நீங்கள் இப்போது அனுபவிப்பது. இன்று நீங்கள் உள்ள மேன்மைக்கும், கீழ்மைக்கும் பூர்வத்தில் நீங்கள் செய்த நல்லதும்—கெட்டதுமான ஆசைகள் எண்ணங்கள் செய்தசெயல்களே காரணமாகும். உங்களுடைய எதிர்கால வாழ்வு தற்போது நீங்கள் செயல்படும் விதத்தைப் பொறுத்தே அமைகிறது. உங்களுடைய நன்மை தீமைகளுக்குக் காரணகர்த்தாவாக இருப்பது நீங்களே! ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் உருவில் நீங்கள் எதை விதைக்கிறீர்களோ நீண்டகாலத்திற்குப் பிறகு அதையே அறுவடை செய்கிறீர்கள்.

ஓர் ஆப்பிள் விதையை நிலத்தில் ஊன்றி அதற்கு தேவையான உரத்தை இட்டு தண்ணீர்

விட்டு வளர்த்தால் உரிய காலத்தில் நீங்கள் அழகிய ஆப்பிள் பழங்களைப் பெறலாம். மாறாக நீங்கள் முட்கள் நிரம்பிய கள்ளிச் செடியை நட்டு வளர்த்தால் முடிவில் முட்களோடு கூடிய கள்ளிச் செடியைத்தான் பெற முடியும். அது போலவே நல்லதும், தீயதுமான செயல்கள் முடிவில் வெற்றிக்கும், தோல்விக்கும் காரணமாக அமைகின்றன.

தேசத்தின் தற்போதைய நவீன கல்வி முறை சீர்குலைந்துள்ளது. நன்னடத்தை வளரவும், நற்பண்புகளை வளர்க்கவும் அதில் இடமில்லை. சின்னஞ் சிறு குழந்தைகள் அவர்கள் விருப்பம் போல நடந்து கொள்ள விட்டுவைக்குமளவுக்கு சுதந்திரம் கொடுப்பது தவறு. இதனால் பெரும்பாலான குழந்தைகள் நல்லதைவிட கெட்டதையே சுலபமாக பிடித்துக் கொள்கிறார்கள். ஆகவே சுதந்திரம் என்பதை அனேகர் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆணோ அல்லது பெண்ணோ, ஒரு சிறுவனோ அல்லது சிறுமியோ எதற்கும் கட்டுப்படாமல் அவர்கள் மனம் போனபடியெல்லாம் செயல்படுவார்களேயானால் அது அடிமைத்தனத்தில் ஆழ்த்தி விடுகிறது. தனது சொந்த மனம், புலன்களையே அடக்க முடியாத ஒருவன் தனது மனத்திற்கும் புலன்களுக்கும் அடிமையாகி நாசமடைகிறான்.

அத்தகையவனால் நிம்மதியை அனுபவிக்க முடியாது. தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளும் இந்த நிர்மூடர்கள் சுதந்திரம் என்பது

எல்லா ஆசைகளையும் கட்டுப்பாடின்றி அனுபவிப்பது என எண்ணுகின்றனர். இத்தகைய மனிதர்களைக் காட்டிலும் காட்டுமிருகங்களே அதிக சுதந்திரமுள்ளவை எனலாம். வெட்கக்கேடு! எவ்வளவு பிற்போக்கான அவலம்! இந்த மனித குலம் எங்கே போகிறது? என்னே பரிதாபம்!

தூயமனம் ஒருவருடைய சிறந்த நண்பன். கள்ளமனம் அவருடைய கொடிய விரோதி! கள்ள மனம் எப்போதும அவனுக்கு துரோகமிழைக்கிறது. மனத்திற்கு இனப்பாகுபாடு கிடையாது. அது ஆணுமில்லை பெண்ணுமில்லை. தன்னுடைய உடலே தான் என இடையறாது நினைப்பதால் ஒருவன் ஆண் எனவும் பெண் எனவும் எண்ணிக் கொள்கிறார்.

நற்காரியங்களால் மனம் வலுப்பெறுகிறது. பாபக்கிருத்தியங்களினால் மனம் பலவீன மடைகிறது. உங்களுடைய ஆசைகள்,எண்ணங்கள், செயல்களைப் பொறுத்தே முழுக்க முழுக்க மன வளர்ச்சி அமைகிறது. பலதரப்பட்ட ஆசைகள் மனோசக்தியை பலவீன மடையச் செய்கிறது.

பாபச் செயல்கள் மனோசக்தியைச் சிதறடித்து விடுகிறது. முறையற்ற உணவு, எல். எஸ். டி., கஞ்சா, மது போன்றவை மூளை மனத்தின் இயக்கத்தைச் சீர்குலைக்கிறது. உடல், மூளை, மனம் மூன்றுமே ஒன்றுடனொன்று இணைந்து செயல்படுவன. உடலின் நலம் குறையும்போது

மூளையும் பாதிக்கப்படுகிறது. மூளையின் பாதிப்பு ஏற்பட்டால் மனமும் முறையாகச் செயல்படாது. இதை ஓர் உதாரணத்தால் விளக்கலாம். உங்களுடைய பேனாவிலோ அல்லது பென்ஸிலிலோ தவறு இருந்தால் உங்களால் நன்றாக எழுத முடியாது. இதுபோன்றது தான் உடல், புலன்கள், மூளை, மனத்திற்கிடையிலான தொடர்பும்.

அபரிமிதமான காமாந்தகாரம் மூளையையும், மனத்தையும் வெகுவாகப் பாதிக்கிறது. அத்தகையோரின் வாழ்க்கை தோல்விக் கதையாகிறது. உடலுறவு வாழ்க்கையால் ஏற்படும் விந்து நஷ்டம் உடலிலுள்ள நாடி சக்தியை வற்றச் செய்கிறது. ஒவ்வொரு முறை விந்து வெளியேற்றத்தின் போதும் உடல் முழுவதிலுமுள்ள நாடிசக்தியைப் பிழிந்தெடுத்து விடுகிறது. இது மட்டுமின்றி நாடி சக்தி வீணாகும் ஓட்டைகளும் உள்ளன.

அபரிமிதமான உடலுறவினால் நாடிச் சக்தியை இயக்கும் நரம்புகள் முறையாக இயங்க இயலாமையினால் உடலின் பல்வேறு பாகங்களுக்கு நாடிசக்திகளைச் செலுத்த முடிவதில்லை. இடையறாத உடலுறவு ஈடுபாட்டினால் நாடிக்கதிர்களை இயக்கும் மின் இயக்கி சாதனத்தில் [Dynamo] ஓட்டை விழுந்து விடுகிறது. இப்படி நடப்பதால ஒருவர் தீராத வியாதிகளால் பீடிக்கப் படுகிறார். சமச்சீரான இரத்த ஓட்டம் எவ்வளவு முக்கியமோ அதே போல நாடிக்கதிர்களின் ஓட்டமும் உடலின் பல்வேறு பாகங்களுக்கு இன்றியமை

யாதது. இடையறாத உடலுறவு ஈடுபாட்டினால் இரத்தத்தின் தூய்மை கெடுகிறது, தரம் குறைகிறது. மனக் கட்டுப்பாட்டைப் பெறவும், சமாதி நிலை எய்தவும் கற்புநெறி ஒழுக்கம் மிக மிக இன்றியமையாதது. நிலையான பிரம்மச்சரியம் அல்லது கற்புநெறி ஒழுக்கம் இல்லையேல் மனக்கட்டுப்பாடும் சமாதி நிலைப் பேறும் கனவிலும் கிட்டாது. சமாதிநிலைப் பேற்றை (பேரானந்த நிலையை) அனுபவிக்க வேண்டுமாயின் கண்டிப்பான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

அகந்தை புத்தி— உள்ளுணர்வின் ஆற்றல் எல்லாம் மனந்தான்.

## 4. அகந்தை

நீ உடல் அல்ல நீ மனமும் அல்ல அகந்தையும் நீ அல்ல! உங்களுடயை தவறான கற்பனையினால் நீங்கள் உங்களுடைய உடல் என்று நினைக்கிறீர்கள். மாறாக நீங்களே ஆன்மா சீவான்மா எனும் இந்த ஈடிணையற்ற இராச்சியத்தின் சர்வாதிகாரி!

மனம் தன்னை உடல், புலன்கள், மனம் என்று கற்பித்துக் கொள்ளும் நிலையே அகந்தை. இந்த அகந்தை உணர்வு தூய இதயமையத்தில் இருந்து இயங்குகிறது. அறிவுபூர்வமான மூளை மையத்தில் இயங்குகிறது.

கர்ப்பிணியான ஒரு பெண் சிங்கம் இரைதேடி காட்டில் மேய்ந்து கொண்டிருந்த ஆட்டு மந்தை

யிடம் போயிற்று. மந்தைக்கு அருகில் ஒரு புதரில் மறைந்து தனது இரைக்காகக் காத்துக் கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் தனியாக மேய்ச்சலுக்கு வந்த ஒரு ஆட்டை பிடிப்பதற்காகப் பாய்ந்தது. ஆடு தப்பித்துக் கொண்டது. அந்தப் பெண் சிங்கம் ஒரு குட்டியை ஈன்றுவிட்டு அதே இடத்தில் இறந்து விட்டது. அந்த ஆட்டு மந்தையின் சொந்தக்காரன் அனாதையான சிங்கக் குட்டியைப் பார்த்தான். பரிதாபப்பட்டு அதை வீட்டிற்குக் கொண்டு வந்து ஆட்டுக்குட்டிகளுடன் சேர்த்து வளர்த்தான். அந்தக் குட்டிக்கு பாலையும், புல்லையும் உணவாகக் கொடுத்து வந்தான். நீண்ட நாட்களுக்குப் பின் அந்த சிங்கக் குட்டி முழு வளர்ச்சி பெற்று சிங்கமாகியது. ஆனால் அது தனது உண்மையான சுயரூபத்தை மறந்துபோய் மந்தையில் தன்னையும் ஒரு ஆடாகப் பாவித்து வசித்தது. அந்த சிங்கம் மற்ற ஆடுகளைப் போலவே புல்லை மேய்ந்தது. பயத்தினால் மந்தையிலுள்ள மற்ற ஆடுகள், குட்டிகளைப் பின் தொடர்ந்து ஓடிற்று. கர்ச்சனையை மறந்து ஆடுகளைப் போல் கத்திற்று.

ஒருநாள் ஒரு காட்டுச்சிங்கம் தனது ஆகாரத்துக்காக ஓர் ஆட்டு மந்தையைத் தேடிவந்தது. அதற்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. அந்த ஆட்டு மந்தையில் ஒரு சிங்கமானது ஆடுகளைப் போலவே புல்லை மேய்ந்து கொண்டு நடையுடை பாவனையில் ஆடாகவே இருந்தது. 'காட்டு'ச் சிங்கம் இதைப்பார்த்து பரிதாபப்பட்டது. புதருக்குள்

மறைந்து படுத்துக் கொண்டது. அந்த ஆட்டுச் சிங்கம் நெருங்கி வந்தவுடன் அதைப் பிடித்துக் கொண்டது. பயத்தினால் ஆட்டுச்சிங்கம் கத்தி ஓடப் பார்த்தது. ஆனால் காட்டுச்சிங்கம் அதை ஓடவிடாமல் பற்றிக் கொண்டது. காட்டுச் சிங்கமானது ஆட்டுச்சிங்கத்திற்கு, 'அது ஆடு அல்ல-தன்னைப் போலவே ஒரு சிங்கம்' எனப் புரிய வைக்கப் பார்த்தது. ஆனால் ஆட்டுச்சிங்கம் அதை நம்பவில்லை. காட்டுச் சிங்கம் ஆட்டுச்சிங்கத்தை அருகிலிருந்த தண்ணீர் குட்டைக்கு எடுத்துச் சென்றது. ஆட்டுச் சிங்கத்தை அதனுடைய உருவத்தின் பிரதிபலிப்பைதண்ணீரில் பார்க்கச் செய்தது. தானும் அந்தக் காட்டுச் சிங்கமும் ஒரே மாதிரி உருவத்துடன் இருப்பதை ஆட்டுச்சிங்கம் கண்டது. பிறகு கர்ஜிப்பதற்கும் காடுகளில் பாய்ந்து திரிவதற்கும், மாமிச உணவைத் தின்பதற்கும் பழகிக்கொண்டது. இது போலத்தான் அழியும் உடலையும் கணநேரப் புலன்போகங்களையும் உங்களுடையது என இடையறாது சொந்தம் கொண்டாடுவதால் உங்களுடைய உண்மையான இயல்பை மறந்து விடுகிறீர்கள். நீங்களே ஆன்மா. அது எப்போதும் தூய்மையாக இருப்பது சுதந்திரமானது.

## 5. புத்தி (அறிவு)

மனத்தின் பல்வேறு செயல்களில் ஒன்று அறிவு. ஆராய்தல், முடிவெடுத்தல், இடம், பொருள், ஏவல் பற்றிய தெளிவு போன்றவை அறிவின் செயல்கள்.

எதைச் செய்வது; எது செய்யக் கூடாதது; எது நல்லது; எது கெட்டது என்பதை 'அறிவு' முடிவெடுக்கிறது.

நீங்கள் ஆராய்ந்து முடிவெடுப்பதைப் பொறுத்தே உங்கள் உடல் இயக்கமும், ஐம்புலன்களின் செய்கைகளும் அமைகின்றன. மயக்க நிலையிலும், ஆழ்ந்த உறக்கத்தின்போதும் சிலர் உடம்பு தன் நினைவின்றியே அசைகிறது. இது தனித் தன்மையானது. உனது அறிவாற்றல் பெருகும் போது நீ அறிவாளி என அழைக்கப்படுகிறாய். முட்டாள்களைப் பொறுத்தவரை இந்த அறிவாற்றல் வளர்ச்சி பெறுவதில்லை. குடிகாரர்கள், கஞ்சா புகைப்பவர்கள் விஷயத்தில் அறிவு நிலை மந்தப்படுகிறது. சமத்துவம் பேசுவது தற்காலத்திய நாகரிகமாயினும் அறிவாளிகளாக உள்ள சிலரே ஒரு தேசத்தை ஆள்கிறார்கள். வழி நடத்துகிறார்கள்! இந்த அறிவாற்றல் சரிவர இயங்காவிடின் ஒருவர் கட்டுப்பாடின்றி நடந்து கொள்கிறார். பைத்தியக்காரன் நிலையேற்படும்போது பகுத்தறிவு பறி போகிறது. எனவே புத்தி மாறாட்டத்துடன் நடந்து கொள்கிறார். துறவி, பிரம்மச்சாரி (நிலையான கற்பு நெறியைப் பின்பற்றுபவர்) போன்றவர்களுக்கு இந்த அறிவாற்றல் கூர்மையாகவும், பேராற்றலுடனும் திகழ்கிறது.

அறிவாற்றலே ஒரு பொருளைப் பற்றிய தெளிவைத் தோற்றுவிக்கிறது. உதாரணத்திற்கு

நீங்கள் 'உடலின்பம்' என்னும் வார்த்தையைக் கேட்கிறீர்கள். இந்த வார்த்தைக்கான ஒலி அலைகள் காதுகளில் மோதுகின்றன. அதி சுறு சுறுப்புடைய காது இந்த ஒலி அலைகளை வாங்கி சூக்கும நரம்புகள் மூலம் மூளை மையத்திற்குக் கொண்டு செல்கிறது. ஒரு செவிடனுக்கு இருப்பது போல காதில் உள்ள சூக்கும நரம்பு பழுதுபட்டிருந் தால் எதையும் கேட்க முடிவதில்லை. மாறாக இதே நல்ல நிலையிலிருந்தால் சூக்கும நரம்பும், புலனும் சீராக இயங்கும் நிலையில் ஒலி அலைகளை மூளை மையத்திற்கு எடுத்துச் செல்கிறது. இந்தச் சமயத் தில் மூளை மையத்தில் ஒலி அலைகளை வாங்குவ தற்கு 'மனம்' இருந்தாக வேண்டும். இல்லை யெனில் எதையுமே கேட்க முடியாது. உதாரணத் திற்கு ஆழ்ந்த உறக்கத்திலிருக்கும்போது மனம் செயல்படாததால் எந்த விதமான ஒலியும் அவர்க ளுக்குக் கேட்பதில்லை. மனம் மூளை மையத்தில் இயங்கும்போது ஒலி அலையை அது பற்றிக் கொள் கிறது. எனினும்கூட ஒலி அலை குறித்த தெளிவு இருப்பதில்லை. மனம் 'உடல் இன்பம்' என்பதின் பொருளைச் 'சித்தம்' எனும் மனக்கோப்பிலிருந்து (கடந்த கால அனுபவங்களைப் பற்றிய நினைவு நிலை) பெற்றேயாக வேண்டும். இந்த ஒலி அலையைக் கேட்டவுடன் மனம் சித்தத்திற்கு இதைப்பற்றிய விளக்கத்தைத் தேடிப் போகிறது. அது அதற்கான தெளிவைப் பெறுகிறது. உடனே அறிவு செயல்படுகிறது. இப்போது அறிவாற்றல் 'உடல் இன்பம்' என்கிற வார்த்தையின் அர்த்தத்

தைப்பகுத்து அறிகிறது. உடனே பிறவி உறுப்புகள் மூளையில் இணையும் மையத்திற்கு நரம்பு மூலம் இணைப்பைத் தருகிறது. பிறவி உறுப்புகள் உடனே சுறுசுறுப்படைகிறது.

இந்த இடத்தில் மனமானது தொலைபேசி மையத்தின் இயக்குனராகத் திகழ்கிறது. இந்த இயக்குனரே கேட்கும் பல்வேறு எண்களுக்குத் தொடர்பு ஏற்படுத்திக் கொடுக்கும் பாணியில் மனத்தின் இயக்கம் இருக்கிறது. மைய நிலையத்தில் செயல்படும் இயக்குனர் இல்லையெனில் ஒருவர் ஒருநாள் பூராவும் தொலைபேசி எண்களைச் சுழற்றினாலும் அவருக்குப் பதில் கிடைப்பதில்லை. இதுபோலவே பல்வேறு புலன் ஊக்கிகள் மூளை மையத்திற்குச் செல்கின்றன. மனம் தொலைபேசி மைய நிலைய இயக்குனராகச் செயல்பட்டு பலபுலன் உறுப்புகளுடன் தொடர்பை ஏற்படுத்தித் தருகிறது. உயிர்ச்சார உணர்வின் இயக்கம் இன்றேல் புலன்களோ அல்லது நரம்பு மையங்களோ சுயமாகப் புரிந்துகொள்வதில்லை. அதற்கான புலன் ஊக்கிகளுடன் இணைவதுமில்லை. ஒரு விஞ்ஞானி ஒரு குறிப்பிட்ட நரம்பு மையத்தில் மின்சாரத்தைச் செலுத்தினால் அந்த நரம்பு மையம் அதற்கான புலனை இயங்கச் செய்கிறது. இதன் உண்மை என்னவெனில் உயிர்ச்சார இயக்கம் இல்லாவிடிலோ அல்லது ஒரு விஞ்ஞானியின் உதவியின்றியோ

நரம்பு மையங்களோ அதற்கான புலன்களோ சுயமாகச் செயல்படுவதில்லை!

ஓர் உணர்வின் வேகத்தை நிர்ணயிப்பது அறிவுக் கூர்மையேயாகும். உதாரணத்திற்கு 'மரணம்' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். உன்னை மிகவும் துன்புறுத்திய கொடியவன் இறந்து விட்ட செய்தியை நீ கேள்விப்படுகிறாய். இதைக் கேட்டதும் நீ மிகவும் மகிழ்ச்சியில் திளைக்கிறாய். இங்கு மரணச் செய்தி உனக்கு மகிழ்ச்சியூட்டுகிறது. மாறாக நல்லவனின் மரணச் செய்தியை நீ கேட்கிறாய். இங்கு நீ வேதனைப்படுகிறாய். அதே செய்தி இந்த இடத்தில் உனக்கு துக்கத்தைத் தருகிறது.

தூரத்து உறவினர் அல்லது ஒரு நல்ல நண்பரின் மரணச் செய்தியைக் கேட்கிறாய். இந்தச் செய்தியைக் கேட்டவுடன் உனக்கு துக்கமேற்படுகிறது. இந்தத் துக்கத்தின் அளவு இலேசானது. நெருங்கிய நண்பர் ஒருவரின் மரணத்தைக் கேட்கிறாய். இப்போது அதிகத்துக்கத்தை உணருகிறாய். கண்ணீரும் விடுகிறாய். இந்தத் துக்கத்தின் அளவு மத்திய தரமானது. உன்னுடைய ஆருயிர் மனைவி அல்லது கணவன் அல்லது குழந்தையை இழக்கிறாய். இந்த இடத்தில் ஏற்படும் துக்கத்தின் அளவு அதீதமானது. எதனால் இது நேரிடுகிறது?— மரணச் செய்தி செவிக்கு எட்டுகிறது. கேட்கும் சூக்குமச் செவிப்புலன் இந்த ஒலி அலையை மூளை மையத்திற்கு எடுத்துச் செல்கிறது.

மனம் ஒலி அலையை வாங்கிக் கொள்கிறது. அதைப் பற்றி அறியச் சித்தத்திற்கு அனுப்புகிறது. சித்தத்திலிருந்து இறந்தவரின் விவரம்கிடைக்கிறது. அறிவுத்திறன் துக்கத்தின் அளவை அளந்து சொல்கிறது. நாடிக் கதிரோட்டங்களுக்கான மின் இயக்கி சாதனத்தில் அளவுக்கேற்ற வேகத்தில் மோதுகிறது. அதன் வேகத்திற்கேற்ப மின் இயக்கி சாதனத்தை சாதாரண நிலை, மிகச் சாதாரண நிலை, அதீத துக்க நிலை என்ற முறையில் இயக்குகிறது.

துக்கத்தின் அளவு சாதாரணமானதாக இருந்தால் மின்இயக்கி சாதனத்தைத் தாக்கும் மனத்தின் வேகம் இலேசானதாக இருக்கிறது. அதனால் இருதயம், நுரையீரல், மூளை ஆகிய இடங்களுக்கு வந்து சேரும் நாடிக்கதிர்கள் தன்மையில் இலேசானதாக உள்ளன. இதயத் துடிப்பும் இலேசானதாக உள்ளது.

துக்கத்தின் அளவு மத்தியதரமானதாக இருந்தால் மின் இயக்கி சாதனத்தைத் தாக்கும் மனத்தின் வேகம் மத்தியதரமானதாக இருக்கிறது. அதனால் இருதயம், நுரையீரல், மூளைக்கு செலுத்தப்படும் நாடியோட்டங்களும் மத்திய தரமான வேகத்தில் தாக்குகின்றன. அதனால் அவற்றின் இயக்கமும் மத்திய தரமாக அமைகிறது. இதன் மூலம் மாற்றமும் நிகழ்கிறது. இதயமும், நுரையீரலும் சற்றுக் கூடுதலான படபடப்புடன் செயல்படுகிறது. இதன் காரணமாக இதயத் துடிப்பின் அளவும் கூடுதல் வேகம் அடைகிறது.

துக்கத்தின் அளவு அதீதமானதாக இருந்தால் மின் இயக்கி சாதனத்தைத் தாக்கும் மனத்தின் வேகம் அதீதமானதாகி மின்இயக்கி சாதனத்தை அளவுக்கு மீறிய வேகத்தில் இயக்குகிறது. அதனால் இருதயம், நுரையீரல், மூளைக்குச் செலுத்தப்படும் நாடியோட்டங்களின் வேகமும் அதீதமாகின்றது. இந்தகைய தாக்குதலுக்கு உட்படும் மனிதன் பெரு மளவில் குழப்பமுற்று மனம் சிதறிய நிலையில் செயல்படுகிறான். உணர்ச்சி வயப்படுபவர்கள் இதனால் அதிர்ச்சியடைகின்றனர். இருதயம், மூளை அதிர்ச்சிக்குள்ளாகி இறந்துபோகிறார்கள். மாரடைப்பு நோய் இந்நாட்களில் சாதாரணமாகி விட்டது. பெரும்பாலும் மனக்கட்டுப்பாடு இல்லா மையினாலேயே இது நிகழ்கிறது.

அறிவு பலவீனமாகவும், வலிமையுடையதாகவும் மாறலாம். நாட்பட உள்ள தீராத நோயினால் ஒரு வருடைய அறிவு பலவீனமடைகிறது. கண் மூடித் தனமான உடலுறவு வாழ்க்கையாலும் அறிவு வலிவு குன்றிய நிலைக்கு உட்படுகிறது. தள்ளாத வயதில் அறிவு பலவீனமாகிறது. ஆனால் யார் ஒருவர் கண்டிப்பான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக் கிறார்களோ அவர்கள் தள்ளாத வயதிலும் மிகவும் அறிவுக் கூர்மையுடனும், திறமையாகவும், நெறி யுடனும் திகழ்கிறார்கள்.

ஆதலின் கண்டிப்பான பிரம்மச்சரியமோ அல்லது கற்பு நெறியையோ கடைப்பிடிப்பதின் மூலம் ஒருவர் தனது அறிவாற்றலை வளர்த்துக்

கொள்ள இயலும். நல்ல புத்தகங்களைப் படிப்பது, நல்லவர்களோடும் அறிவாளிகளோடும் கூடிப்பழகு தல், பல்வேறு நாடுகளுக்குச் சென்று வந்த பயண அனுபவம் போன்றவை அறிவுத் திறனைப் பெருக்க மிகவும் உதவி புரிகிறது.

## 6. உள்ளுணர்வு

உடலின் ஊக்க சக்தியை செயல்படுத்தும் உந்து தலுக்கு உள்ளுணர்வு என்று பெயர். உங்கள் செயல்களின் இயல்பை புத்தி அல்லது அறிவு தீர்மானிக்கிறது. மனம் உள்ளுணர்வாகி உடலை யும் புலன்களையும் செயல்படுத்துகிறது. உள்ளு ணர்வு மனத்தின் செய்கைகளில் ஒன்று. உணர்ச்சி வயப்படுபவர்கள், வயதானவர்கள், நோயாளிகள் பொதுவாக உள்ளுணர்வின் ஆற்றல் குறைந்தவர் கள். கண்டிப்பான பிரம்மச்சரியத்தை (கற்பு நெறியை)க் கடைப்பிடிப்பவர்கள் திண்மையான உள்ளுணர்வு உடையவர்கள். கற்பு நெறியுடனோ அல்லது பிரம்மச்சாரிகளோ அசைக்க முடியாத உள்ளுணர்வின் ஆற்றலுடையவர்களாகிறார்கள். முறையான, ஒரே அளவிலான மந்திர ஜபத்தை யும், தியானத்தையும் பயில்பவர்களும் அசைக்க முடியாத உள்ளுணர்வின் ஆற்றலைப் பெறு கின்றனர். உள்ளுணர்வின் ஆற்றல் இருதய மையத் தில் செயல்பட்டாலும், அதற்கான தீர்மானத்தை மூளை மையமே முடிவெடுக்கிறது.

## 7. குண்டலினி சக்தி

உடலின் மைய சக்தியே குண்டலினி சக்தி யாகும். இந்தச் சக்தியே நாடிக் கதிர்களின் மின் இயக்கி சாதனமாகும் (Dynamo). இந்தச் சக்தி தனது அளப்பரிய ஆற்றலால் கடந்தகால விஷயங் களையும் விளக்கங்களையும், இடங்கள், பொருள்கள், ஏவல்களையும் அதனதன் காரண சரீர நிலைகளில் மறதிக்கு ஆளாகாமல் பதித்து வைத்திருக்கிறது. நினைவாற்றல் காரண சரீர நிலையில் குண்டலினி சக்தியில் சேமித்து வைக்கப்பட்டுள்ளது. இந்தச் சக்தியையே 'சித்தம்' என்று கூறுகிறோம். 'சித்தம்' எனும் இந்த சக்தி நீங்கள் கேட்பவை, தொடுபவை, பார்ப்பவை, ருசிப்பவை, முகர்பவை அனைத்தையுமே விடாமல் பதித்துக் கொள்கிறது. நீங்கள் மிக மிக இரகசியமாகச் செய்வதையும் இந்த சக்தி பதித்துக் கொள்கிறது. எனவே இந்தச் சக்தி யின் பதிவேட்டிலிருந்து நீங்கள் எதையுமே மறைக்க முடியாது. மறைத்துச்செய்த செயல்களின் விளைவு களிலிருந்தும் தப்ப முடியாது. நீங்கள் நல்லதைச் செய்வதால் நன்மையைப் பொறுகிறீர்கள். கெட்ட செயல்களைச் செய்தால் அதனால் ஏற்படும் விளைவை அனுபவித்தே தீர வேண்டும். நல்ல தையோ அல்லது கெட்டதையோ செய்துவிட்ட பிறகு அதற்கான பாராட்டையோ அன்றிதண்டனை யையோ பெறாமல் தப்பிக்க முடியாது. நீங்கள் அதை விரும்பாவிடினும் அதற்கான பலன் உங்களை வந்து அடைவது திண்ணம்.

நினைவாற்றல் இருப்பது மூளை மையத்தில் அல்ல. ஒரு சில தினசரி எண்ண அலைகள் மட்டுமே மூளை, இதய மையத்தில் தங்குகின்றன. ஆனால் பெரும்பகுதி அறிவுப்புதையல் சித்தம் அல்லது குண்டலினி சக்தியில் பதிந்துள்ளது. பல்வேறு கருத்துகள், பொருள்கள், இடங்கள், வரலாறுகள், சம்பவங்கள் போன்றவற்றின் நினைவுப்புதையல்கள் சித்தத்திலுள்ள புறாக்கூண்டுகள் போன்ற பல்வேறு அறைகளில் தங்கியிருக்கின்றன. உதாரணமாக 'உமது தந்தை' என்ற சொல்லை எடுத்துக் கொள் வோம். 'உமது தந்தை' என்ற சொல்லின் ஒலியை உமது காதுகள் கேட்டவுடன், கேட்கும் நுண்புலன் அந்த ஒலி அலையை மூளை மையத்திற்குக் கொண்டு செல்கிறது. அங்குள்ள மனம் அதை வாங்கிக் கொள்கிறது. பின்னர் அதை அறிவதற்குச் சித்தத்திற்கு அனுப்புகிறது. சித்தம் குறிப்பிட்ட புறாக்கூண்டுடன் இணைத்து விடுகிறது. உடனே சிறுவயதிலிருந்து இன்று வரையுள்ள தந்தையைப் பற்றிய விளக்கம் உனக்குக் கிடைத்து விடுகிறது. சித்தத்தின் இந்த ஆற்றல் விந்தையிலும் விந்தை யானது! உயிர்ப்பை இழக்கும் தூல நிலையிலுள்ள மூளை இதுபோன்ற அபூர்வ அறிவாற்றலை எப்படி தன்னிடத்தில் சேமித்து வைக்க முடியும்? தக்க சமயத்தில் அதை எப்படி வெளிப்படுத்த முடியும்? இது நடக்கவே முடியாதது.

குண்டலினிசக்தி ஆத்ம சக்தி. அதன் அளப்பரிய ஆற்றலால் கடந்தகால நினைவுகள் அனைத்தையும் சேமித்து வைக்கிறது.

குண்டலினி சக்தியே நாடிக்கதிர்களின் இயக்கத்துக்கு மூலகாரணம். இந்த சக்தியே நாடிக்கதிர் இயக்கத்தை இயக்கும் ஆதார சக்தியாகும். மருத்துவ விஞ்ஞானம் உடலில் உள்ள நாடிசக்தி இயக்கத்தைக் கண்டுபிடித்து விட்டது. அதன் முக்கியத்துவத்தையும் ஒப்புக்கொள்கிறது. ஆயினும் இன்னும் அந்த நாடிக்கதிர்களை இயக்கும் மின் இயக்கி சாதனத்தைப் பற்றிப் புரிந்து கொள்ள வில்லை, நாடிக்கதிர்களை இயக்கும் மின் இயக்கி சாதனத்தை நாள் முழுவதும் இருபத்து நான்குமணி நேரமும் இயக்குவது இந்த 'சக்தி'யே யாகும். இடைவிடாத இந்த இயக்கத்தின் மூலம் உடலின் பல்வேறு பகுதிகளுக்கு நாடிச்சக்தியை அல்லது நாடிக்கதிர்களைப் பாய்ச்சுகிறது.

குண்டலினி சக்தி குதத்திற்கு அருகிலுள்ள கீழ் மையத்தில் தங்கியிருக்கும்வரை மூன்று தன்மைகள் அந்த மனிதனைக் ஆக்கிரமித்துக் கொள்கின்றன — உணவு, உறக்கம், உடலின்பம்! பெரும்பாலான மக்கள் இந்த மூன்றையும் அடைவதில் திருப்தியடைகிறார்கள். குண்டலினி சக்தி இருவேறு திசைகளில் நகர்கிறது. அதாவது கீழ் நோக்கி — மேல் நோக்கி! உடலுறவின்போது அது எளிதில் கீழ் நோக்கிச் செல்கிறது. 'விந்து' குண்டலினி சக்தியுடன் இணைந்திருக்கிறது. குண்டலினி சக்தி கீழேயுள்ள நான்கு மையங்களுக்கிடையில் இயங்கும் போது மட்டுமே ஒருவர் உடலின்பத்தை அனுபவித்து விந்துவை வெளிப்

படுத்த முடியும். 'சக்தி' முழு அளவில் ஐந்தாவது மையத்தை அடைந்து அங்கேயே தங்கி வேலை செய்யும் போது 'விந்து' என்பதே இல்லாமற் போகிறது. 'சக்தி' முழு அளவில் சிரசின் மையத் திற்குச் சென்றவுடன் ஒருவர் முழுமையான சமாதி நிலையில் ஒன்றி விடுகிறார். இத்தகைய சமாதி நிலையில் மட்டுமே ஒருவர் பரிபூரண ஞானத்தை எய்த முடியும். அதுவே இறையுணர்வு பெற்ற நிலை அல்லது ஆன்ம தரிசனம் எய்திய நிலை! இந்த ஒரே ஒரு நிலையில் மட்டுமே 'பேருண்மை அனுப வத்தை' ஒருவர் எய்த முடியும்!

குண்டலினி சக்தியை முழு அளவில் மேலுக்கு எழுப்ப மூவகைத் தூய்மை நிலைகள் இன்றியமை யாதவை. இதுவே உடல் தூய்மை, நாடிகளின் தூய்மை (நரம்புகள்), மனத் தூய்மை ஆகும். உடல், நாடிகள், மனம் மூன்றையும், காமமே மிக மிக அழுக்கடையச் செய்கிறது. 'விந்து' வெளியேற்றத்தின்போது உடல், நாடிகள், மனம் யாவுமே பாதிக்கப்படுகின்றன. உடல் பூராவிலும் நாடிகளிலுமுள்ள நாடிச்சக்தி பிழிந்தெடுக்கப் படுகிறது. இத்தகைய விந்துச் சேதாரம் தினந் தோறும் நடந்து கொண்டிருந்தால் ஒருவர் நரம்புத் தளர்ச்சி நோயாலும், நரம்புக் கோளாறு களாலும் பீடிக்கப்படுகிறார். உடலின்பத்தில் அளவுக்கு மீறி ஈடுபடுவர் வலுக்குன்றி இளமை யிலேயே இறந்து போகிறார். நரம்புக் கோளாறு வியாதிகளுக்கு சரியான நிவாரணம் இன்னும் கண்டு பிடிக்கப்படவில்லை.

குண்டலினி சக்தி முழு அளவில் மேலெழும்பிச் சென்று நிர்விகல்ப சமாதி நிலையை எய்தியவுடன் ஒருவர் மூச்சுத் துடிப்பு இல்லாமலேயே உயிர் வாழ்கிறார். தன்னையறியாமலேயே மூச்சுத் துடிப்பு மிக எளிதில் நின்று போகிறது. மூச்சு நின்ற நிலையில் உயிர் வாழ்வது நிர்விகல்ப சமாதி நிலையின் இயல்பான நிலை! குண்டலினி சக்திக்கும் நாடிக் கதிர்களுக்கும் இடையிலான இணைப்பை இது மெய்ப்பிக்கிறது. மூச்சு நின்று போவதற்கான காரணம் இதுதான்!

இருதயம், நுரையீரல்களில் உள்ள நாடிக் கதிர்களின் அதிர்வுகள் உயிர்த் துடிப்பை இயக்குகிறது. நிர்விகல்ப சமாதி நிலையில் மின் இயக்கி சாதனத்தின் இணைப்பிலிருந்து நாடிகள் பூராவும் துண்டிக்கப் படுகிறது. நரம்புகள் நாடிக் கதிர்களின் ஓட்டத்தை இழந்து விடுகின்றன. அதன் காரணமாக இருதயம் நுரையீரல்களின் இயக்கமும் தானாகவே நின்றுவிடு கின்றது. நிர்விகல்ப சமாதி நிலையில் மூச்சு நின்று போவது இயற்கையான ஒன்று. மூச்சு நின்று போவதும், இதயத் துடிப்பு நின்று போவதுமே நிர்விகல்ப சமாதி நிலைக்கான அறிகுறிகளாகும். இது ஒன்றும் ஆச்சரியப்படத்தக்கதல்ல. நிர்விகல்ப சமாதி நிலையை ஆண்டு அனுபவித்தவர்களுக்கு மட்டுமே இது புரியும்.

எண்ணம், சொல், செயல் மூன்றிலும் நிலையான பிரம்மச்சா்யத்தைக் கடைப்பிடிக்காமற் போனால் ஒருவருடைய குண்டலினி சக்தி முழுமை

யாக உயர்நிலைக்கு எழும்பாது. முழு அளவில் குண்டலினி சக்தியை சிரசின் மையத்திற்கு எழுப்பா விடில் நிர்விகல்பசமாதி நிலை கிட்டாது. நிர்விகல்ப சமாதி நிலையை எய்தா விட்டால் ஒருவர் பிரம்ம ஞானத்தையோ ஆன்ம தரிசனத்தையோ அடைய முடியாது.

உயரிய ஆன்ம நிலையை எய்தக் கண்டிப்பான பிரம்மச்சரியமும், கற்பு நெறியும் மிக மிக இன்றிய மையாதது என்று இது தெள்ளத் தெளிவாக நிரூபிக்கிறது.

குண்டலினி சக்தியின் பகுதி எழுச்சி என்பதும் ஒன்று உண்டு.

உடல், நாடிகள், மனம் ஆகிய மூன்றிலும் தூய்மை நிலையை எய்தாமல் உயர் நிலைப் பிராணாயாமங்களினால் (மூச்சுப் பயிற்சிகளால்) குண்டலினி சக்தியை எழுப்பலாம். எல்.எஸ்.டி, கஞ்சா போன்ற போதைப் பொருள்களாலும் இதைச் செய்யலாம். ஆனால் இந்த முறைகளால் எழுப்பப் படும் சக்தி கட்டுப்பாடின்றி இயங்க ஆரம்பித்து உடலின் பல்வேறு இடங்களுக்கு துடிப்பு மிக்க நாடிக் கதிர்களைச் செலுத்துகிறது. இது தவறான முறை. இதனால் மூளைக் கோளாறுகள் ஏற்படு கின்றன. குண்டலினி சக்தி, கட்டுப்பாடின்றி எதேச்சாதிகாரமாக இயங்கும்போது இருதயம், நுரையீரல்கள், மூளை ஆகிய இடங்களுக்குச் செல்லும் நாடிக்கதிர்கள் அளவுக்கு மீறிய துடிப் புடன் இயங்குகின்றன. இதனால் மனத்தின்

பகுத்தறியும் சக்தி சரியாக வேலை செய்வதில்லை. இதே போலத்தான் இதயம் நுரையீரல்களின் கதையும்!

துவக்கத்தில் இதனால் ஒருவர் தூக்கமின்மையால் பாதிப்படைகிறார். இதே நிலை நீடித்தால் அவருக்குப் பைத்தியம் பிடிக்கிறது. மனத்தின் பகுத்தறியும் நிலையில் பாதிப்படைவதே இந்தப் பைத்தியக்கார நிலைக்குக் காரணம். இது குண்டலினி சக்தியின் கட்டுமீறிய இயக்கத்தினால் தான்!

மனத்தின் ஆதாரமாக இருப்பது குண்டலினி சக்தி. மனம் தனக்கான ஒளியையும், உயிரையும் குண்டலினி சக்தியிலிருந்து பெறுகிறது. மனம் குண்டலினி சக்தியைச் சார்ந்தே இருப்பினும் அவை ஒன்றுடனொன்று இணைந்து இயங்குபவை. அதன் நிலையை விளக்குவோம்: மின்சாரம் மின் இயக்கி சாதனத்தினால் (Dynamo) உற்பத்தி செய்யப்படுகிறது. அவ்வாறு உற்பத்தி செய்யப் பட்ட மின்சாரத்தைக் கொண்டும் மீண்டும் 'டைனமோ'வை இயக்கலாம்.

இலேசான, மத்தியதரமான, அதீதமான உணர்ச்சி வயப்படும் மூவகைத் தன்மைகளின்போது மனம் நாடி ஓட்டங்களுக்கான மின் இயக்கி சாதனத்தை (குண்டலினி சக்தியை)ப் போய்த் தாக்குகிறது. இந்தத் தாக்குதல் முறையே இலேசாகவும், மத்திய தரமாகவும், அதீதமாகவும் இருக்கிறது. தொடர்ந்து அது அதே முறையில் இலேசாகவும், மத்திய தரமாக

வும், அதீதமாகவும் இயங்கி நாடிக்கதிர்ஓட்டத்தைப் பாய்ச்சுகிறது. நாடிக்கதிர் ஓட்டத்திற்கும், மின்சார ஓட்டத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது.

நாடிக்கதிர்கள் ஓட்டம் என்பதை வேறு வகையில் சொல்வோமாயின் அது உடலில் சிறு அளவில் இயங்கும் மின்சார ஓட்டமாகும். சில நேரங்களில் ஒரு சிலர் தங்கள் உடலிலேயே மின் அதிர்வு தோன்றுவதை உணரலாம். பைத்தியக்காரர்களை குணப்படுத்த 'மின் அதிர்ச்சி வைத்தியம்' கையாளப் படுவதும் இதனால்தான்.

## 8. ஆன்மா

ஆன்மா என்பது உடல் அல்ல. புலன்களுமல்ல, மனமும் அல்ல. ஆன்மா அனைத்திற்கும் மூல காரணம். அதுவே உயிர்ச்சாரமாகும். மனம், உடல், புலன்கள் உயிர்ச்சாரத்தைக் கொண்டே இயங்குகிறது. ஆன்மா அல்லது உயிர்ச்சாரம் உடலை விட்டுப் பிரிந்ததும் மரணம் நேரிடுகிறது. 'உயிர்ச்சாரம்' என்ற ஒன்று இருப்பதை எப்படி நிரூபிக்க முடியும்? அதை நிரூபிப்பது என்பது இயலாதது! ஓர் ஆய்வுக்கூடத்தில் அதை நிரூபிக்கத் தேவையான கருவிகள் நம்மிடம் இல்லை. அதே சமயம் 'நீங்கள் உயிருடன் இருக்கிறீர்கள்' என்பதை ருசுப்பிக்க ஆதாரம் எதற்கு? கடவுள் அல்லது பிரம்மம், அல்லது ஆன்மாவை யாரும் காண முடியாது. அதுவே காரணங்களுக்

கெல்லாம் மூலப் பொருளாகவும் இருக்கும்போது அதை எப்படி உருவகித்து உணர முடியும்? பொருளாக இருப்பது உருவாக முடியாது. வேறொரு முறையில் பார்ப்போமாயின் கடவுள் அல்லது பிரம்மம் அல்லது ஆன்மா என்பவை நாம் காணும் பொருள்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒன்று.

ஆன்மா அல்லது கடவுள் அல்லது பிரம்மம் என்பது உன் உயிர் என்னும்போது நீ எப்படி உன் உயிரையே இல்லை என்று சொல்ல முடியும்? உனக்கு உயிரே இல்லை என்று சொல்வது அடி முட்டாள்தனமானது! பைத்தியக்காரன்தான் தனக்கு உயிர் இல்லை என்று சொல்வான். தவறாகப் புரிந்து கொண்டுள்ள காரணத்தினால் உமது 'பேருண்மை இயல்பையும்', 'தெய்வீக ஆற்றலை யும்' நீங்கள் மறந்து விடுகிறீர்கள். இப்போதாவது அதைக் கண்டுகொள்ளுங்கள்! அதற்கான பாதை அனைவருக்கும் திறந்து விடப்பட்டுள்ளது!

'ஆன்மா' தோன்றும் நிலையில் ஆன்ம உயிர், குண்டலினி சக்தி என்று இரு வேறு பிரிவுகள் ஏற்படுகின்றன. இந்தப் பிரிவுத் தோற்றமே ஒருமை யில் பன்மைக்கான காரணமாக அமைகிறது. நிர்விகல்ப சமாதி நிலையில் தலை உச்சியிலுள்ள பிரம்ம ரந்திரம் என்னும் நிலையான மையத்தில் குண்டலினி சக்தியும் ஆன்மாவும் ஒன்றிவிடுகிறது. இந்த இணைப்பின் பிறகு பிரிவு நிலை மறைந்து விடுகிறது. எல்லையற்ற பரம்பொருளில்

ஒன்றி கடவுள், பிரம்மம் அல்லது உயிர்ச்சார மகா சமுத்திரம் என்ற நிலையை எய்துகிறார்.

ஒரு காலிக் குடத்தை எடுத்துக் கொண்டு பாருங்கள். குடத்தினுள்ளும், புறமும் ஆகாய வெளி நிரப்பட்டுள்ளதைக் காண்பீர்கள். இருப்பினும் குடத்திலுள்ள ஆகாசம், வெளியில் பரந்து விரிந்து ஆகாசம் என்று பிரித்துக் கூறுவீர்கள். இதுபோலவே எங்கும் வியாபித்துள்ள உயிர்ச்சாரம் உடலுக் குள்ளும் இருப்பதை ஆன்மா என்கிறோம். இதே உயிர்ச்சாரம் வெளியில் பரவியிருப்பதை தன்னில் தானே பரவியுள்ள உயிர்ச்சார மகா சமுத்திரம் என் கிறோம்.

மரணம் என்பது உடலை மாற்றுவதே! கிழிந்த சட்டையைத் தூக்கி எறிந்துவிட்டு புதிய சட்டை அணிந்து கொள்வதுபோல! மரணத்தின்போது தூல உடல் அழிந்து விடுகிறது. உமக்கு மூவகை உடல்கள் உள்ளன. அதாவது தூல உடல், நுண்ணுடல் அல்லது சூக்கும் உடல், காரண உடல் ஆகும்.

மரணத்தின்போது சூக்கும உடல், காரண உடல்,மனம், குண்டலினி சக்தி, ஆன்மா ஆகியவை அழிவதில்லை! மரணத்திற்குப் பின் சூக்கும உடல் காரண உடலுடன் இணைகிறது. மனம் குண்டலினி சக்தியில் இணைகிறது. இந்த இணைந்த சக்தியும் இணைந்த காரண உடலும் ஆன்மாவில் இணை கிறது. ஆன்மா புதிய இடத்தில் மீண்டும் பிறக்கிறது-

அதன் பாப புண்ணியங்களுக்கேற்ற பிறப்பைப் பெறுகிறது.

நிர்விகல்ப சமாதி நிலையில் சூக்கும உடல், காரண உடல், மனம், குண்டலினி சக்தி, ஆன்மா ஆகிய அனைத்தும் கடவுள், அல்லது பிரம்மம், அல்லது உயிர்ச்சாரப் பெருங்கடலில் தன்னில் தானாகக் கலந்து விடுகிறது.

## 9. முடிவுரை

உயிர் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் உண்டு. ஒன்று ஆன்மிக உயிர் — மற்றொன்று உலகாயத உயிர். இதில் ஒன்றைவிட்டு ஒன்றை மட்டும் வைத்துக் கொள்வது என்பது ஏலாதது. மனித குலத்தின் நன்மைக்கும் மேம்பாட்டுக்கும் ஆன்மிகம், உலகாயதம் ஆகிய இரண்டின் வளர்ச்சியுமே தேவை. தற்போதுள்ள நிலையில் விஞ்ஞானம் மனிதனின் ஆன்மிகப் பகுதியை முழுக்க முழுக்க புறக்கணித்து விட்டது. இது மிகவும் வருந்தத்தக்கது அபாயகரமானது. பொறுப்பில் உள்ளவர்கள் இதைப் பற்றி ஒரு கணமேனும் சிந்திக்க வேண்டும். மனிதனின் ஆன்மிக மேம்பாட்டுக்கான முயற்சியில் கவனம் செலுத்த வேண்டும். உண்மையான உலக சமாதானத்துக்கும், சர்வதேச நாடுகளின் முன்னேற்றத்துக்கும் இந்த இணைப்பு மிகமிக இன்றியமையாதது. மெய்ஞ்ஞானம் மிகவும் சூக்குமமானது, சிரமமானது. மெய்ஞ்ஞானத்தில் புதைந்துள்ள உண்மைகளைக் கண்டறிய கருவிகளைப் பயன்படுத்த

முடியாது. எதிர்காலத்திலும் கூட இது முடியாதது! விஞ்ஞானம், எங்கே முடிகிறதோ அங்கே மெய்ஞ் ஞானம் பிறக்கிறது. இதில் மிகையேதுமில்லை!

விஞ்ஞானிகளின் மனமும்,அறிவுமே விஞ்ஞானத் தின் பல்வேறு சூக்கும உலகாயத உண்மைகளைக் கண்டு பிடித்துள்ளன! அவர்களால் கண்டுபிடிக்கப் பட்டுள்ள சோதனைக் கருவிகள் அதிநுட்பமானதாக இருப்பினும் அவற்றால் மனம், குண்டலினி சக்தி ஆன்மா ஆகியவற்றைக் காண முடியாது. ஏனெனில் மனம் அதி சூக்கும சக்தி. குண்டலினி சக்தி மனத்தைவிட மிக அதிக நுட்பமுள்ளது. ஆன்மா இந்த இரண்டையும்விட அதீத நுட்பம் படைத்தது.

கடவுளும், ஆன்மாவும் வித்தியாச மற்றவை. கடவுள் அல்லது பிரம்மம் சூக்குமங்களுக்கெல்லாம் அதி சூக்குமமானது. பொருள்களுக்கெல்லாம் மூலப் பொருளாக இருப்பது. அதற்கு உருவம் கொடுப்பது இயலாதது. அதை ஆய்வுக்கூடத்திலுள்ள எந்த ஒரு சோதனைக்குழாயிலும் சோதிக்க முடியாது. அதனால் விஞ்ஞானிக்கு இது ஓர் அபூர்வமாகவே இருந்து கொண்டிருப்பது! விஞ்ஞானிகள் பலருக்கும் மனம், குண்டலினி சக்தி, உயிர்ச்சாரம் அல்லது ஆன்மா போன்றவற்றின் பொருளைப் புரிந்து கொள்ள இயலாமற் போகிறது. சூக்கும உலகின் அற்புதங்களை ஒருவர் புரிந்து கொள்ள

விரும்பினால், அவர் தன்னுடைய சொந்த மனத்தை உபயோகப்படுத்த வேண்டும். அவர் தியானத்தினாலும், பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தும்மனத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும். இந்த நிலையில தூய்மைப்படுத்தப்பட்ட மனம் சூக்குமக் கருவியாகவும் மூளை மையமே ஆய்வுக் கூடமாகவும் அமைகிறது, ஒருவர் இந்தக் குறிப்பிட்ட நிலையை ஆதாரமாகக் கொண்டு ஆன்மிகப் பயிற்சியைத் துவங்கினால் மனத்துக்குள் நிகழும் இரகசியங்களைக் கண்டறிய முடியும். யாருக்கெல்லாம் துணிவிருக்கிறதோ, மனித குல மேம்பாட்டுக்கு யாரெல்லாம் பாடுபட நினைக்கிறார்களோ, அவர்கள் தங்களுடைய வாழ்க்கையைத் தியாகஞ் செய்யச் சித்தமாக இருக்க வேண்டும். உலகம் பூராவிலும் ஏற்கெனவே இத்தகைய பணிக்கு அர்ப்பணித்துக்கொண்ட நானூறுக்கு மேற்பட்ட ஆண்—பெண் துறவிகள் நம்மிடம் உள்ளனர். இத்தகைய மாபெரும் வீரர்களையும் வீரங்கனைகளையும் (ஆண் - பெண் துறவிகள்) தவிர்த்து, ஆயிரமாயிரம் சீடர்கள் தியானத்தின்மூலம்உயர் நிலைக்குஉயர்வதற்குமுனைந்து விட்டனர். இந்த ஆண்—பெண் இருபால் துறவிகள் அனைவருமே கண்டிப்பான கற்பு நெறியைக் (பிரம்மச்சரியத்தைக்) கடைப்பித்து வாழ்கின்றனர். காலை—மாலை இரு வேளையும் தவறாமல் தியானம் பழகுகிறார்கள். தூய, எளிய, புனித வாழ்வை மேற்கொண்டு வாழ்கிறார்கள். இந்த வகையைச் சார்ந்த டாக்டர்கள் ஐரோப்பாவில்

இருபது பேரும், இந்தியாவில் ஐம்பதுக்கு மேற்பட்ட வர்களும் தியானம் பயில்கிறார்கள். இந்த டாக்டர் களில் சில ஆண்களும், பெண்களும் துறவுநிலையை மேற்கொண்டுள்ளனர். இவர்கள் அனைவருமே என்னுடைய தத்துவ போதனைகளை நன்கு புரிந்து கொண்டவர்கள். அவற்றில் எதையுமே அவர்கள் மறுக்கவில்லை. மாறாகத் தத்துவம் அனைத்திலும் உள்ள விஞ்ஞானபூர்வமான விளக்கங்களைப் புரிந்து கொண்டுள்ளனர்.

மனக்கட்டுப்பாடு மிகவும் இன்றியமையாதது. அதற்காகப் பின்பற்றப்படும் வழிமுறைகள் விஞ்ஞான ரீதியிலானவை. எல்லா வகை விஞ்ஞான பகுப்புகளுக்கும் அப்பாற்பட்ட மனம், அறிவு, உள்ளு ணர்வு, சிந்தனை, ஞான திருஷ்டி, குண்டலினி சக்தி, உயிர்ச்சார உணர்வு போன்ற தலைப்பி லானவை மிகமிகக் கடினமானவை. இவற்றை வெற்றிகரமாகச் செய்து முடிக்க மனத்தூய்மை, மனத்தின் சூக்குமத் தன்மை, மன ஒருமைப்பாடு ஆகியவற்றினால்தான் இயலும். ஆதலின் ஒவ் வொருவரையும் நீங்களே முயன்று முன்னேறுங்கள்' என்று கூறி வரவேற்கிறோம்.

எழுமின்! விழிமின்!! வெற்றிமுனை சேரும் வரை அயர்வு கொள்ளாதீர்!!!

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# பிரம்மம் அகிலாண்டம்

## (Brahmam And The Universe)

BY : SWAMY NARAYANANANDA



From :

The Complete Works of Swamy Narayanananda.

Vol. 23

# பிரம்மம் — அகிலாண்டம்

## (அருவக்கடவுள் — அகிலம்)

**பரமான்மா** (Macrocosm)

சூரியனைச் சார்ந்த நட்சத்திர மண்டலம் சூரியனின் ஆளுகைக்கு உட்பட்டது. நம் கண்ணுக்குப் புலனாகும் ஒவ்வொரு சின்னஞ்சிறு நட்சத்திரமும் ஒவ்வொரு சூரியன் ஆகும். இந்த ஒவ்வொரு நட்சத்திரமும் தன் ஆளுகையின் கீழ் தனியான நட்சத்திர மண்டலத்தைக் கொண்டுள்ளது. இது போன்ற எண்ணற்ற நட்சத்திரங்கள் வானத்தில் பால் ஒளிப்பாதையை (Milky way) தோற்றுவிக்கின்றன. அகண்ட பரவெளியில் எண்ணில்டங்காத பால் வெளிப்பாதைகள் உள்ளன. அகண்ட பர வெளிக்கு ஆரம்பமோ — இடையோ — முடிவோ இல்லை! அது ஒன்றே ஒன்று தான் அவை இரண்டாயின் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுக்கும். எல்லை வகுக்கப்பட்ட ஒன்று எல்லையில்லாத பரவெளி ஆக முடியாது!

**பிரம்மம் (அருவக் கடவுள்)**

பிரம்மம் நுட்பத்தினும் அதி நுட்பமானதால் மிகப் பரந்த வெற்று வெளியைப் போல் தோன்று கிறது. அது உண்மையல்ல. ஓர் அறைக்குள் விளக்கை வைத்தால் அறை முழுவதும் வெளிச்சம் பரவுகிறது. அதேபோல் பிரம்மம் எனும் உயிர்ச்சாரம் பரவெளி முழுவதும் வியாபித்திருக்கிறது. ஒன்று மில்லாததிலிருந்து ஒன்றும் வருவதில்லை. இயந்திர சக்தி, ஜடப்பொருள் அல்லது வெற்றுவெளி ஆகியவை உயிர்ப் பொருள்களை உண்டாக்க முடியாது. உயிர் உயிரிலிருந்தே வர முடியும். உண்மையில் இயந்திர சக்தி, ஜடப்பொருள், அல்லது வெற்று வெளி என்பதே கிடையாது. ஒவ்வொன்றும் உயிர்ச்சாரம் நிரம்பியதுதான். பிரம்மம் அகிலம் முழுவதிலும் வியாபித்துள்ளது. எல்லையற்றிருப்பது. நிர்விகல்ப சமாதி நிலை எய்துவதற்கு சற்று முன்ன தாக ஒருவர் பெரும் வெளிப்பரப்பைக் காண்கிறார். அந்தக் குறிப்பிட்ட வெளி ஒளி படைத்தது என்றோ, ஒளியற்றது என்றோ கூற முடியாது! அந்தப் பரவெளி உண்மையிலேயே வெற்றுவெளி அல்ல. உயிர்ச் சாரம் மிக மிக நுட்பமான ஒன்றானதால் அது வெற்று வெளிபோல் தோன்றுகிறது. மேலும் வெளி யைப் பார்க்க மனம் வேண்டும். மனம் படைத்த மனிதன் வேண்டும். அதுவே இரு நிலைத் தன்மை [Duality]. ஒருவர் மேலும் உயிர் நிலைக்கு உயரும் போது மனம் அங்கே இரண்டறக் கலந்து விடுகிறது.

அதன் பிறகு காண்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான் அதுவே உயிர்ச்சார மகாசமுத்திரம்

மின்சாரம் பரவெளி பூராவிலும் மிக நுட்பமான சாரமாக வியாபித்துள்ளது. ஆயினும் நம்மால் அதை உணர முடிவதில்லை. அதே மின்சாரத்தை மின் இயக்கி சாதனத்தின் [Dynamo] மூலமாகத் தேக்கி மின்கம்பிகள் வழியாகப் பாய்ச்சும்போது நமக்கு அது புலனுகிறது. அதுபோலவே அந்த ஒரே பிரம்மமாகவுள்ள உயிர்ச்சார உணர்வெனும் மகா சமுத்திரம் தனித்தனி உயிர்களாக வெளிப்படு கிறது. பிரம்மத்திற்கு எல்லா ஆற்றல்களும் உண்டு எதையும் செய்ய வல்லவர். அது தோன்றி, மறைந்து மீண்டும் தோன்றுவது.

பிரம்மம் முழுமையானவர் (பூரணன்). அது ஒன்றே ஒன்று — எல்லையற்றது. முடிவற்ற நிலையில் சக்தியின் மொத்தக் கூட்டுத் தொகை ஒரே மாதிரியானது. அந்த எல்லையற்ற நிலையில் அதைக் கூட்டவோ, குறைக்கவோ முடியாது. எல்லையற்றதைக் கூட்டவும் குறைக்கவும் முடியுமா யின் அதற்கு எல்லை வந்து விடுகிறது.

பிரம்மம் எல்லையற்றெங்கணும் வியாபித்திருப் பதால் அந்த எல்லையற்ற பரவெளி முழுவதுமே உயிர்ச்சாரத்தினால் நிரப்பட்டுள்ளது.

பிரம்மம் ஒன்றே ஆயினும் அது அகிலத்தில் காணும் பல பொருள்களாகத் தோன்றுகின்றன. உண்மையில் அது ஒன்றே ஒன்றுதான்! ஆகாயத்

திற்கு நிறம் கிடையாது. ஆனால் நாம் நீல நிறத்தைக் காண்கிறோம். அதே போல் மாசு படைத்த மனமும் புலன்களும், ஒருவரை ஏமாற்றி ஒன்றைக் காண்பதற்குப் பதிலாகப் பலவாகக் காட்சி தருகின்றன. நாம் காணும் அகிலம் நமது மனமும் ஐம் புலன்களும்காட்டுவதைப் பொறுத்தே அமைகிறது. மனம் மாசுற்றிருந்தால், புலன்கள் பழுதுற்றிருந்தால் அகிலத்தை நாம் மாற்றுக் கண்ணோக்கில் காண்கிறோம்.

ஒரு பைத்தியக்காரன் பார்வையில் உலகம் முழுப் பைத்தியமாகத் தெரிகிறது. உலகமே அவனுக்கு மதிப்பற்றதாகி விடுகிறது; உபயோகமில்லாததாகத் தோன்றுகிறது.

ஆனால் ஒரு ஞானி உலகத்தை முழு பிரம்மமாகவே காண்கிறார். அவருக்கு ஒவ்வொன்றும் இனிமையாக இருக்கிறது.

உயிரோட்டம் நிறைந்ததாக இருக்கிறது. ஆக உலகம் என்பது ஒன்றுமில்லை. உங்களுடைய மனத்தின் கற்பனையே! நீங்கள் விதைப்பதையே அறுவடை செய்கிறீர்கள். வாழ்க்கையில் உங்களுடைய உயர்வு தாழ்வுகளை நீங்களே உண்டாக்கிக் கொள்கிறீர்கள். கடந்தகாலத்தில் ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் உருவில் நீங்கள் எதைச் செய்தீர்களோ அதையே இப்போது அனுபவிக்கிறீர்கள். தற்போது நீங்கள் அனுபவிக்கும் இன்ப துன்பங்களுக்கு கடந்தகால ஆசைகள், எண்ணங்கள்

செயல்களே காரணமானால் உங்களுடைய எதிர் கால வாழ்வும்-தாழ்வும் தற்போது நீங்கள் செய்யும் நல்லது-கெட்டதைப் பொறுத்தே அமைகின்றன.

நாம் காணும் சூரியனைவிட உருவில் கோடானு கோடி அளவு பெரியதான சூரியனை கற்பித்துக் கொள்ளுங்கள். அந்த மிகப் பெரிய சூரியன் எல்லா அகிலத்துக்கும் ஒளி வழங்குவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அந்தச் சூரியனில் இருந்து புறப்படும் ஒவ்வொரு ஒளிக்கதிரும் தனித் தன்மையுடையது. இந்த எண்ணிலடங்காத ஒளிக் கதிர் எண்ணிலடங்காத சூரியன்களாக நமக்குத் தோற்றமளிக்கிறது. தனித்தனி சூரியன்களாக இவை தோன்றினாலும் அவை சூரியனிலிருந்து வேறுபட்டவை அல்ல.

இந்த ஒளிக்கதிர்களுக்கு அடிப்படையாக இருப்பது அந்தப் பெரிய சூரியனே, அந்த மாபெரும் சூரியனை தவிர்த்து இந்தக் கதிர்கள் ஒளிவிட முடி யாது. அதேபோல் உலகில் காணும் தனிப்பட்ட உயிர்கள் அந்த ஒளிக்கதிர்களைப் போன்றவர்கள். இந்தத் தனிப்பட்ட உயிர்ச்சார மகாசமுத்திரத்தைத் தவிர்த்து தனிப்பட வாழமுடியாது.

முன்பே கூறியுள்ளதைப் போல் தன்னில் தானாகவே விளங்கும் உயிர்ச்சார உணர்வெனும் மகாசமுத்திரமாகவுள்ள பிரம்மமே இந்தஅகிலத்தின் மூலகாரணன். பிரம்மத்தின் சக்தியே (பிரம்மசக்தி) இந்த அகிலத்தின் தோற்றமாகவும், அதிலுள்ள

பல்வேறு உருவங்களாகவும், பெயர்களாகவும் தோன்றுகிறது. இந்த உலகின் பெயர்களையும், உருவங்களையும் ஆராய்ந்து பார்த்தோமானால் இவை அனைத்துமே பிரம்மமெனும் மாபெரும் மூலகாரணத்தில் போய் முடிவது தெரியும். இந்தக் கொள்கை—அதாவது ஒன்று பலவாகத் தோன்றும் இந்த இரகசியம் ஒரு புதிர். இந்த அகண்டம் பல்வேறு பெயர்களையும் உருவங்களையும் கொண்டது. இந்தப் பல்வேறு பெயர்களையும் உருவங்களையும் அப்புறப்படுத்தி விட்டுப்பார்த்தால் மீதமிருப்பது கடவுள் மட்டுமே! ஒவ்வொன்றிலும் ஒரு நிலையான மாற்றம் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது! வளர்ச்சி என்றால் அதுவும் மாற்றமே. அழிவு என்றாலும் மாற்றமே. மரணமும் மாற்றமே! ஓர் உருவத்திற்கு இடைவிடாத மாற்றம் இருப்பினும் 'உருவம்' என்னமோ இருக்கத்தான் இருக்கிறது. ஒரு தனிப்பட்ட நபரின் உருவம் இருக்கிறது.

முதுமை, தளர்வு, மரணம் அல்லது அழிவு என்ற நியதிகள் ஒவ்வொரு தனி உருவத்திற்கும் வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பொருளும் மாற்றமடைவது திண்ணமெனில் எந்த ஓர் உருவத்திற்கும் முதுமை என்பது வரக்கூடாது. ஆயினும் ஒவ்வொரு உருவத்திற்கும் முதுமை வருவதை நாம் பார்க்கிறோம். ஒவ்வொரு உருவமும் தளர்வுற்று மரணமடைவதையும் பார்க்கிறோம். இது அதிசயந்தான்!

மனம் என்ற ஒன்று இருக்கிறவரைக்கும் மேலும் அந்த மனமானது மாசுள்ளதாக இருக்கும் வரைக்கும் ஒருவர் பெயர்களும், உருவங்களும் கொண்ட உலகத்தைத்தான் காண்பார். மனம் தூய்மை பெற்று ஒருமுகப்பட்டு நிர்விகல்ப சமாதி நிலையை எய்தும் போது இந்த அகிலமே மறைந்து போகிறது. அதன் பிறகு அவர் பலவாக உள்ளது ஒன்றையே காண்கிறார்.

இதிலிருந்து ருசுப்பிக்கப்படுவது இந்த உலகம் மனத்தின் கற்பனையேயன்றி வேறொன்றுமில்லை என்பதாகும். ஒவ்வொரு நாளும் ஒருவர் மூவகை நிலைகளை அனுபவிக்கிறார்.

விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்க நிலை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் இவற்றை அனுபவிக்கிறார்கள். விழிப்பு நிலையில் பெயர்களும் உருவங்களும் கொண்ட அகிலம் உண்மையானதாகப் புலப்படுகிறது.

அதே மனிதன் கனவு காணும்போது முற்றிலும் மாறுபட்ட உலகத்தில் உலவுகிறான். அந்த நேரத்தில் கனவு உலகம் அவருக்கு உண்மை போல் தோற்றுகிறது. கனவின்போது அந்தக் கனவின் இயல்புக்கேற்ப அழுகிறார், சிரிக்கிறார். கனவு காண்பவர் அவர் காணும் கனவின் தோற்றத்தை 'பொய்' என்று உணருவதில்லை.

அதே மனிதன் ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் போது எல்லாமே அவர் நினைவிலிருந்து

மறைந்து போகிறது. ஆழ்ந்த உறக்கத்தின் போதும் ஒருவர் பரவெளியில் மூழ்குகிறார்.

இந்தப் பரவெளித்தோற்றம் பொய்த்தோற்றம் என்றும் கூறிவிட முடியாது. உயிர் மட்டும் இயக்கத்திலிருப்பதால் அதன் சூக்குமத்தன்மையே பரவெளீயாகக் காட்சியளிக்கிறது. உண்மையில் அது காலி வெளியல்ல. அதுவும் உயிர்ச்சாரம் நிறைந்தவெளி

ஒரு மனிதன் தன் வாழ்நாளில் இந்த மூவகை நிலைகளிலும் அதிகமான ஆயுளைச் சிலவழிக்கிறான். எனின் இதில் எது உண்மையான நிலை? விழிப்பு நிலை வாழ்வை மட்டும் உண்மையானது என்று எடுத்துக் கொண்டு மற்ற இரண்டையும் ஒதுக்கிவிடலாமா? அவ்வாறெனில் வாழ்க்கை அர்த்தமற்றதா? இதைத் தவிர்த்து நான்காவதாகவும் ஒரு நிலை உண்டு. அதுதான் நிர்விகல்ப சமாதிநிலை (ஆழ்நிலைத்தியான நிலை). இந்த நிலை மனத்தை ஒதுக்கிய அனுபவநிலை. இங்கு மனமும் குண்டலினிசக்தியும் தன்னில் தானாகவுள்ள உயிர்ச்சார உணர்வெனும் மகா சமுத்திரத்தில் கலந்து விடுகிறது.

எல்லாமே அதனுள் ஐக்கியமாகி விடுகிறது. இது சூரியனிலிருந்து வந்து ஒளிக்கதிர் பின்னோக்கி சூரியனையே போய்ச் சேருவதைப் போன்றது!—ஆழ்ந்த உறக்க நிலையிலுங்கூட ஒருவர் தன்னுள் உள்ள சீவான்மாவுக்குள் திரும்பிப் போய்ச் சேருவதாகும். அப்போது மனமானது கணநேரம்

சீவான்மாவில் ஒன்றி விடுகிறது. ஆயினும் சித்தமும் (மனக்கோப்பும்), அறியாமையும் அகலாமலிருக் கின்றன.

மூச்சு இழைந்து கொண்டிருப்பது ஏனெனில் குண்டலினி சக்தியும், நாடித்துடிப்பும் இயங்கிய வண்ணமிருக்கின்றன. ஆனால் நிர்விகல்ப சமாதி நிலையில் நாடித்துடிப்புகளும், குண்டலினி சக்தியும் பிரம்மத்தில் ஒன்றிப் போவதால் மூச்சு இழைவதும் தானாகவே நின்று விடுகிறது. நிர் விகல்ப சமாதிநிலையில் ஒருவர் மூச்சு இயக்க மின்றியே இருக்கிறார். அதன்பிறகு முச்சு இயக்க மின்றி இருப்பதுதான் இயற்கையான நிலை என்றாகிவிடுகிறது!

மற்றுமொரு உதாரணம். ஒருவர் விமானப் பயணத்திற்காகப் புறப்படுகிறார். விமானம் தரை யில் நிற்கிறது. இந்த நிலையில் அவர் மனிதர்கள், வீடுகள், கார்கள், மரங்கள் போன்ற பல்வேறு பொருட்களைப் பார்க்கிறார். இப்போது விமானம் புறப்படுகிறது. மேலேறிச் செல்கிறது.

விமானம் தரைக்கும் மேகங்களுக்கும் இடையில் பறந்து செல்லும் போது அவர் பசுமையான காட்சியை மட்டுமே பார்க்கிறார். அதே விமானம் மேகங்களுக்கும் மேலே பறக்கும்போது அவர் மேங்களை மட்டுமே பார்க்கிறார். மற்றதெல்லாம் மறைந்து போகிறது. இதேபோல் ஒருவர் நிர் விகல்ப சமாதி நிலைக்குப் போனவுடன் பெயர்களும்

உருவங்களும் கொண்ட அகிலம் மறைந்து விடுகிறது. அதன் பின்னர் காணக்கூடியது பிரம்மம் எனும் ஒன்றே ஒன்றைத்தான். அதனால் பெயர்களும், உருவங்களும் கொண்ட அகிலம் உண்மையில் அர்த்தமற்றதாகி விடுகிறது.

மனம், புலன்களின் மாசுபடிந்த தன்மையினால் தான் இந்தக் கானல் தோற்றம் விளைகிறது.

நிர்விகல்ப சமாதி நிலையை எய்தியவுடன் அதோடு நிறுத்திக் கொள்வது நல்லது. ஆனால் விஞ்ஞானிகள் அதற்கான விளக்கம் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடையவில்லை. சில விஞ்ஞானிகள் இந்த உலகம் அல்லது அகிலத்தில் முதன் முதலாக உயிர் எப்போது வந்தது என்பதை நிரூபணம் செய்ய விரும்புகிறார்கள். அவர்களிடம் நான் பின்வரும் கேள்விகளைக் கேட்க விரும்புகிறேன்.

1. உயிர் எங்கிருந்தது வந்தது?
2. 'உயிர்' என்ற வார்த்தைக்குப் பொருள் என்ன?
3. 'உயிர்' இல்லாமல் எதையாவது வளர்க்க முடியுமா?
4. ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்று வருமா?
5. ஜடப் பொருளோ அல்லது இயந்திர சக்தியோ பகுத்தறிவு உள்ள உயிர்களைத் தோற்றுவிக்க முடியுமா?

நாம் இயற்கையை ஆராய்வோமானால் இயற்கையில் உள்ள எல்லாமே ஒருவகை கட்டுக்கோப்புடன் இயங்குவதைக் காணலாம். ஒவ்வொரு ஆண்டிலும் குறிப்பிட்ட காலகட்டத்தில் பல்வேறு பருவகாலங்கள் வருவதைப் பார்க்கிறோம். மாறுபட்ட பருவங்களில் அதததற்கேற்ற உயிரினங்களும், தாவர வகைகளும் உற்பத்தியாகின்றன. ஓர் ஆப்பிள் மரத்தில் ஆப்பிள் பழங்களே பழுக்கின்றன. ஆரஞ்சு மரம் ஆரஞ்சுப் பழங்களை மட்டுமே தருகின்றன. மனித குலத்தில் ஆண்கள் பெண்களுக்கிடையே மனித இனக் குழந்தைகள் மட்டுமே பிறக்கின்றன. மிருகங்கள், புழுபூச்சிகள் மிருகங்களையும், புழு பூச்சிகளையும் ஈனுகின்றன. இதில் எவ்விதத் தவறும் நிகழ்வதில்லை. உயிரற்ற ஜடப் பொருளோ அல்லது இயந்திர சக்தியோ இது போன்ற அறிவாற்றல் நிறைந்த உயிர்ப் பெருக்க அதிசயத்தை நிகழ்த்த இயலுமா?

பல்வேறு உயிர்வகைகள் விஞ்ஞான பூர்வமாக நடந்து கொள்வது எப்படி? குருட்டாம் போக்காகவா? அவ்வாறெனில் இந்த பதில் நகைப்புக்குரியது; அடிமுட்டாள்தனமானது, அறியாமை மிக்கது.

உதாரணமாக ஒரு கோழி அப்போது இட்ட முட்டை ஒன்றை எடுத்துக் கொள்வோம். அந்த முட்டையில் உயிர் உள்ளதா? ஆம்! முட்டையில் உயிர் உள்ளது. எல்லாருமே இதை ஒப்புக் கொள்

வார்கள். ஏனெனில் உயிர் இல்லையெனில் முட்டைக்குள் குஞ்சு வளர்ச்சியடையாது. உயிரற்ற முட்டையிலிருந்து குஞ்சுபொரித்து வெளியே வரவும் முடியாது. உயிர்க்குஞ்சு வெளியே வந்தவுடன் முட்டை இறந்து போகிறது. அத்தகைய முட்டையிலிருந்து நாம் ஒரு கோழிக் குஞ்சை எதிர் பார்க்க முடியாது. ஒரு பெட்டைக்கோழி நல்ல முட்டைகளை அடைகாத்த பிறகே குஞ்சுகள் பிறக்கின்றன. இதில் ஓர் அதிசயத்தை விளக்க வேண்டியுள்ளது. இரு வேறு பொருள்களின் கலவையிலிருந்து (முட்டைக்குள் உள்ள வெள்ளை மஞ்சள் நிறக் கருக்கள்) இறகுகள், தோல், இறக்கைகள், தலை, கால்கள், விரல்கள், நகங்கள், கண்கள், அலகு போன்ற பல்வேறு உறுப்புகளை உடலமைப்பில் காண்கிறோம். உடலுக்குள் மூளை, நாளங்கள், நரம்புகள், இருதயம், நுரையீரல்கள், பித்தகோசம், வயிறு, சிறுகுடல்கள் போன்றவை இருக்கின்றன. நாம் ஒரு முட்டையிலிருந்து வரும் குஞ்சைப் பற்றிப் புரிந்து கொண்டாலே போதும். எளிதான இதே நியதியை உலகத்திற்கும் ஒப்பிடலாம். ஏற்கெனவே கூறியுள்ளதுபோல் ‘உயிர்ச்சார உணர்வு’ உயிர்ச் சாரமில்லாத வெற்றுவெளி கிடையாது. அகிலம் முழுவதுமே உயிர்ச்சாரத்தினால் நிரப்பப்பட்டுள்ளது. ஆழ்ந்து நோக்கினால், தனி உயிர், தனி இறப்பு என்பதே அர்த்தமற்றது.

சூரியனும் அதன் ஒளியும் இணைந்திருப்பவை. அதேபோலப் பிரம்மம், அதன்சக்தி (படைப்பாற்றல்)

இரண்டும் ஒன்றேயாம். அவை ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போன்றது. ஒன்றைவிட்டு மற்றொன்று கிடையாது. ஒளியில்லாத சூரியனுக்கு அர்த்தமில்லை. சூரியனின்றி ஒளிக்கதிர்கள் மட்டும் தனியாகத் தோன்றிவிடாது. அதேபோலப் பிரம்மமும் அகிலமும் இணைந்திருப்பவை. அவை பிரிக்க முடியாதவை. அகிலம் இல்லாத பிரம்மத்திற்கு அர்த்தமில்லை. மறுபுறம் பார்த்தால் பிரம்மமின்றி அகிலம் என்ற ஒன்று தோன்றவே முடியாது. உண்மையைச் சொல்லப் போனால் ஒரே ஒரு தோற்றமே உண்டு. ஒவ்வொன்றும் அதற்கான உயிர் அல்லது ஆதாரத்தை உயிர்ச்சாரத்திலிருந்தே பெறுகிறது. இத்தகைய உயிர்ச்சாரம் எனும் பிரம்மத்திலிருந்து தோன்றும் உயிர்த் தோற்றத்தின் உண்மையை நிர்விகல்பசமாதி நிலையில் (ஆழ் நிலைத்தியான நிலையில்) தெளிவாக உணர முடியும். நிர்விகல்ப சமாதி நிலையில் ஒரு பொருள் அந்தப் பொருளின் உருவம், அதற்கான அறிவு ஆகிய எல்லாமே ஒன்றாகவே ஒன்றி விடுகிறது! சீவான்மா, குண்டலினி சக்தி, மனம் பிரம்மத்தில் ஐக்கியமாகிறது. அதன் பின்னர் காண்பது பரவெளி முழுவதும் சூழ்ந்திருக்கிறது. உண்மையில் உயிர்ச்சார உணர்வெனும் மகாசமுத்திர (பிரம்மம்) மட்டுமே.

விஞ்ஞானிகள் அணுவைப் பிளந்த பிறகு சடம் என் பதே கிடையாது என்ற முடிவுக்கு வந்துள்ளனர். உயிர்ச்சக்தி மட்டுமே உண்டு என்று தெரிந்து

கொண்டார்கள். ஆனால் இந்த சக்தி உயிர்ச்சார முடையதா அல்லது சட சக்தியா என்பதை அவர்கள் இன்னும் புரிந்து கொள்ளவில்லை. ஆனால் நான் அவர்களுக்கு ஒன்று சொல்வேன். உயிர்ச்சார மில்லாமல் சடசக்தி மட்டும் இருக்க முடியாது என்பதே அது. சக்தி என்ற ஒன்று எங்கெல்லாம் இருக்கிறதோ அதன் பின்னணியில் உயிர்ச்சாரம் இருந்தே தீரும். அந்த உயிர்ச்சாரம் அதி நுண்ணி யது. அது பார்வைக்குப் புலப்படாதது.

பிரம்மமே இந்த அகிலத்தின் மூலகாரணம். இந்த அகிலம் பிரம்மத்திலிருந்தே சக்தியைப் பெறு கிறது. பிரம்ம சக்தி எதிரும் புதிருமான இருவேறு சக்தி கொண்டது (Positive and Negative Forces) இந்த இருவேறு சக்திகளே பிராண சக்தியாக உரு வெடுக்கிறது. எதிரும் புதிருமான மின்சக்தி (Positive and Negative Electricity) அதிநுட்பமான நிலையில் எதிர்மாறான தன்மைகளை தோற்று விக்கவல்லது. அதாவது வெப்பம்-தட்பம்; இன்பம்-துன்பம்; ஒளி-இருட்டு; வெற்றி-தோல்வி போன்ற வை முடிவில் அகிலத்தின் ஆண்-பெண் இனப் பாகுபாட்டில் முடிகிறது. இந்த இருவேறு சக்தி களின் சேர்க்கை பயன்களை விளைவிக்கின்றன. இருவேறு மின்சக்திகள் இணையும்போது நமக்கு வெளிச்சம் கிடைக்கிறது. ஆண்-பெண் இனச் சேர்க்கையால் பாரம்பரியம் உண்டாகிறது, பிரம்மம் -சக்தி ஆகிய இரண்டும் ஆண்-பெண் உடல்களில் எதிரும் புதிருமான (Positive and Negative) சக்தி

களாக இயங்குகின்றன. இதை விஞ்ஞானிகள் மையச் சுழல் சக்தி (Centifugal) நாடிக்கதிர்கள் சுழல் மைய சக்தி (Centipetal) நாடிக்கதிர்கள் என்கின்றனர். ஓர் அணுவிலும் கூட இதே எதிரும் புதிருமான சக்திகளின் சுழல் முறையையே காண்கிறோம். இந்த இருவேறு சக்திகளை விஞ்ஞானிகள் மின்சுழல் அணுக்கள் (Electron); உயிர் நீக்கி அணுக்கள் (Forces) என்கின்றனர். ஒரு ஆண் அல்லது பெண்ணின் உடம்பிலிருந்து உயிர் பிரிந்ததும் நாடியோட்டம் நின்று விடுகிறது.

ஓர் அணுவின் சுழல் மையமே அந்த அணுவின் உயிர்ச்சார மையம். இந்த உயிர் விளக்கக் கொள்கை (Life Principle) உண்மையில்லையெனில் இரு வேறு சக்திகளான மின் சுழல் அணுக்கள் உயிர் அணுக்கள் என்பதே இருக்க முடியாது. இதிலிருந்து எந்த ஒரு சக்தியும் உயிர்ச்சாரத்தின் ஆதாரமில்லாமல் தனித்து இயங்க முடியாது என்பது நிரூபணமாகிறது. நம் கண்ணுக்குப் புலனாவது, புலனாகாததுமான எல்லா சக்திகளுக்கும் மூலகாரணமாக உள்ளதே உயிர்ச்சாரம்.

சீவான்மா :

வாழும் மனிதன் ஒருவனை ஆராய்வோமாயின் அவனிடம் உயிர் அல்லது உயிர்ச்சாரம் இருக்கிறது. குண்டலினி சக்தியும் இருக்கிறது. மனம் உள்ளது. ஐந்து சூக்மகுப்புலன்களும், ஐந்து தூலப்புலன்களும் இருக்கின்றன. மூளை மையத்திலிருந்து விஞ்ஞானம்

ஆரம்பமாகிறது. ஏனெனில் மூளை தூலமானது. அவர்கள் தூல வடிவங்களை வைத்துக் கொண்டு தான் ஆராய முடியும். அதன் மூலம் அவர்கள் மனிதனின் பரு உடலில் பல்வேறு அரிய உண்மை களைக் கண்டு கொண்டனர். ஆனால் உயிருள்ள மனிதனின் சூக்குமப் புலன்களை எடுத்துக் கொள் வோமேயானால் விஞ்ஞானம் அதைப் புரிந்து கொண்ட பாடில்லை.

மனம் மூளை அல்ல! மூளை தூலமானது. மனமோ அதி சூக்குமமானது. மூளை மையத்தில் மனம் செயல்படுகிறது. மூளையை ஒரு வானொலிப் பெட்டிக்கு ஒப்பிடுவோமானால், மனம் அதை இயக்கும் மின்சக்தி. வானொலிப் பெட்டி மின்சாரம் இல்லாமல் வேலை செய்யாது.

மின்சாரம் வானொலிப் பெட்டி இல்லையேல் ஒலி அலைகளை எழுப்ப முடியாது! அவை ஒன்றுக்கொன்று ஆதாரமானவை. ஒன்றோ டொன்று இணைந்தவை. உலக விஷயங்களை அறிவதற்கு ஐந்து சூக்கும புலன்களும், ஐந்துதூலப் புலன்களும் ஆரோக்கியமாக இருத்தல் வேண்டும். அப்படியானால்தான் மனிதன் உலகை அறிந்து கொள்ள முடியும்.

உயிருள்ள உடலில் உயிர்ச்சாரம் அல்லது ஆன்மாவே அரசோச்சுகிறது. அதனுடைய அரியா சனம் ஆன்ம இதய மையம். அதாவது வலப் பக்கத்

திலுள்ள ஆன்ம இதயம். இதுவே ஒரு மனிதனுடைய உயிர்ச்சார பீடம்.

மருத்துவ விஞ்ஞானம் நாடிக் கதிர்களின் இயக்கத்தைப் புரிந்து கொண்டுள்ளது. ஆனால் அதற்கு இன்னும் நாடிக்கதிர்களுக்கான மின் உற்பத்தி சாதனத்தைப் பற்றிச் சிறிதளவும் புரிய வில்லை. குண்டலினி சக்தி நாடிக்கதிர்களின் மின் உற்பத்தி சாதனம் (Dynamo) ஒரு சாதாரண ஆண் அல்லது பெண்ணுக்கு குத மையத்தில் (மூலாதாரச் சக்கரத்தில்) மின் உற்பத்தி சாதனம் அமைந் துள்ளது. இந்த மையம் குண்டலினி சக்தியின் எழுச்சி அல்லது வீழ்ச்சியைப் பொறுத்து மாறுபடு கிறது. நாடிக்கதிர்களுக்கும் மின்சாரத்திற்கும் மிக நெருக்கமான உறவுமுறை உண்டு. அதாவது நாடிக்கதிர்களை மென்மையாக இயங்கும் மின்சக்தி என்று குறிப்பிடலாம்.

ஆன்மாவை அறியும் கருவியாக இருப்பது மனம். விழிப்பு நிலையில் மனம் மூளை மையத்தில் நின்று இயங்குகிறது. ஐந்து சூக்குமப் புலன்கள், ஐந்து தூல புலன்கள் மூலமாக மனம் உலக விஷயங்களை அறிகிறது. உலகத்தைப்பற்றி உண்மையான ஞானத்தைப் பெறுவதற்கு சூக்கும—தூல புலன்கள் அனைத்துமே ஆரோக்கியமாக இருக்க வேண்டும். நல்ல முறையில் செயல்பட வேண்டும்.

ஒருவரிடமுள்ள சூக்கும— தூல புலன் நோய் வாய்ப்பட்டால் உலகைக் குறையுள்ளதாகத்தான் கணிப்பான். மனத்தின் துணையின்றிப் புலன்கள்

மட்டும் இயங்கி உலகத்தைக் கணிக்க முடியாது. புலன்களின் துணையின்றி மனம் மட்டும் தனியாக இயங்கி உலகத்தை அறிய முடியாது. குண்டலினி சக்தியும், உயிர்ச்சார உணர்வும் இன்றேல் மனம் என்ற ஒன்று வாழவே முடியாது. மனம் என்பது ஒரு சூக்கும சக்தி. அதன் பின்னணியில் உயிர்ச்சார சக்தியைக் கொண்டு இயங்குகிறது. இயந்திர சக்தியைப் போலன்றி மனம் தன் செய்கையை உணரும் சக்தி படைத்தது.

ஒரே மனமே பல்வேறு நிலைத்தளங்களில் வேலை செய்கின்றது, அது 'நினைவு நிலைத் தளம்', மறதி நிலைத்தளம், ஆழ் நிலைத்தளம் ஆகிய நிலைத்தளங்களில் நின்று வேலை செய் கிறது. விழிப்பு நிலையில் மனமானது மூளை மையத்தில் வேலை செய்கிறது. கனவு நிலையில் மூளையின் அடி மையத்தில் வேலை செய்கிறது. ஆழ்ந்த உறக்க நிலையில் கண நேரம் ஆன்மீக இதய மையத்தில் உள்ள ஆன்மாவில் ஒன்றுகிறது! ஆழ்ந்த உறக்க நிலையில் குண்டலினி சக்தியின் இயக்கம் இருந்து கொண்டே இருக்கிறது. இதன் காரணமாகவே ஆழ்ந்த உறக்கத்தின்போதும் மூச்சு இழைந்த வண்ணமிருக்கிறது. நிர்விகல்ப சமாதி நிலையில் குண்டலினி சக்தி சிரசின் மையம் வரை உயர்ந்து செல்லும்போது மூச்சு இழைவது தானாகவே நின்று விடுகிறது. அந்த நிலையில் மூச்சு இல்லாமலேயே ஒருவர் வாழ்கிறார்.

நிர்விகல்ப சமாதி நிலையில் எவ்வளவு நாள் இருந்தாலும் அதுவரை மூச்சு விடாமலேயே அவர் உயிர் வாழ முடியும். இதன் இரகசியம் வேறொன்றுமில்லை. இருதயம், நுரையீரல்களில் ஏற்படும் நாடிக்கதிர்களின் அதிர்வுகள் அவற்றை இயக்குகின்றன. நிர்விகல்ப சமாதியின்போது குண்டலினி சக்தி சுழுமுனை நாடி வழியாகவே செல்கிறது. (இது முதுகுத் தண்டை ஒட்டி ஓடும் சூக்கும நாடி). அவ்வாறு சென்று சிரசின் மையத்தை அடைகிறது. அதன் பின்னர் எல்லா நரம்புகளிலும் நாடிக்கதிர் வினியோகத்திலிருந்து துண்டிக்கப்படுகின்றன. இந்த நிலையில் ஒருவர் மூச்சு விடாமலேயே வாழ முடிகிறது.

மனமே புத்தியாகவும், உள்ளுணர்வின் ஆற்றலாகவும், அகந்தையாகவும் செயல்படுகிறது. ஒன்றைப்பற்றிய மதிப்பீட்டை ஆராய்ந்து முடிவெடுக்கும்போது அல்லது அதைப்பற்றிய விளக்கத்தை அறியும்போது மனத்திற்கு புத்தி என்று பெயர். இந்தப் புத்தி எனும் ஆற்றல் ஓர் ஆண் அல்லது பெண்ணிடம் அதிகமாகும்போது அறிவாளியாகவும் சக்தி மிக்கவராகவும் திகழ்கிறார். பைத்தியக்காரர்களிடம் புத்தி சாதாரண நிலையில் இயங்குவது தடைப்படுகிறது.

முட்டாள்களிடமும் மிருகங்களிடமும் புத்தி வளர்வதில்லை. புத்தி முடிவெடுத்தபடி உடலின் இயக்கசக்தியை மனம் ஊக்குவித்து இயக்குவதற்கே 'உள்ளுணர்வின் ஆற்றல்' (Will) என்று

பெயர். மனம் உடலையும், புலன்களையும் தான் என்று எண்ணும்போது அதற்கு 'அகந்தை' என்று பெயர்.

மனம் நான்கு பிரதான ஆற்றல்களைக் கொண்டது. அதாவது உள்ளுணர்வின் ஆற்றல் (Willing), உணர்ச்சி வயப்படும் ஆற்றல் (Feeling), ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றல் (Thinking), ஒன்று திரட்டும் ஆற்றல் (Gathering) ஆகும். இதன்படி முறையே ஒருவர் வேலையின் மூலமாகவும், பக்தி ஈடுபாட்டினாலும், தத்துவார்த்தத்தினாலும், யோகத் தினாலும் மனத்தைக் கட்டுப்படுத்த முடியும். இந்த நால்வகை ஆற்றல்களும் மனத்தைச் சார்ந்ததாகவே இருப்பினும் ஒரு சாதாரண ஆண் அல்லது பெண்ணிடம் இந்த நான்குமே சமச்சீராக வளர்ச்சி பெறுவதில்லை. பெரும்பாலோரிடம் ஏதாவது ஓர் ஆற்றல் மட்டுமே மற்ற மூன்றையும் விட அதிகமாக வளர்ந்திருக்கும்.

ஒவ்வொருவரும் விடுதலை, அமைதி, ஆனந்தத் திற்காகப் போராடுகிறார்கள். ஆனால் ஒரு சிலருக்கே அவற்றை அடைவதற்கான வழி தெரியும். பெரும்பாலானோர் இந்திரிய சுகங்களை அனுபவிப்பதிலிருந்தே விடுதலையையும், அமைதி யையும் ஆனந்தத்தையும் பெற முடியும் என்று நினைக்கிறார்கள். இது ஒரு குழப்பம். எதிர் பார்த்துக் காலமெல்லாம் காத்திருந்து வெதும்பிச் சாகிறார்கள். உண்மையான விடுதலை, அமைதி,

ஆனந்தத்திற்கு மனக்கட்டுப்பாடு ஒன்றே சிறந்தது. வேறு மார்க்கமே இல்லை. மனம், புலன்களின் அடிமையாக இருப்பவன் எப்போதும் நரக வேதனையையே அனுபவிக்கிறான்.

மனக்கட்டுப்பாடு என்பது விஞ்ஞான பூர்வமானது. அது மிகவும் கடினமான விஞ்ஞான இயல்களில் ஒன்று. மனக்கட்டுப்பாட்டிற்காகக் கையாளப்படும் வழி வகைகள் அதீதப் பகுத்தறிவின் பாற்பட்டது. அவை நல்ல பலனை நல்குவன.

பெரும்பாலோர் இந்திரிய சுகங்களில் மயங்கி விடுவதால் ஒரு சிலர் மட்டுமே துணிந்து மனக்கட்டுப்பாட்டிற்கான பயிற்சி முறைகளைக் கையாள்கிறார்கள். ஆவேசத்தின் உத்வேகம் புத்தியின் பகுத்தறிவுப்பான்மையால் முடிவெடுக்கும் மனத்தைத் பொறுத்து அமைகிறது. ஆவேசத்தின் உத்வேகம் இலேசானது, மத்திய தரமானது, ஆழ்நிலைத் தன்மையுடையது என்ற வகையில் அமையும். அவற்றைப் பல பிரிவுகளாகப் பிரிக்க முடியும். இருப்பினும் இந்த மூன்று பிரதான பிரிவுகளை எடுத்துக் கொண்டாலே நமக்குப் போதும். உணர்ச்சி வயப்படும்போது புத்தியினால் பகுத்தறியப்பட்ட முடிவு சாதாரணமானதாக இருந்தால், அந்த ஆவேசத்தின் விளைவு சாதாரணமாக இருக்கும்.

குண்டலினி சக்தியே மனத்தின் ஆதாரமாக இருப்பினும் மனம் நாடிக்கதிர்களின் மின் இயக்கி

சாதனத்தை (குண்டலினி சக்தியை) சாதாரண, அசாதாரண மிகக் குறைந்த வேகத்தில் இயக்கு கிறது. இது எப்படி? ஒரு மின் இயக்கி சாதனம் மின்சாரத்தை உற்பத்தி செய்கிறது. உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரத்தைக் கொண்டு அந்த மின் இயக்கி சாதனத்தை சாதாரண, மிகக் குறைந்த, அசாதாரண வேகத்துடன் இயங்கச் செய்யலாம்.

உதாரணமாக 'உணர்ச்சி'யின் வேகத்தை எடுத்து ஆராய்வோம். 'துக்கம்' என்ற உணர்ச்சி யைப் பார்ப்போம். நீங்கள் ஒருதேசத்தின்குடியரசுத் தலைவர் அல்லது பிரதம மந்திரியாக இருக்கிறீர் கள். முதல் முறை அந்தப் பதவிக் காலத்தில்சேவை செய்த பிறகு மீண்டும் தேர்தல் வருகிறது. இந்த இரண்டாவது முறைத்தேர்தலில் நீங்கள் குடியரசுத் தலைவராகவோ. பிரதம மந்திரியாகவோ வர இயலாமல் தோற்று விடுகிறீர்கள். இந்தத்தோல்வி உங்களைத் துக்கத்தில் ஆழ்த்துகிறது. இந்த நேரத்தில் உங்களுடைய மனத்தையும், உணர்ச்சி யையும் கட்டுப்படுத்தி உங்கள் மனத்தைச் சமநிலை யில் வைத்துக் கொண்டால் உணர்ச்சியின் வேகம் இலேசானதாக இருக்கும். அப்போது குண்டலினி சக்தியைத் தாக்கும். மனத்தின் வேகமும், இருதயத் திற்கும் சிரசிற்கும் போகும் நாடிக்கதிர்களின் ஓட்டமும் குறைந்திருக்கும். அதனால் இதயத் துடிப்பும் சமச்சீராக இருக்கும். அதே தோல்வியை நீங்கள் சற்றே துக்ககரமாக பாவித்தால் குண்டலினி சக்தியைத் தாக்கும் மனதின் வேகம் சற்று அழுத்த

மான நிலையில் இருக்கும். அதனால் இருதயம், சிரசிற்குச் செல்லும் நாடிக்கதிர்களின் ஓட்ட வேகமும் அதிகரிக்கும். அவையும் அசாதாரண வேகத்தில் வேலை செய்யும். அந்தத் தோல்வியை நீங்கள் மிகத் தீவிர பாதிப்புடையதாக எடுத்துக் கொண்டால் குண்டலினி சக்தியைத் தாக்கும் மனத்தின் வேகம் கட்டுக்கு மீறி இருக்கும். முடிவில் குண்டலினி சக்தியின் இயக்கமும் அளவுக்கு மீறிவிடு கிறது. மேல் நோக்கி விரைந்து செல்லும் நாடிக் கதிர்களின் ஓட்டம் மூளையையும், இதயத்தையும் கட்டுக்கடங்காத வேகத்தில் இயக்குகிறது. அதனால் அவர் அழுகிறார், விம்முகிறார். சமாதானப்படவே இயலவில்லை. இதுபோன்ற உணர்ச்சி வயப்படுப வர்கள் இதயநோய்க்கு உட்படுகிறார்கள். இறந்தும் விடுகிறார்கள்.

காவல் துறையில் மிகப் பெரிய பதவியிலிருந்த ஒருவரை எனக்குத் தெரியும். அவர் பதவியிலிருந்த போது மக்கள் அவருக்கு மதிப்புக் கொடுத்தார்கள். ரௌடிகள் அவரைக் கண்டு யயந்துநடுங்குவார்கள். இவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். தென் இந்தியாவில் பெங்களூரில் அவருடைய மாளிகை இருந்தது. 1977 இல் அவருடைய பங்களாவுக்கு எதிரில் சில ரௌடிகள் சண்டை போட்டுக்கொண் டார்கள். அந்தச் சண்டை அதிகாரியை மிகவும் தொல்லைப்படுத்தியது. அவர் அந்த ரௌடிகளை நெருங்கி அவர்களை அங்கிருந்து வெளியேறும்படி உத்தரவிட்டார். ஆனால் ரௌடிகள் பிடிவாதமாக

அந்த இடத்தை விட்டு அகலவில்லை. அங்கிரு வெளியேறுவதற்குப் பதிலாக அந்தக் காவல்து அதிகாரியை ஏசினார்கள். அதிகாரி இந்ந சம்ப தினால் மிகவும் பாதிப்படைந்தார். அவர் அதிகா திலிருந்தபோது ஒரு ரௌடிகூட அவர் எதி நின்று பேசியதில்லை. மனம் நொந்த அந்த கா துறை அதிகாரி இடத்தைவிட்டு தனது வீட்டிற் வந்து நாற்காலியில் அமர்ந்தார். மாரடை ஏற்பட்டுவிட்டது! உடனே இறந்து போனார்.

உணர்ச்சியின் வேகம் முழுவதும் உன்னை பொறுத்தே அமைகிறது. நீ அதை எப்படி எடுத் கொள்கிறாயோ. எவ்வாறு கையாள்கிறாே அவ்வாறே நிகழ்கிறது. உன் மனத்தையும் பு யையும் சரியான முறையில் பக்குவப்படுத்தி வை திருந்தால் எழும் உணர்ச்சிளை எளிதில் கட் படுத்திவிடலாம். அதன் பின்னர் எந்தவித உணர் யும் உங்களை அசைக்க முடியாது. எப்பொழு உணர்ச்சிகளை கட்டியாளும் எசமானாக நீங் ஆகிவிடலாம்.

உங்கள் மனத்தையும், புத்தியையும் நீங் கட்டுப்படுத்தி வைக்காவிட்டால் ஒரு உதவாக்க சம்பவங்கூட உங்களுள் ஒரு புயலைக் கிளப்பிவிடு சரியான மனக்கட்டுப்பாட்டினால் எப்படிப்ப நிலையிலும் எத்தகைய உணர்ச்சியையும்கட்டுக்கு கொண்டு வரலாம்.

பலமான தாக்குதலை உண்டாக்கும் உணர் களை சரியான முறையில் கட்டுப்படுத்தாவிட்ட

அவை பைத்தியத்திற்கும், இறப்புக்கும் காரண மாகின்றன — உதாரணத்திற்கு சில உண்மைச் சம்பவங்களை விளக்கப் போகிறேன்.

1. அரேபியாவில் உள்ள பாக்தாத் நகரத்தில் முதல் மகாயுத்தத்தின்போது ஓர் இந்தியர் இராணுவ எழுத்தராகப் பணிபுரிந்து வந்தார். யுத்தம் முடிந்தது; இராணுவம் கலைக்கப்பட்டது. இந்த எழுத்தர் ஆயிரம் டாலர்களை சேமித்து வைத் திருந்தான். அவன் இந்தியாவுக்குத் திரும்பி வரும் போது இந்தப் பணம் அவன் கையில் இருந்தது. கப்பல் பயணத்தின்போது இந்த பணத்தை யாரோ திருடி விட்டார்கள். இந்த இழப்பு அந்த ஏழை எழுத்தருக்கு மிகப் பெரிதாகப்பட்டது. இந்த இழப்பை நினைத்தபடியே துக்கத்திலாழ்ந்து பைத்தியமாகிவிட்டான். 1932ஆம் ஆண்டில் இமாலய மலையில் இவனை நான் பார்த்தேன்.

2 1928-இல் மற்றுமொரு இளைஞனை சென்னை மாநிலத்திலுள்ள கோயமுத்தூர் வனத் துறைக் கல்லூரியில் சந்தித்தேன். அவன் பல்கலைக் கழகத்தின் சிறந்த மாணவனாக இருந்தான். அவன் முதலாவது மாணவனாகத் தேர்ந்தெடுக்கப்பட் பட்டான். தங்கப்பதக்கமும் பெற்றான். இந்திய அரசின் உபகாரச்சம்பளத்தில் இங்கிலாந்தில் உயர் கல்வி பெறத் தேர்ந்தெடுக்கப்பட்டான். இந்தப் பையனின் பெற்றோர்கள் எல்லாவகை ஏற்பாடு களையும் செய்து பம்பாய்க்கு அழைத்து வந்தார்கள்.

அங்கிருந்து கப்பல் மூலமாக இங்கிலாந்துக்கு அனுப்ப வந்தனர். அந்தப் பையன் பம்பாய் வந்தடைந்ததும் மூளைக் கோளாறுக்கு ஆளானான். பெற்றோர்கள் அந்தப் பயணத்தையே ரத்து செய்து விட்டு பையனை திருப்பி வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். அந்தப் பையன் ஒரு பெண்ணைக் காதலித்து வந்தான். அவளைப் பிரிந்து போகிறோமே என்ற உணர்ச்சியே அந்தப் பையனின் மூளைக்கோளாறுக்குக் காரணம் என்பதை சில காலம் கழிந்த பிறகு பெற்றோர் புரிந்துகொண்டனர். அந்தப் பையன் தன் வளமான எதிர்கால வாழ்வையே இழந்து விட்டான். அந்தக் காதலியும் பையனை மணக்க மறுத்து விட்டாள்.

3. 1934க்கும் 1936க்குமிடைப்பட்ட காலத்தில் இந்தியாவிலுள்ள உ.பி.மாநிலத்தில் ஓர் ஏழை குமாஸ்தா இருந்தான். ஒரு லாட்டரியில் அவனுக்கு முதற் பரிசான 15000 டாலர்கள் விழுந்தது. ரொக்கத்திற்கான காசோலையும் கைக்கு வந்தது. அவனுக்கு இது பெருந்தொகையாகப்பட்டது. காசோலை கைக்கு வந்ததும் அவன் பெரிதாகச் சிரித்து மகிழ்ந்தான். அவன் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. கடைசியில் அவன் வாடகைக்குக் குடியிருந்த வீட்டின் மூன்றாவது மாடிக்கு ஏறிப்போனான் அங்கிருந்து திடீரென கீழே குதித்து இறந்து விட்டான்.

4. 1945ஆம் ஆண்டின் மத்தியில் இந்தியாவிலுள்ள காஷ்மீரத்தில் ஓர் இளஞ்சோடிகள் வசித்து

வந்தனர். மனைவி கணவனிடத்தில் பரிபூரண பக்தி பூண்டிருந்தாள். அவர்களுக்கு ஆண் குழந்தை பிறந்தது. கணவன் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டான். இது அந்தப் பெண்ணுக்கு பெருத்த அதிர்ச்சியைத் தந்தது. இந்தத் துக்கம் நரம்புப் பாதிப்பை உண்டாக்கும் வலிப்பு நோய்க்கு ஆட்படுத்திவிட்டது.

5. 1962இல் டெல்லியில் சம அந்தஸ்திலான இரண்டு குடும்பத்தினர் வியாபாரம் நடத்தி வந்தனர். ஓராண்டுக்குப் பின்னர் ஒரு குடும்பத்தினர் வியாபாரத்தில் அதிகமாக பணம் சம்பாதித்து ஒரு மோட்டார் கார் வாங்கி விட்டார்கள். அடுத்த குடும்பத்தினருக்கு இது கண்ணை உறுத்திற்று. அடுத்த குடும்பத்திலிருந்த பெண்ணிடம் இது பொறாமையை உண்டாக்கியது. இந்தப் பொறாமைக் குணம் உச்ச கட்டத்தை எட்டி அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது.

இந்த விதமான பல்வேறு உணர்ச்சி மேலிடும் சம்பவங்களினால் மனத்தில் நிகழ்வதைப் பார்ப்போம். உணர்ச்சி மனத்தில் அடிக்கடி தோன்றுகின்றன. அவ்வாறு தோன்றும் உணர்ச்சி உத்வேகம் பெறுகிறது. வேகமடைகிறது. ஆவேசமாக வளர்கிறது. உடனே அவர் மற்ற அனைத்தையும் மறந்து விடுகிறார். இந்த ஆழ்ந்த சிந்தனை குண்டலினி சக்தியைத் திடீரெனத் தாக்குகிறது. ஒவ்வொரு முறை ஏற்படும் பலமான உணர்ச்சி

என்பது மனம் குண்டலினி சக்தியின் மீது திடீரென தாக்குவது. உடனே இந்த 'சக்தி' கொதிப்படைகிறது. அது கட்டுக் கடங்காமல் செயல்பட்டு உடல் பூராவிலும் கொதிப்பு ஏற்படுகிறது. மேல் நோக்கிப் பாயும் நாடிக்கதிர்கள் இதயத்தையும் மூளையையும் கட்டுக்குமீறி வேலை செய்விக்கிறது. மூளையை அடையும் நாடிக்கதிர்கள் மூளையையும் கொதிப் படையச் செய்கிறது. இதனால் முதல் கட்டமாக ஒருவருக்குத் தூக்கம் வருவதில்லை. தூங்கினாலும் நிறையக் கனவுகள் தோன்றுகின்றன. இரண்டாவது கட்டமாகத் தூக்கமே வராத வேதனையை அடைகின்றனர். இதையே 'உறக்கமற்ற வியாதி' [Insomniu] என்கிறோம். இதே நிலை நீடிக்கும் போது மூளைக் கொதிப்பு மனத்தின் பகுத்தறியுந் தன்மைக்கான நுண்புலன்களை (புத்தியை) அழித்து விடுகிறது. அவன் புத்தி பேதலித்து விடுகிறான். இதையே பைத்தியம் என்கிறோம்.

உணர்ச்சியைக் கட்டுப்படுத்துவது, அடக்குவது ஆகிய இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தைப் பொது வில் பலர் புரிந்து கொள்வதில்லை. ஒருவர் ஒன்றை அனுபவிக்க வேண்டும் என்று தீவிரமாக ஆசைப் படுகிறார். ஆனால் அந்த ஆசையைப் பூர்த்தி செய்வதற்கு எந்தவிதமான சாத்தியமும் இல்லை. இந்த நிலையில் அந்த ஆசை அடக்கப்படுகிறது. மற்றொரு விதத்தில் ஒன்றை அனுபவிப்பதற்கான ஆசை ஒன்று தோன்றுகிறது. இந்த ஆசையை அவர் எளிதில் பூர்த்தி செய்து விடலாம். ஆனால்

அந்த ஆசை அவனுடைய வளர்ச்சிக்குக் குந்தகம் விளைவிப்பது என்று அவனுக்குந் தெரியும். தன் பகுத்தறிவினால் அத்தகைய கீழ்த்தரமான ஆசை கொள்வது கூடாது என்ற முடிவுக்கு வருகிறார். இங்கே இதை 'கட்டுப்பாடு' என்கிறோம். 'அடக்குவது' என்பது கெட்டது. ஆராய்ந்து முடிவுக்குப் பின்னர் ஓர் உணர்ச்சியைக் கட்டுப்படுத்துவதே நல்லது. 'விஞ்ஞான யுகம்' என்று அழைக்கப்படும் இந்த யுகத்தில் இத்தகைய கட்டுப்பாட்டு முறையே மிகமிக இன்றியமையாதது.

மனத்திற்கு தனக்கென்று தனியாக வண்ணமோ உருவமோ கிடையாது. ஆயினும் அது எண்ணத்தின் பொருளுக்கேற்ற நிறத்தையும், உருவத்தையுமே பெறுகிறது. நீங்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தையோ மனிதனையோ நினைக்கிறீர்கள். உடனே அந்த இடம் அல்லது மனிதனைப் பற்றிய உருவம் சூக்கும வடிவத்தில் உங்கள் மூளை மையத்தில் தோன்றுகிறது. அதன் பிறகே நீங்கள் நினைத்த இடம் அல்லது மனிதனைப் பற்றிய விவரம் உங்களுக்குப் புரிகிறது. பெயரும் அதற்கான சூக்கும வடிவமும் எப்போதும் இணைந்தே இருப்பவை. அது போலவே நீங்கள் நல்ல பண்புள்ள விஷயங்களை இடைவிடாமல் நினைத்த வண்ணம் இருப்பீர்களேயானால் எதிர்காலத்தில் நீங்களும் அதேபோல் உயர்ந்து விடுகிறீர்கள். மாறாக நீங்கள் கீழ்த்தரமான— உபயோகமற்ற விஷயங்களை நினைத்துக் கொண்டே இருப்பீர்களானால் முடிவில் நீங்கள்

அருவறுக்கத்தக்க முட்டாள்தனமான பல்வீனனாக ஆகிவிடுகிறீர்கள். ஆதலால் நீங்களேதான் உங்கள் நன்மையையும் தீமையையும் உருவாக்கும் படைப் பாளிகள்! நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதுவாகவே ஆகிறீர்கள்.

## குண்டலினி சக்தி

ஓர் உயிருள்ள மனித உடலின் ,தனி உயிர்ச்சார மான ஆன்மாவை பிரம்மத்திற்கு ஒப்பிடலாம். அதனுடைய சக்தியையே குண்டலினி சக்தி என் கிறோம்.

ஆன்மா, குண்டலினி சக்தி ஆகிய இரண்டினு டைய ஆரம்ப இடமே சிரசின் மையம் (தலை உச்சி). ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்ளும்போது வெளியேறும் சுக்கிலம் பெண்ணின் கருப்பைக்குள் புகுந்து 'சுரோணிதத்துடன்' கலந்து'கருத்தரித்தல்' ஏற்படுகிறது. சுக்கிலம் [Semen] சுரோணிதம் [Ovum] சேர்க்கையால் டெண்ணின் கருப்பைக்குள் உயிர் பிரவேசிக்கிறது. உயிர் இல்லாமல் கரு வளர முடியாது. ஒரு கோழி முட்டைக்குள் உள்ள உயிர் வெளியேறியதும் அதை 'அழுகல் முட்டை என் கிறோம். அதே போல் ஒரு பெண்ணினுடைய கருப்பைக்குள்ளிருந்து 'உயிர்' வெளியேறியதும் 'கருச்சிதைவு' ஏற்படுகிறது. இது எதைக் குறிக் கிறது எனின், 'உயிர்' அல்லது 'உயிர்ச்சாரம் இன்றிக் கருப்பைக்குள் குழந்தை வளர முடியாது.

நாம் ஒரு கடுகு விதையையோ அல்லது வேறேதேனும் ஒரு விதையையோ எடுத்துக் கொள் வோம். அந்தவிதையைஉடைத்துப்பார்ப்போமாயின் அதிலிருந்து வளரக்கூடிய செடி நம் கண்ணுக்குத் தெரியாது. இருப்பினும் வளரப்போகும் செடி அந்த விதைக்குள் 'காரண உடலுருவில்' இருக்கிறது! இதையே செடியின் காரணஉடல்என்கிறோம். அதே விதையை நிலத்தில் ஊன்றி அதற்கான எருவும் தண்ணீரும் இட்டோமானால் அந்த விதை பிளந்து முளை விடுகிறது. இந்த நிலையில் 'வளரப்போகும் செடி' தனது 'சூக்கும வடிவில்' இருக்கிறது. விதை மண்ணுக்கு வெளியே வந்து தளிர்விடும்போது அந்தச் செடியின் 'தூல வடிவத்தைக்' காண் கிறோம்.

இதே ரீதியில் ஒரு மனிதன் மூன்று வகையான உடல்களைப் பெற்றிருக்கிறான். அதாவது காரண உடல்' சூக்கும உடல், தூல உடல் ஆகும். முதன் முதல் சுக்கிலம் சுரோணிதத்துடன் கலக்கும்போது புதுப்பிறவி எடுக்கும் நபர் தனது காரண உடலுடன் கருப்பைக்குள் நுழைகிறார். கருப்பைக்குள் பிறக்கப்போகும் குழந்தையின் காரண உடலுடன் நுழையும் இந்த நிலையை விஞ்ஞானிகளால் பார்க்க முடியாது. ஆனால் இந்த நடை முறைதான் உண்மையானது.

கருப்பைக்குள் குழந்தையின் வளர்ச்சி நிகழும் போது குழந்தை வளரும் போக்கைக் கண்டு கொள் வதற்கான கருவிகள் உள்ளன. இவ்வளவுக்கும் இடையில் உயிர் அல்லது உயிர்ச்சாரமின்றி

அந்தக்கரு வளர முடியாது. உயிர்ச்சாரம் மிகவும் சூக்குமத் தன்மையுடையதால் மனிதனால் கண்டு பிடிக்கப்பட்ட எந்தக் கருவினாலும் கண்டு கொள்ள முடியாது. காரண உடல் தூல உடலாக உருவாகும் போது மட்டுமே விஞ்ஞானிகளின் கருவிகளால் கண்டு கொள்ள முடியும்.

ஒருவன் மூப்பினால் எய்தும் இயற்கையான சாவின் போதும், பலநாள் நோய்வாய்ப்பட்டிருந்து இறக்கும் போதும் அவனது உடலில் இயங்கும் குண்டலினி சக்தி, மனம் போன்றவை ஆன்ம இதய மையத்திற்கு வந்து ஆன்மாவில் தங்கி விடு கிறது. இறக்கும் மனிதனுக்கு தான் போய் புதிய பிறவி எடுக்கவேண்டிய இடம் நன்றாகத்தெரிகிறது.

இந்தச் சமயத்தில் மட்டும் இறக்கும் ஒவ்வொரு வனுக்கும் இந்த அபூர்வ ஆற்றல் வந்துவிடுகிறது. எனவே இறப்பு என்பது உடல் மாற்றம் மட்டுமே! தூல உடல் மட்டுமே இறந்து போகிறது. சூக்கும உடலும் காரண உடலும் இறப்பது இல்லை. ஆன்மா (உயிர்ச்சாரம்), குண்டலினி சக்தி, மனம் போன்றவையும் இறப்பதில்லை. குண்டலினி சக்தியும் மனமும் காரண உடல் நிலைக்கு திரும்பிப் போய் புதுப் பிறவி எடுக்கும் இடத்திற்கு ஆன்மாவைப் பின் தொடர்கிறது. இங்கே பலர் கீழ்வரும் கேள்விகளை எழுப்பக்கூடும்.

அதாவது பூர்வபிறவியின் அனுபவங்கள் ஆன்மாவுடன் இருக்கும்போது நமக்கு ஏன் அது நினைவிற்கு வருவதில்லை?

அதற்கான பதில், 'நீங்கள் பிறந்ததிலிருந்து இது நாள்வரை நடந்துள்ள பல்வேறு சம்பவங்களை சரியானபடி நினைவில் வைத்திருக்கிறீர்களா? இன்று ஒரு நாள் மட்டும் காலை முதல் இரவு வரை நடந்த எல்லாவற்றையும் தவறேதுமின்றி உங்களால் கூற முடியுமா? நீங்கள் பிறந்த நாள் தொடங்கி இதுவரை நடந்தவற்றையெல்லாம் உங்களால் நினைவில் வைத்துக்கொள்ள முடியவில்லையெனில், நீங்கள் பிறந்து வாழும் இந்த வாழ்க்கையை இல்லையெனக் கூறிவிட முடியுமா? உமது பூர்வ பிறவியையும் அனுபவங்களையும் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் அதை உங்கள் சித்தத்திலிருந்து (மனக்கோப்பிலிருந்து) மீண்டும் நினைவிற்குக் கொண்டு வர இயலும். இது எப்படி முடியும்?

உங்களுடைய மனத்தையும், சித்தத்தையும் சரியான முறையில் கட்டுப்படுத்த முடியும்போது இயலும்! சித்தத்தில் ஒவ்வொரு சம்பவமும், ஒவ்வொரு நிகழ்ச்சியும், ஒவ்வொரு ஆசை, எண்ணம் போன்றவையும் பதிவு செய்யப் பட்டுள்ளன. ஒரு சம்பவமோ, நிகழ்ச்சியோ, ஆசையோ, எண்ணமோ, செயலோ மீண்டும் நினைவுக்குக் கொண்டுவராமல் விடுபட்டுப் போயிருந்தால் அது சித்தத்தின் மறதி நிலைத் தளத்துக்குள் முழ்கிவிடுகிறது.

இவற்றை நீண்டகாலம் ஞாபகத்திற்குக் கொண்டு வராமலிருந்தால் அவை சித்தத்தின்

ஆழ் நிலைத்தளத்திற்குச் சென்று தங்கி விடுகிறது. ஆதலால் எதுவுமே விடுபட்டுப் போவதில்லை! இந்த எல்லாவகைப் பதிவுகளுமே அதற்கான காரண நிலைகளில் தங்கிவிடுகின்றன. திடமான மனக்கட்டுப்பாடுடைய ஒருவர் இவை அனைத்தையுமே காரண நிலைத்தளத்திலிருந்து நினைவு நிலைத்தளத்திற்குக் கொண்டு வந்து நினைவுக்குக் கொண்டுவர முடியும்!

மாறாக விபத்தின்போதும், தற்கொலையின் போதும் ஒருவர் தனது தூல உடலிலிருந்து திடீரெனத் துண்டிக்கப்பட்டுவிடுகிறார். அவ்வாறு இறந்த மனிதன் அடுத்த பிறவிக்கு எங்கே போய் பிறப்பது என்பது தெரியாமல் போய்விடுகிறது. ஆதலால் அடுத்த பிறவிக்காக அவர் காத்திருக்க வேண்டியுள்ளது. காத்திருக்கும் இடைக்காலத்தில் சூக்கும உடலில் தங்கியிருக்க நேருகிறது. அதாவது பேயாக வாழ்கிறார். இந்த சூக்கும உடலுக்கும் மனத்துக்கும் ஆற்றல்கள் உள்ளன. இத்தகைய தனிப்பட்ட ஆற்றல்களினால் ஒருவர் திடீரெனத் தோன்றி மறைய முடியும். இதையே பூதங்கள் என்கிறோம்.

நம் கண்களால் காணும் அளவில் அவை உருவங்களில் தோன்ற முடியும். இதைப்பற்றிய அனுபவங்கள் பலருக்கு ஏற்பட்டுள்ளன. விழிப்பு நிலையில் ஒவ்வொரு உயிரும் இந்த அகிலத்தை தூல வடிவம், மனம், புலன்களின் உதவியினால் அனுபவிக்க முடிகிறது. கனவு நிலையில் கனவு

மனிதன் கனவுலகை தனது சூக்கும உடல், மனம், சூக்கும புலன்களின் உதவியினால் அனுபவிக்க இயலுகிறது.

ஆழ்ந்த உறக்க நிலையில் மனம், சூக்கும உடல் ஆகியவை தமது காரண நிலைகளுக்கு திரும்பி ஆன்மாவில் கண நேரம் தங்கி விடுகிறது. குண்டலினி சக்தி மட்டும் சுறு சுறுப்புடன் இயங்கு கிறது. நாடியோட்டங்களுக்கான மின் இயக்கி சாதனத்தை இயக்கி இரவு பகல் இருபத்தி நான்கு மணி நேரமும் நாடி ஓட்டத்தை நடத்துகிறது.

குண்டலினி சக்தியின் இத்தகைய இயக்கத் தினால்தான் ஆழ்ந்த உறக்கத்திலுங்கூட மூச்சு இழைவதும், இதயத்துடிப்பு தொடர்வதும் நிகழ் கின்றன. நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டும் குண்டலினி சக்தியுங்கூட பிரம்மத்தில் போய்க் கலந்து விடுகிறது.

அதன் பிறகு பிரம்மத்தில் பிரம்மம் மட்டுமே அதாவது தன்னில்தானாகவே உள்ள உயிர்ச்சார மகா சமுத்திரம் மட்டுமே உணரப்படுகிறது. முன்னரே கூறியுள்ளது போல மீண்டும் பிறவியெடுக் கும் உயிரெனும் ஆன்மா முற்பிறவியின் நன்மை தீமைகளுக்கு ஏற்ப உடலுறவின்போது ஒரு பெண் ணின் கருப்பைக்குள் பிரவேசிக்கிறது. பூர்வ பிறவி களின் ஆசைகள், எண்ணங்கள், செயல்களின் விளைவுகளுக்கு ஏற்ப ஒருவருடைய அடுத்த பிறவி நிர்ணயிக்கப்படுகிறது. அதன்படி அவனோ

அல்லது அவளோ புதிய பிறவி எடுக்கும்போது பூர்வ பிறவியின் பலன்கள் தனது காரண நிலையில் தனிப் பட்ட ஆன்மாவைப் பின்தொடர்கிறது. இதையே ஒரு மனிதனுடைய காரண உடல் என்கிறோம். அவ்வாறு கருப்பைக்குள் நுழையும் தனி மனித உயிர் இனி பிறக்கப்போகும் குழந்தைக்கான உருவத்தைத் தன்னுள் வைத்துக் கொண்டிருக்கிறது. இல்லை யெனில் இணையும் பாரம்பரிய உயிரணுக்கள் [Chromosomes] எப்படி இணைந்து பிறக்கப் போகும் குழந்தையின் உருவத்தை உருவாக்க முடியும்? எவ்வளவு அழகாகவும், விஞ்ஞான பூர்வ மாகவும் எல்லாமே ஏற்பட்டுள்ளன, பார்த்தீர்களா?

சிவப்பு ரோஜாச் செடியில் சிகப்பு ரோஜாக்கள் மட்டுமே மலர முடியும். வெள்ளை ரோஜாச் செடி வெள்ளை ரோஜா மலர்களை மட்டுமே தருகின்றன. இதுபோலவே பல்வேறு மிருக சாதிகள், புழுபூச்சி கள், ஊர்வன சாதிகள் அததற்கான இனத்தையே உற்பத்தி செய்கின்றன. மனித சாதியை எடுத்துக் கொண்டோமானால் பல்வேறு விதமான மக்கள் இருப்பதைப் பார்க்கிறோம். வெண்ணிறமுடைய ஆண் பெண்ணிலிருந்து வெண்மை நிறக் குழந்தை தோன்றுகிறது. கறுப்புநிற ஆண்-பெண் மனிதர்கள் கறுப்புநிறக் குழந்தையையே பெற்றெடுக்கிறார்கள். ஒவ்வொன்றும் எவ்வளவு அதிசயத்துடன் நிகழ் கின்றன!— பாரம்பரிய உயிரணுக்கள் உள்ளன. ஆனால் குறிப்பிட்ட ஓர் உருவத்தில் ஒரு குழந் தையை உருவாக்குவது யார்? விஞ்ஞானிகளால்

இதற்குப் பதில் சொல்ல முடியாது— மேலும் அந்தக் குழந்தை பார்ப்பதற்கு தாய் அல்லது தந்தையின் உருவத்தையே ஒத்திருக்கிறது. இந்தப் பாரம்பரிய உயிரணுக்கள் எப்படி இந்த உருவ அமைப்பைப் பெறுகின்றன? முன்னரே கூறியுள்ளதுபோல வளரப்போகும் மரத்தின் காரண ரூபத்தை ஒரு விதை தன்னுள் அடக்கியுள்ளது. ஆனால் முளைத்து வரக்கூடிய மரத்தை அந்த விதைக்குள் தேடினோமானால் அது நமது கண்ணுக்குத் தெரியாது. ஆயினும் அந்த மரம் அங்கே இருப்பது என்னவோ உண்மை! அதேபோல பிறக்கப் போகும் குழந்தையின் உருவ அமைப்பும் தாயின் கருவில் காரண நிலையில் அமைந்திருக்கிறது. ஒருவருடைய எல்லாவித ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் எல்லாமே இறக்கும்போது அழிந்து போவதில்லை. மாறாக அவை இறக்கும் மனிதனுடைய தனி ஆன்மா காரண ரூபத்துடன் பின் தொடர்கின்றன. மீண்டும் அவை பிறவியெடுத்தவுடன் அதே ஆன்மாவைப் பின் தொடர்கின்றன.

ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்ளும்போது சுக்கிலம் [Semen] பெண்ணின் கருப்பைக்குள் நுழைந்து சுரோணிதத்துடன் [orery] சேருகிறது. இந்த சேர்க்கையின் கூடவே இனி பிறக்கப் போகும் குழந்தையின் வாழ்க்கை தொடங்குகிறது. அங்கே உயிர் இல்லாவிட்டால் கருவளர்ச்சி இல்லை. உயிர் கருப்பையில் நுழைவது என்றால் பிறக்கப் போகும் குழந்தையின் உருவ அமைப்பு தனது

காரண வடிவில் உயிரெனும் ஆன்மாவில் தங்கியுள்ளது என்று பொருள். இந்தக் காரண உடலை நுட்பமான எந்தக் கருவியைக் கொண்டும் பார்க்க முடியாது! கருப்பையிலுள்ள சுரோணிதத்துடன் கலக்கும் சுக்கிலம் முதலில் ஒரு 'குமிழ்' (Bubble) வடிவைப் பெறுகின்றன. முட்டையிடத் துவங்குவதற்கு சில நாட்கள் முன்பே கோழியின் வயிற்றைக் கிழித்துப் பார்ப்போமானால் அங்கே பல ரச குண்டுகள் போன்ற குமிழ்களைப் பார்க்க முடியும். முதலில் இடப்போகும் முட்டை உருவத்தில் சற்றுப் பெரியதாகவும் அதற்கு அடுத்தது சற்றுச் சிறியதாகவும்அதையும் அடுத்தது மேலும் சிறியதாகவும் உள்ளன. இந்த இணைக்குமிழ்களே நாளடைவில் வளர்ந்து பெரிதாகி முழு முட்டையின் வடிவத்தைப் பெறுகிறது. அது போலவே கருப்பையில் உள்ள குழந்தைஅல்லது வளரும் கரு முதலில் ஒரு கருக் குமிழாகத் தோன்றி பத்து மாத காலத்தில் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ச்சியுற்று குழந்தை உருவில் பிறக்கிறது.

அழுகிப் போன கோழி முட்டையை எடுத்து உடைத்துப் பார்ப்போமானால் தலையையும் காலையும் இணைக்கும் மென்மையான கோடொன்றை அழுகிய முட்டையின் தலையிலிருந்து அடிவரை பார்க்கலாம். இதிலிருந்து ஒன்றைப் புரிந்து கொள்ளலாம். அதாவது சீவான்மாவின் பரிணாமத் தோற்றம் சிரசின் மையமான பிரம்மரந்திரத்தில் (தலை உச்சியில்) ஆரம்ப

மாகிறது. இதுவே சீவான்மா, குண்டலினி சக்தி ஆகியவற்றின் நிலையானமையம். ஒரு பெண்ணின் கருப்பைக்குள் நுழைந்த உயிரான்மாவும், இந்த ஆன்மாவைப் பின் தொடரும் குண்டலினி சக்தியும் ஒன்றென இணைந்து இந்த மையத்தில் நிலைத்து விடுகிறது.

ஓர் உருவத்தில் ஐந்து பிரதான இந்திரியங்கள் சேர்ந்துள்ளன. அவை ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண் ஆகும். சீவன், குண்டலினி சக்தி ஆகிய இரண்டின் பிரிவுத் தோற்றமே சீவான்மாவினிடம் காணப்படும் இருவேறு நிலைகளுக்குக் காரணமாகும்.

கருப்பைக்குள் குழந்தையின் உடல் பரிணாம அமைப்பை ஏற்படுத்தும்போது குழந்தையின் மூளை மையத்தில் குழந்தைகளுக்கான மனத்தை குண்டலினி சக்தி முதன் முதலில் தோற்றுவிக்கிறது. அல்லது குண்டலினி சக்தியே முதன் முதலில் குழந்தையின் மனமாகத் தோன்றுகிறது. இந்த மனம் மூளை மையத்தில் தங்கி வேலை செய்கிறது. குண்டலினி சக்தி ஆறு வகை மையங்களில் இயங்கி வேலை செய்கிறது. அடித்தளத்தில் உள்ள மையமே மூலாதாரச் சக்கரம், குண்டலினி சக்தி அடித்தளச் சக்கரத்தின் அமைப்பை உருவாக்கிய பிறகு அங்கேயே மின் இயக்கி சாதன உருவத்தில் தங்கி விடுகிறது. அதுவே நாடியோட்டங்களை உற்பத்தி செய்யும் பணியைச் செய்கிறது. அதை

நாடியோட்டங்களுக்கான மின் உற்பத்தி சாதனம் (Dynamo) என்றும் அழைக்கலாம்.

குண்டலினி சக்தி இருபத்தி நான்கு மணி நேரமும் இடைவிடாது வேலை செய்து நாடி யோட்டத்துக்கான மின்சக்தியை உற்பத்தி செய் கிறது, அந்தச் சக்தியை உடல்முழுவதற்கும் ஓய்வு ஒழிச்சலின்றி பரவச்செய்து கொண்டே இருக்கிறது. சீவான்மாவின் பரிணாமத் தோற்றம் முடிந்தபிறகு 'ஆன்மா' ஆன்மீக இதய மையத்திற்கு இறங்கி வருகிறது. இந்த ஆன்மீக இதய மையம் வலப்புற மார்பில் இருக்கிறது.

ஒரு தனி மனிதனின் உயிரின் உறைவிடம் இதுவே. சீவான்மாவும், குண்டலினி சக்தியும் பிரிந்துள்ளது போல் தோன்றினும் அவற்றின் நிலையான மையம் பிரம்மரந்திரம் ஆகும். குண்டலினி சக்தி மேலேறி நிர்விகல்ப சமாதி நிலையில் பிரம்மரந்திரத்தில் பிரவேசிக்கும்போது, ஆன்மாவும், குண்டலினி சக்தியும் மீண்டும் இணை கிறது. அவற்றின் பிரிந்த நிலையினால் ஏற்பட்ட பிரிவுத் தோற்றம் மறைந்து விடுகிறது. அதன் பின்னர் நிலைத்து நிற்பது தன்னில் தானாகவுள்ள உயிர்ச்சார உணர்வெனும் மகாசமுத்திரம் மட்டுமே. பின்னர் நிலைத்து நிற்பது ஒன்றே ஒன்று தான் இரண்டல்ல! ஆன்மா, குண்டலினி சக்தி என்ற வகையில் ஏற்பட்ட பிரிவுத் தோற்றம் மறைந்து விடு கிறது.

ஆன்மா, குண்டலினி சக்தி ஆகிய இரண்டின் பிரிவுத்தோற்றத்தின் விளக்கத்தைக் காண்போம் :—சூரியனும் அதனுடைய ஒளியும் அல்லது ஒளிக்கதிர்களும் ஒன்றை விட்டொன்று அகலாதவை. ஆயினும் சூரியனைவிட்டு வெகு தூரம் செல்லும் ஒளிக்கதிர்கள் தோற்றத்தில் தனித்து இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆனால் உண்மை அதுவல்ல. சூரியனின்றி ஒளிக்கதிர்கள் இல்லை. அதே போல் ஆன்மா இன்றி குண்டலினி சக்தியும் இயங்காது.

மனம் ஆன்மாவின் அறிவுக் கருவியாக இருக்கிறது. ஆன்மா உலகத்தைப் பற்றிய விவரத்தை மனத்தின் மூலம் தெரிந்து கொள்கிறது. மனம் முழுக்க முழுக்க குண்டலினி சக்தியின் பிடிக்குள் தான் அடங்கியுள்ளது. குண்டலினி சக்தி ஆறுவகை மையங்களிலும் (சக்கரங்களிலும்) தங்கி வேலை செய்கிறது, பல்வேறு சக்கரங்களிலும் (மையங்களிலும்) பல்வேறு ஆற்றல்கள் வேலை செய்கின்றன. இந்தச் சக்கரங்களில் ஏதாவதொன்றில் குண்டலினி சக்தி வந்து தங்கும்போது இந்த ஆற்றல்களை இயக்குகிறது. இந்த ஆற்றல்களே மனத்தை ஆட்டிப்படைக்கிறது.

குண்டலினி சக்தி அடித்தள மையத்தில் (மூலாதாரத்தில்) நின்று வேலை செய்யும்போது ஒருவருடைய வாழ்க்கையில் மூவகைக் குணங்கள் ஆக்கிரமிக்கின்றன. அதாவது உணவு, உறக்கம், காமம் ஆகும். இந்த உணவிலும், உறக்கத்திலும், காமத்திலும் அவர்களுக்குப் பிரிக்க முடியாத ஈடுபாடு

ஏற்படுகிறது. உலகம் பூராவுமே இந்த மூன்றையும் அனுபவிப்பதில் திளைத்துப் போயிருக்கிறது. இந்த நிலை ஒரு போராட்ட நிலை.

குண்டலினி சக்தியை மேல்நிலை மையங்களுக்கு (சக்கரங்களுக்கு) எடுத்துச் செல்ல வேண்டுமாயின் மூவகைத் தூய்மை நிலை இன்றியமையாதன. அதாவது உடல் தூய்மை, நாடிகளின் (நரம்புகளின்) தூய்மை, மனத்தூய்மை ஆகும்.

அசுத்த உணவு, அசுத்தக் காற்று, அசுத்தத் தண்ணீர், அசுத்தமான இருப்பிடம், வியாதி ஆகியவை உடல் தூய்மையின்மைக்குக் காரணங்களாகும். உடல் நோயுற்றால் நாடிகளும் நோயினால் பாதிப்படைந்து அசுத்தமாகிறது. உடல் நோயினால் மூளையும் நோய்வாய்ப்படுகிறது. இந்த நோய்வாய்ப்பட்ட மூளையை மனத்தினால் இயக்க முடிவதில்லை. மனத்தின் இந்த மூவகைத் தூய்மை நிலையையும் தியானம், மந்திர ஜபம், யோக ஆசனங்கள், பிராணாயாமப் பயிற்சிகள், ஏற்ற உணவு, சுத்தமான சுற்றுச்சூழல் போன்றவற்றினால் பெறலாம். இதற்கும் மேல் ஒரு முக்கியமான விஷயம் பிரம்மச்சரியம் (கற்பு நெறி) இன்றியமையாதது. ஆனால் இன்றைய நாகரிக உலகம் இதை அறவே மறந்து விட்டது. பலர் விஷயத்தில் காமம் ஓர் இயற்கை நியதியாகப் பேசப்படுகிறது.

பிரம்மச்சரியத்தால் அனேகவித வியாதிகள் உண்டாவதாகப் பலர் எண்ணுகிறார்கள். ஆனால் உண்மை அதுவல்ல!

கீழ் நிலைச் சக்கரங்கள் நான்கு வரையிலும் குண்டலினி தங்கியுள்ளவரைக்கும் ஒருவர் உடல் இன்பத்தில் அதிக ஆர்வம் கொள்வார். சக்தியானது ஐந்தாவது சக்கரத்தை (மையத்தை) அடையும் போது காம இச்சை அற்றுப் போகிறது. அது போன்ற ஒருவர் காமக்களியாட்டத்தில் ஈடுபட மாட்டார். ஏனெனில் ஓர் ஆண் அல்லது பெண்ணிடம் குண்டலினி சக்தி விந்துவை உண் டாக்குகிறது.

ஒவ்வொரு முறை விந்து வெளியேற்றத்தின் போதும் நாடி சக்தியானது உடல் பூராவிலிருந்தும் பிழிந்தெடுக்கப்படுகிறது. விந்து மூளை மையத்தில் துவங்கிப் பிறப்பு உறுப்புகளின் மூலம் வெளியேறு கிறது. காமக்களியாட்டம் அல்லது விந்துநஷ்டமே மனத்தில் அழிக்க முடியாத கறையை ஏற்படுத்து கிறது. நாடிகளில் சீர்குலைவோ அல்லது பழுதோ ஏற்பட்டால் அவற்றைச் சரி செய்வதற்கு எந்தவித மருந்தும் கிடையாது. தொடர்ந்த விந்து இழப் பினால் நாடிகளின் தூய்மை கெடுகிறது. அதனால் நாடிகள் பலவீனமடைந்து மெதுவாக வேலை செய்கிறது.

மேலும் மின் இயக்கி சாதனமாகவுள்ள குண்ட லினி சக்தியும் பலவீனமடைகிறது. அதனால் மேற்படி சாதனத்திலிருந்து சக்தியின் இழப்பு நேரிடு கிறது. இவ்வாறு பழுதடைந்த குண்டலினி சக்தி யினால் உடல் முழுவதற்கும் மூளைக்கும் தேவைப்

பட்ட நாடி சக்தியை உற்பத்தி செய்ய முடியாமற் போகிறது. அதன் காரணமாக நரம்புத் தளர்ச்சி உண்டாகிறது. பலவீனமும் அயர்வும் நேரிடுகிறது. ஆதலின் பிரம்மச்சரியம் (கற்பு நெறி) மிகமிக இன்றி யமையாதது. பிரம்மச்சரியமின்றேல் குண்டலினி சக்தி மேல்நிலைச் சக்கரங்களுக்கு முழுமையாக எழுப்பிச் செல்ல முடியாது. குண்டலினி சக்தியை சிரசின் மையத்திற்குக் கொண்டு செல்லாமல் ஒருவர் நிர்விகல்ப சமாதி நிலையை எய்த முடியாது. ஆன்ம உணர்வை அல்லது கடவுள் தரிசனத்தைப் பெற முடியாது.

நிர்விகல்ப சமாதி நிலையை அடையாமல் உயரிய மெய்ஞ்ஞானப் பேற்றை எய்த முடியாது. வாழ்க்கையின் மேலான குறிக்கோளை எட்ட முடியாது. நிர்விகல்ப சமாதி நிலையில் சக்தி ஆன்மாவில் திரும்பிப் போய்ச் சேருகிறது. அவ்வாறு இணைந்த ஆன்மாவும், சக்தியும் மீண்டும் போய் நிலையான மையத்தில் இணைகிறது. இந்த சீவான்மாவை (Microcosm) பரிணமிக்கும்போது ஆன்மாவும் சக்தியும் இரண்டாகப் பிரிந்து கொள் கிறது. இந்தப் பிரிவுத் தோற்றமே ஒற்றுமையில் வேற்றுமையைத் தோற்றுவிப்பதற்குக் காரணமா கிறது.

இந்த ஒற்றுமைத் தோற்றத்திற்குப் பிறகு தனிப்பட்ட ஒருவர் வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்கிறார். அதன்பின்னர் அவர் பேருண்மை நிலையைப் பெறுகிறார்.

குண்டலினி சக்தியையே 'சித்தம்' என்கிறோம். இந்தச் 'சக்தி' தன்னிடமுள்ள எல்லையற்ற ஆற்ற லால் நினைவு சக்தியை தன்னுள் அடக்கியுள்ளது. மூளை மையத்திலுள்ள மனத்திற்குத் தேவைப்பட்ட போது இந்த நினைவு சக்தியே அதற்கான நினைவுக் குறிப்புகளைத் தடையில்லாமல் தருகிறது. இது மிக அதிசயமானது. ஒருவர் தமது வாழ்நாளில் பல இடங்களையும் பல பொருள்களையும் பார்த்திருப் பார். அவர் பல்வகைப்பட்ட நல்ல, கெட்ட வாசனை களை முகர்ந்திருப்பார். பல்வேறு இனிய குரூர ஓசைகளைக் கேட்டிருப்பார். தன் வாழ்நாளில் பல்வேறு வித சுவைகளைச் சுவைத்திருப்பார். மென்மையான, கடினமான, வழவழப்பான பொருள் களைத் தொட்டிருப்பார். நல்லதும் கெட்டதுமான பலதரப்பட்ட ஆசைகள் எண்ணங்கள் அவர் மனத் தில் தோன்றியிருக்கும். ஆயிரக்கணக்கான புத்தகங் களைப் படித்திருக்கக் கூடும். இந்த எல்லா அனுப வங்களுமே அதனதன் காரண நிலைகளில் ஒருவர் சித்தத்திலுள்ள (மனக்கோப்பிலுள்ள) புறாக் கூண்டு களில் அலுங்காமல் நலுங்காமல் அடுக்கி வைக்கப் பட்டுள்ளன. என்னே அதிசயம்!

எண்ணிலடங்காத இந்தப் பதிவுகளை குண்ட லினி சக்தி எப்படிக் காத்து வைத்திருந்து தேவைப் பட்ட போதெல்லாம் வெளிப்படுத்துகின்றன? ஒரு கணம் சிந்தியுங்கள்' இது ஒரு அற்புதம் என்பதை மறுக்க முடியுமா?

உதாரணத்திற்குத் தந்தை, தாய் போன்ற சொற்களை எடுத்துக் கொள்ளுங்கள். 'தந்தை' அல்லது 'தாய்' என்கிற வார்த்தையைக் கேட்டதுமே, உங்களுக்குத் தாய் அல்லது தந்தையைப் பற்றிய பொதுவான விளக்கம் கிடைத்து விடுகிறது. மேலும் தந்தை அல்லது தாய் குழந்தைகளிடம் எப்படிப் பழகுகிறார் என்பனவற்றையெல்லாம் உணர முடியும். உங்களுடைய தந்தை அல்லது தாய் என்கிற வார்த்தைகளைக் கேட்கிறீர்கள். இப்போது உங்கள் தந்தை அல்லது தாயைப் பற்றிக் குறிப்பிட்ட கருத்தை விளங்கிக் கொள்கிறீர்கள். இதே போல் பொதுவில் ஒருவர் வாழ்நாளில் அனுபவித்த குறிப்பிட்ட முறையிலான அனேக பொருட்களைப் பற்றிய அறிவை குண்டலினி சக்தி தன்னுள் பாதுகாத்து வைத்திருக்கிறது.

குண்டலினி சக்தி பல்வேறு மையங்களில் நின்று வேலை செய்யும்போது மனத்தை அதனதன் போக்குக்கு ஏற்ப ஆட்டிப் படைக்கிறது.

குண்டலினி சக்தி ஐந்தாவது சக்கரத்தில் (விசுத்த சக்கரத்தில்) வேலை செய்யும்போது இந்த அகிலத்தைப் பற்றிய கருத்து அடியோடு மாறி விடுகிறது. இந்த சக்தி ஆறாவது சக்கரத்தில் தங்கி வேலை செய்யும்போது ஒருவர் வேற்றுமையில் ஒற்றுமையைக் காண முயல்கிறார். ஆயினும் அவரிடம் அறியாமை முழு அளவில் மறைந்தபாடில்லை. குண்டலினி சக்தி ஆன்மாவில் ஒன்றியவுடன் தொடர்ந்து அந்தத் தனிப்பட்ட ஆன்மா பிரம்

மத்தில் ஐக்கியமானவுடன் எல்லாப் பெயர்களும் உருவங்களும் மறைந்து விடுகின்றன.

ஓர் எண்ணம் மனத்தில் உதிப்பதற்கு பதினாறு காரணங்கள் இருக்கின்றன. மனத்தில் ஓர் எண்ணம் எப்படி உதிக்கிறது என்பதற்கான காரணங்களில் ஒன்றுதான் தானே தோன்றும் எண்ண அலைகளாகும். எந்த ஒரு நல்லதையோ அல்லது கெட்ட எண்ணத்தையோ நினைக்காமலேயே மேலும் அவர் அதை விரும்பாமலேயே ஒரு ஆசை அல்லது எண்ணம் திடீரென உதிக்கிறது. இது சுயமாகத் தோன்றும் எண்ண அலையின் வகையைச்சார்ந்தது. உடலில் அதிக வெப்பத்தை உண்டாக்கக் கூடிய உணவையோ பானத்தையோ உட்கொண்டால் இந்தச் சுயமாக எழும் எண்ணங்கள் அதிக அளவில் தோன்றுகின்றன. தூங்கப் போவதற்கு முன்னர் சூடான காபி அல்லது டீ பானங்களைப் பருகினால் நமக்கு தூக்கமே வருவதில்லை. தீவிரமான உணர்ச்சி வயப்படும்போதுகூட நமக்கு உறக்கம் வருவதில்லை. இத்தகைய சமயங்களில் உண்மையாக நிகழ்வது என்ன? வெப்பத்தை உண்டாக்கும் உணவையோ பானத்தையோ உட்கொள்ளும்போது இந்த வெப்பம் 'சக்தி'யை அளவுக்கு மீறி இயக்குகிறது. தீவிர உணர்ச்சி நம்மை ஆட்கொள்ளும் போதுகூட இந்தச் 'சக்தி' சூடேறி அசாதாரண வேகத்தில் இயங்குகிறது. நாடி ஓட்டக் கதிர்களின் மின் இயக்கி சாதனம் ('சக்தி') அபாரமாக இயங்கும்போது அது அதீத நாடி சக்தியை உற்பத்தி

செய்கிறது. வேகமடைந்த நாடிக்கதிர்கள் இருதயத்தை நோக்கிச் செல்லும்போது இருதயமும் வேகமாகத் துடிக்கிறது. மூளைக்குப் போய்ச் சேரும் வேகமடைந்த நாடிக்கதிர்களால் மூளையும் மனமும் தீவிரமடைகிறது. அதனால் ஒருவர் உறக்கமின்மை யால் பாதிக்கப்படுகிறார்.

**அலைபாயும் மனப்போக்கு, ஆவேச நிலை, கனவு நிலை.**

அலைபாயும் மனப்போக்கும், ஆவேச மன நிலையும், கனவு நிலையும் சுயமாகத் தோன்றும் எண்ண அலைகளால் உண்டாகின்றன. பெயரும் அதற்கான சூக்கும உருவமும் எப்போதும் ஒன்றோ டொன்று இணைந்து இருப்பன. விழிப்பு நிலையில் ஓர் எண்ணம் மனத்தில் உதிக்கிறது. எண்ணத்தில் தோன்றிய பொருளின் சூக்கும வடிவத்தை மன மானது மூளை மையத்தில் படம் பிடித்துக் காட்டு கிறது. மனத்தில் எண்ணத்தின் பொருள் உணரப் படுகிறது. இவை எல்லாமே வெகுவேகமாக நடந்து முடிந்து விடுகிறது. இதன் விவரம் அனைத்தையும் காண்பதென்பது பகீரத முயற்சியாக முடியும். குண்டலினி சக்தியே சித்தம். மூளை மையத்தில் தோன்றும் சித்தத்திற்கும் மனத்திற்கும் இடையி லான எண்ணத்தின் செயல் உடலின் முன்புறமாக உள்ள சரஸ்வதி நாடி மூலமாகச் செயல்படுகிறது. குண்டலினி சக்தி சூடேறும்போது அது உடல் பூரா வுக்கும் வேகமாக நாடிக்கதிர்களை அனுப்புகிறது,

சரஸ்வதி நாடி மூலம் அடிக்கடி ஓடும் நாடிக்கதிர்கள் மிக நுட்பமான எண்ணஅலைகளை இந்தச் சரஸ்வதி நாடி மூலமே சித்தத்திலிருந்து மூளைக்கு எடுத்துச் செல்லுகிறது, இது போன்ற சுயமான எண்ண அலைகள் மூளையை அடையும்போது மனமானது இந்த எண்ண அலைகளைப் பற்றிக் கொள்கிறது. அதைப் பெரிய படமாக்கி அதன் காட்சியை மனத் திரையில் காட்டுகிறது. ஒரே நாளில் இது போன்ற எண்ணிலடங்காத அர்த்தமற்ற எண்ணங்கள் மனத்தில் எழுகின்றன.

கணக்கற்ற சம்பவங்கள், நிகழ்ச்சிகள், எண் ணங்கள் கட்டுக்கோப்புடனோ, கட்டுக் குலைந்தோ சித்தத்தில் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. உமது விடுமுறையை அனுபவிக்கக் கடற்கரையில் உட் கார்ந்திருக்கிறீர்கள் என வைத்துக் கொள்வோம். திடீரென உன் தலைக்குமேல் ஒரு விமானம் பறக் கிறது. அடுத்து கிளுவைகள் கூட்டமாகப் பறப் பதைப் பார்க்கிறாய். உடனே அடுத்தடுத்து ஒரு நீராவிப் படகு, ஒரு கப்பல் ஒரு மீன் பிடிப்பவன் போன்றவற்றைக் காண்கிறாய். இவை ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாதவை. இந்த விஷயத் தில் இங்கே பார்த்த பொருள்களெல்லாம் எண்ணங் கள் வடிவில் சித்தத்திற்குள் போய்ச் சேர்ந்து சிதறிய நிலையில் தங்கி விடுகின்றன.

இப்பொழுது ஒரு குறிப்பிட்ட பொருளைப் பற்றிய உரையை எழுதவோ அல்லது ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையை வரையவோ இருக்கிறாய்.

இதற்கான எல்லா உண்மைகளையும், விவரங்களை யும் ஒழுங்கான முறையில் வரிசையாகச் சேகரித்துக் கொள்கிறாய். இவற்றின் பதிவுகள் சித்தத் திற்குள் போய்த் தங்கி விடுகின்றன. விழிப்பு நிலை யில் சில நேரங்களில் குண்டலினி சக்தி சூடாகும் போது அது இந்த எண்ண அலைகளை சரஸ்வதி நாடி மூலமாக சுயமாகவே அனுப்புகிறது. சுயமாக எழும் இந்த நினைவு அலைகள் வரிசைக் கிரமமாக அடுக்கியுள்ள கருத்துகளை வெளியே கொண்டுவரும் போது அதையே 'ஆவேசப்பேச்சு', (Inspiration) என்கிறோம். ஆவேசமுள்ளவன் சிந்திப்பதில்லை. ஆனால் அவர் சுயமாகப் பேசுவதும் எழுதுவதும் ஆழ்ந்த அர்த்தமுள்ளவையாக அமைகின்றன. இதே சுயமாக எழும் நினைவு அலைகள் ஆழ்ந்த உறக்கத்தின்போது நிகழுமானால் சூக்கும பொருள் களுக்கான அலைகளின் நிழற்படம் சிறு மூளையில் விழுந்து கனவாக உருப்பெறுகிறது. அவைகூட வரிசைக் கிரமமாகவோ அல்லது சீர்குலைந்தோ இருக்கக்கூடும். ஆழ்ந்த உறக்கத்தின் போதுகூட குண்டலினி சக்தி நாடிக்கதிர்களை உற்பத்தி செய் கின்றன.

உடலின் தேவைக்குப் போக மீதமுள்ள நாடிக் கதிர்கள் குதத்தின் மூலமாகவும், பிறப்பு உறுப்பு களின் மூலமாகவும் வெளியேறி விடுகின்றன. ஆழ்ந்த உறக்கத்தில் மனம் மூளையில் செயல்படு வதில்லை. அப்போது அது ஆன்மாவில் ஒன்றி இருக்கிறது. அதனாலேயே ஆழ்ந்த தூக்கத்தின்

போது ஒருவனுக்கு அகில உலகமே மறைந்து போகிறது. ஆவேச நிலை, முக்தி நிலை ஆகிய இரண்டுக்குமிடையே மிகுந்த வித்தியாசமிருக்கிறது. குண்டலினி சக்தியின் பகுதி எழுச்சியினால் ஒருவருக்கு 'ஆவேச சக்தி' வருகிறது. குண்டலினி சக்தி முழு அளவில் சிரசிற்கு எழும்பி நிர்விகல்ப சமாதி நிலையை எய்தும்போதுதான் 'முக்தி நிலை' கிட்டுகிறது.

முடிவுரை :

வாழ்க்கை இரு வேறு நிலைகளைக் கொண்டது. அதாவது மனத்தைச் சார்ந்த நிலை, உடலைச் சார்ந்த நிலை ஆகும். இவ்விரண்டும் ஒன்றை விட்டு ஒன்று ஏற்க முடியாதன. ஒருவரின் உண்மையான வளர்ச்சிக்கும் மகிழ்ச்சிக்கும் இவ்விரண்டையுமே ஒன்றோடொன்றை இணைத்து வளர்க்கப்பட வேண்டும். இன்றேல் ஒழுங்கு தவறி வாழ்க்கை துன்ப மயமாகிவிடும்.

விஞ்ஞானம் இருவகைப் பட்டது: சூக்குமம், தூலம். நாம் அறிந்துள்ள விஞ்ஞானத்தைப் பொறுத்த வரையில் தூலப் பொருள்களுக்கே மிக முக்கியத்துவம் கொடுத்துள்ளது. விஞ்ஞானிகளுக்கு சூக்குமப் பொருட்களைப் பற்றிய அறிவாற்றல் கிடையாது. தூல அகிலத்தைக் கட்டிக் காக்கும் சூக்கும நெறிமுறைகளைப் பற்றியும் அவர்களுக்குத் தெரியாது. ஆகவே வளர்ச்சி ஒரு சார்புடையதாகவே இருப்பதால் அபாயகரமான அணு ஆயுதங்

களைக் கண்டுபிடித்து அழிவுக்கு அடிகோலி விட்டார்கள்.

சூக்கும விஞ்ஞானம் (மெய்ஞ்ஞானம்) மனத்தி லிருந்து தோன்றுகிறது. பிரம்மத்தில் முடிகிறது. சீவான்மாவைச் சார்ந்த மூளை போன்றவற்றில் துவங்குவது தூல விஞ்ஞானம், அழிவுக்கான ஆயுதங்களைக் கண்டுபிடிப்பதில் முடிவே இல்லாமற் போய்க் கொண்டிருக்கிறது. தூல விஞ்ஞானத்தில் ஒரு மனிதன் தன் ஆராய்ச்சிகளுக்குத் தேவையான கணக்கற்ற கருவிகளைக் கண்டு பிடித்துள்ளான். ஆனால் மனமாகிய விஞ்ஞானத்திற்கு உதவக் கூடிய எந்தக் கருவியும் கண்டுபிடிக்கப் படவில்லை. எதிர்காலத்திலும் இதற்கான கருவிகளைக் கண்டு பிடிப்பதற்கான வாய்ப்புகளும் கிடையாது. ஏனெனில் மனம், குண்டலினி சக்தி, பிரம்மம் போன்றவை மிகமிக நுட்பமானவை. அவற்றை சோதனைக் குழாய்களில் சோதித்துப் பார்க்கவும் முடியவே முடியாது. உயிர்ச்சாரம் ஏற்கெனவே சோதனைக் குழாய்களில் நிரம்பி இருக்கிறது.

பிரம்மம் அகிலமெல்லாம் பரவியிருக்கும் உயிர்ச் சார உணர்வு ஆனதால் உயிர்ச்சாரம் ஏற்கெனவே சோதனைக் குழாய்களிலும் நிரம்பி இருக்கிறது. இருப்பினும் அது மிக மிக மென்மை நிலையில் உள்ளதால் மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட எந்தக் கருவியினாலும் அதைக் கண்டுபிடிக்க முடியாது. இந்த உண்மையைக் கண்டுபிடிக்க ஆசைப்படு வர்கள் மனத்தைத் தூய்மையாகவும், நுட்பமான

தாகவும், ஒருமுகப்படுத்தியும் வைத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய நிலையில் மூளை மையம் அவருடைய ஆராய்ச்சிக் கூடமாக மாறி விடுகிறது. ஒருமுகப்பட்ட அவரது மனமே மிகவும் சூக்குமக்கருவியாகச் செயல்படுகிறது. இன்றேல் 'பேருண்மைப் பொருளை' அறிவதென்பது. முடியாது தூல விஞ்ஞானம் இருப்பதிலேயே இருந்து உழல வேண்டியதுதான்.

ஒருவருக்கு ஏராளமான செல்வம் இருக்கலாம். ஆனால் அவர் தன் மனத்தையும், புலன்களையும் கட்டுப்படுத்தா விட்டால், ஆரோக்கியத்தோடு இருக்கா விட்டால் அவர் துன்பத்தில்தான் உழல்வார். மாறாக ஒருவர் மனத்தையும், புலன்களையும் கட்டுப்படுத்தினால் ஆரோக்கியத்துடன் இருப்பார். அப்படிப்பட்டவன் எந்த நிலையிலும் மகிழ்ச்சியில் திளைத்து வாழ்வார். மனக்கட்டுப்பாடு சூக்கும விஞ்ஞானத்தின் பாற்பட்டது. அது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டதல்ல. ஆனால் அறியாமை காரணமாக மனிதன் அதை புறக்கணித்து விட்டான். தற்போதுள்ள நிலையின்படி உலக நாடுகளின் கல்விமுறை சீர்குலைந்துள்ளது. நன்னடத்தையை வளர்ப்பதற்கு அதில் இடமேயில்லை. மனக்கட்டுப்பாட்டைப் போதிப்பதற்கான வழியுமில்லை. இதே நிலை நீடிக்குமானால் எதிர்காலத்தில் பேரபாயம் காத்திருக்கிறது. பொறுப்பில் உள்ளவர்கள் உலகத்தை மரணத்திலிருந்து, அழிவிலிருந்து, காப்பதற்கு முன் வர வேண்டும்.

பின் குறிப்பு : மனம் போன்றவை பற்றி விளக்கமாக அறிய வேண்டுமானால் ஆசிரியரின் கீழ்க்கண்ட புத்தகங்களைப் படிக்க வேண்டுகிறோம்.

1. மனிதனின் ஆதாரசக்தி அல்லது குண்டலினி சக்தி (The primal Power in man or the Kundalini shakti)
2. மனிதன், மனம், மனச் செய்கைகளின் இரகசியங்கள் (The mysteries of man, mind & mind-Functions)
3. தத்துவம் முடியுமிடம் (The End of philosophy)
4. மனக்கட்டுப்பாட்டின் இரகசியங்கள் (The secrets of mind control)



# ஆசிரியரும் அவர் பணியும்

தென் இந்தியாவில் 'கூர்க்' மலைப் பிரதேசத்தில் 1902ஆம் ஆண்டு ஏப்ரல் 12–இல் நாராயணானந்தா பிறந்தார். அவர் பெற்றோர் குழந்தைப் பேற்றுக்காகப் பல ஆண்டுகள் இறைவனை வேண்டி இறைஞ்சி நின்றனர். ஆகவேதான் தங்களுக்குப் பிறந்த பொலிவு மிக்க, அழகுள்ள மகனிடம் ஆழ்ந்த அன்பு காட்டி வளர்த்தனர். அந்த மகனும் அந்தக் கிராமத்தினரின் மனத்தை மிகவும் கவர்ந்திருந்தான்.

அவனும் தன் பெற்றோரிடம் மிகவும் பாசம் கொண்டிருந்தான். ஆயினும் ஐந்தாவது வயதில் அவனைப் பள்ளிக்கு அனுப்பியதும் அவன் கொஞ்சம்கூடத் தயக்கம் காட்டாமல், வெகு சகஜமாக வீட்டை வீட்டுச் சென்றான்.

சிறுவயதில் அவன் படிப்பில் சிறந்து, சுறுசுறுப்பு மிக்க மாணவனாகவும் விளங்கினான். பள்ளி விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளும் தேர்வைப் பெற்று, பல பரிசுகளைப் பள்ளிக்குப் பெற்றுத் தந்தான்.

இதுபோன்ற பல்வேறு செயல்களுக்கிடையில் காலை மாலை இரு வேளைகளிலும் தீவிர தியானத்தில் சுமார் அரை மணி நேரம் அமர்ந்து விடுவான். எந்த வெளிப்புறத் தூண்டுதலுமில்லா மல் உள்ளுக்குள்ளிருந்து கிளர்ந்தெழுந்த ஒருவகை உந்துதலினாலேயே இந்தப் பயிற்சியைத் தொடர்ந்து மேற்கொண்டான்.

இத்தகைய முறையான நியதியுடன் கூடிய தியானம் அந்தச் சிறுவனை ஆன்மிக வாழ்க்கையில் நிலை நிறுத்தி எதிர்காலத்தில் நிர்விகல்ப சமாதி நிலையை எய்துவதற்கான அரிய வாய்ப்புக்கு அடி கோலியது.

கல்வியை முடித்ததும் அந்த இளைஞன் திருமணம் செய்து கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக உலகைத் துறந்து, தனது இருபத்தேழா வது வயதில் சந்நியாசியானார்.

வாழ்க்கையில் தோல்வி ஏதும் ஏற்படாத நிலை யிலேயே, அவர் இந்தச் சந்நியாசத்தை மேற் கொண்டார்.

எந்த விதமான விரக்தியும் ஏற்படாத நிலையில் ஒளிமிக்க எதிர்காலமும் அவருக்காகக் காத் திருந்தது. அவருடைய மனோ நிலையில் ஏற் பட்டிருந்த பெருத்த ஆன்மிக நிலை மாறுதலே இதற்குக் காரணம்.

ஒரு நாள் வழக்கம்போல் தியானத்தில் அமர்ந் திருந்தபோது அவர் மனம் ஒரு மணி நேர

அளவுக்கும் மேலே ஒருமுகப்பட்டு ஒருமைப்பாட்டில் ஊன்றி நின்றது. இந்த மேலான உயரிய சாதனை முடிந்ததும் அந்தராத்மா அவரை அழைத்து உலகைத் துறக்கும்படிக் கட்டளை பிறப்பித்த சொற்கள், அவர் காதுகளில் ஒலித்தன. அந்த இளைஞர் கண நேரம்கூடத் தயங்காமல் கடைசிப் பைசாவரை தன்னுடைய செல்வத்தைத் தானம் செய்து விட்டார்.

1929-இல் குருவை (ஆன்மீக ஆசானை)த் தேடி தன் வீட்டை விட்டுப் புறப்பட்டார்.

களைப்பு மிகுந்த பல்லாயிரம் மைல் தூரமான நெடிய பயணத்திற்குப் பின்னர் கடைசியாக அந்த இளந்துறவி, ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தின் தலைமையகமான கல்கத்தாவிலுள்ள பேலூர் மடத்திற்கு வந்து சேர்ந்தார்.

அந்த மடத்திலிருந்த சந்நியாசிகள் மூன்று நாள்கள்வரை அவரைப் பலவிதமான சோதனைகளுக்கு உட்படுத்தி, அதன் பின்னரே ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர்ச் சீடரான தலைவர் சுவாமி சிவானந்தரைத் தரிசிப்பதற்கு அனுமதித்தனர். இந்த இளந்துறவி, அந்த மகானைக் கண்டதும் அவர் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கிச் சரணடைந்தார்.

இவ்வாறு இவர் தமது குருவைத் தரிசித்ததும், அவர் தன்னுடைய ஆழ்ந்த அன்பையும் ஆதரவையும் நல்கினார். இளந்துறவி பதிலுக்கு தமது நம்பிக்

கையையும் பக்தியையும் கடவுளிடமும், குருவிடமும் சமர்ப்பித்தார்.

அடுத்து வந்த சில ஆண்டுகளுக்குள் சுவாமி நாராயணானந்தாவிடம் கடவுளைத் தரிசிப்பதற்கான உள்ளுணர்வுடன் கூடிய உந்துதல் உத்வேகமடைந்தது. அவருடைய முழு வாழ்க்கையுமே இந்த ஒரே குறிக்கோளின் முனைப்பிலேயே ஈடுபட்டு, அதன் பயனாக ஒரு தனி இடத்தைத் தேடித் தீவிர சாதனையை (ஆன்மீகப் பயிற்சி) மேற்கொள்ள வேண்டுமென்ற தாபம் மேலிட்டது.

கடைசியாக அவருடைய குருவானவர் தனது அருள்நிலையில் சீடனை அழைத்து இமாலயத்திற்குச் சென்று தவம் (கடுந்தவம்) மேற்கொண்டு சமாதி நிலையில் (ஆழ்நிலைத் தியானம்) ஆழ்ந்து சித்தி பெறும்படிக் கட்டளையிட்டார்!

பிரம்மாண்டமான பனிச் சிகரங்கள் நிரம்பிய அதிசயானந்தத்தைத் தரக்கூடிய இமாலய மலைத் தொடர்களை நேருக்கு நேர் கண்டபோது, சுவாமிஜி பரவசமடைந்து உண்மையான கடுந்தவத்தை உடனே தொடங்கி விட்டார்.

எந்தவித வசதிகளுமின்றி நடுக்காட்டில் ஒரு சிறிய குடிசையில் தங்கித் தளராத ஊக்கத்துடன் கடுமையாக உழைத்தார். வழக்கமாக அவர் நாளொன்றுக்கு சுமார் பன்னிரண்டு மணியிலிருந்து பதினாறு மணி நேர அளவுக்குத் தியானத்தில் அமர்ந்து மந்திர ஜபம் செய்தார். இரவு பகலில்

லாமல் நாள் கணக்கில் ஒய்வு ஒழிச்சலின்றித் தொடர்ந்து தியானம் செய்தார். இது போன்ற கடுமையான சாதனையின் பயனாக சுவாமி நாராயணானந்தா குறுகிய காலத்திலேயே மிக உயர்ந்த மேலான கதியான நிர்விகல்ப சமாதி நிலையை எய்தினார்.

1933ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சிவராத்திரி தினத்தின் இரவு நேரத்தில், அதாவது இந்திய நாடெங்கணும் அனுஷ்டிக்கப்படும் சிவபெருமான் விழித்தெழும் கொண்டாட்ட தினத்தன்று, சுவாமிஜி வழக்கம் போல் அன்று நள்ளிரவில் தியானத்தில் அமர்ந்தார். மனம் ஆழ்ந்து ஒருமுகப்பட்டபோது குண்டலினி சக்தி முழுமையாகக் கிளம்பி சகஸ்ரா ரத்தை வந்தடைந்ததை உணர்ந்தார். அவருடைய இதயத் துடிப்பும் மூச்சும் தானாகவே நின்று போய்விட்டன (கேவல கும்பகம்).

உடலைப் பற்றிய உணர்வு அற்றுப் போய் விட்டது. மனம் பூரணத்துவத்தில் கலந்து விட்டது. தான் எனும் உணர்வு மரத்து உயிர்ச்சார சாகரத் தில் சங்கமித்தது. மனம், அகந்தை, புத்தி போன்ற வற்றின் அறிகுறிகள் கிஞ்சித்தேனும் புலப்பட வில்லை. இதுவே கடைசி அனுபவம். இதுவே கடவுளின் உருவமற்ற நிலையின் உணர்வு. இதுவே அகண்டாகாரமான ஆனந்த நிலையுமாகும்!

சுவாமிஜீ இதே நிர்விகல்ப சமாதி நிலையில் நீண்ட காலம் இருந்தார். மிக மிக உயரத்தில் அவரது ஆன்மா இருந்தாலும் அவர் மனம் நிதான மாகவும் நிச்சயத்துடனும் உலக பந்தத்தின் எல்லைக்குள் இறங்கி வந்தது. இந்த நிலையில் அவருடைய பார்வையின் கோணமே முற்றிலும் மாற்றம் பெற்றிருந்தது. பூரண ஞான ஒளி எய்திய காரணத்தால் அவர் மனத்தில் அறியாமையின் அறிகுறி கிஞ்சித்தேனும் இருக்கவில்லை.

அவர் எங்கணும் எல்லாப் பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்னால், ஒரே ஆத்மாவையே கண்டார். அகிலத்தின் பேதங்களில் தெய்வீக ஒற்றுமையை உணர்ந்து கொண்டார்.

இந்த அரிய சித்தியை அடைந்த பின்னரும் சுவாமி நாராயணானந்தா அதை விளம்பரப் படுத்திக் கொள்ளவில்லை. இமாலயத்தில் எளிய, தனிமை வாழ்க்கையையே தொடர்ந்து மேற் கொண்டார். அவர் சீடர்களைச் சேர்த்துக் கொள்ள வில்லை. பணத்துக்கோ வசதிகளுக்கோ ஆசைப் படவில்லை. அவை ஏதும் இல்லாத நிலையிலேயே அவர் வாழ்ந்தார்.

உலக ஆசாபாசங்களுக்கு ஆளாகாமல் மனத்தின் நுட்பமான இயக்கங்களின் நூதன கணிப் பிலேயே ஆழ்ந்து போனார். மறைந்திருக்கும் காரணங்களின் விளைவுகளால் எழும் சூக்கும இயக்கங்களைப் படம் பிடித்துக் கணிக்கத் தனது

ஒருமுகப்பட்ட தூய மனத்தையே நிரந்தரமான ஆய்வுக் கூடமாக ஆக்கிக் கொண்டார்.

இவற்றைப் புத்தகங்களாகக் கொண்டு வர வேண்டுமென்ற யோசனையே இல்லாமல் மனோ தத்துவத் துறையிலும், தத்துவ சாத்திரத் துறையிலும் அவருடைய உன்னதமான கண்டுபிடிப்புகளைக் குறிப்புகளாக எழுதி வைத்துக் கொள்ளலானார்.

முன் உதாரணமில்லாத, ஈடு இணையற்ற ஞானத்தை அளிக்கக்கூடிய ஒன்றன் பின் ஒன்றான தொகுப்புகளாக தனக்கே உரித்தான அற்புத ஆற்றலினால் எளிய லாகவத்துடன் எழுதிக் குவித்தார். இந்தக் கையெழுத்துப் பிரதிகளை உலகின் பார்வைக்குத் தெரியாமல் பாதுகாத்து வைக்கவே எண்ணினார்.

1947-இல் இந்தியா, பாகிஸ்கான் பிரிவினையின்போது வெறி கொண்ட முஸ்லீம்களாலும் இந்து மதக் கும்பலாலும் கடவுள், மதம் போன்றவற்றின் பெயரால் நிகழ்ந்த மனிதாபிமானமற்ற கோர இரத்தக் களரியை சுவாமிஜீ நேரில் கண்டார்.

கொள்ளை, கொலை, பிணக்குவியல்களின் கோரக் காட்சிகளைக் கண்டார். கன்னிப் பெண்களும், இளம் பெண்களும் கடத்தப்பட்டதையும் பார்த்தார். துன்பப்படும் மக்களைக் கண்டு இரக்கங் கொண்டார். உடனே மனித குலத்துக்கு உதவி

புரியத் தீர்மானித்தார். தனிமையைத் துறந்து சீடர்களை ஏற்றுக் கொள்ளத் துவங்கினார்.

ஆரம்பத்தில் சுவாமிஜீயிடம் சரணடைந்த சீடர்களில் மேற்கூறிய படுகொலைக்குத் தப்பிப் பிழைத்து வந்த ஏழை இளம் அனாதைகளும் இருந்தனர்.

அவர்கள் சுவாமிஜீயினுடைய குறிப்புகளையும் கையெழுத்துப் பிரதிகளையும் படித்துப் பார்த்தனர். அவற்றின் தனிப் பெருஞ் சிறப்பை உணர்ந்து அவற்றைப் புத்தகங்களாக வெளிக்கொணர விரும்பினர்.

சுவாமிஜீயிடம் அதற்கான பொருள் வசதி இல்லாமலிருந்தது. பாகிஸ்தானில் அனைத்தையும் இழந்து விட்டு வந்து சரண் புகுந்த சகோதர-சகோதரிகளிடம் நிதி வசதி இல்லை. புத்தகங்கள் வெளியிடுவதற்கான வாய்ப்பு இல்லாத நிலை.

அவர்களில் சில பெண்கள் தங்களிடம் எஞ்சி இருந்த ஓரிரு பொன் நகைகளை அதற்காக அளித்தனர். அதைக் கொண்டு புத்தகங்களை வெளியிடும் பணியைத் துவக்குவதற்கான வாய்ப்புக் கிட்டியது.

இந்த நேரத்தில் கெடுமதி கொண்ட சிலரிடமிருந்து கிளம்பிய எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியும் நேரிட்டது. அவர்கள் வெறும் பொச்சரிப்புக் காரணமாகவே இந்த மகத்தான பணியின் துவக்கத்தைத் தடுத்து நிறுத்த நினைத்தனர்.

எந்த ஒரு ஆதரவும், உதவியும் யாரிடமிருந்தும் பெறாத நிலையிலேயே பல சோம்பேறிகளால் அவர் மீது சுமத்தப்பட்ட அவதூறுகளையும், பழிபாவங் களையும் அவர் தனி ஒருவராகவே ஏற்றுக் கொண்டு வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அதன் விளைவாகவே எல்லோராலும் அவர் இழிவாகக் கருதப்பட்டார். அதனால் தங்குவதற்கும் இடம் கிடைக்காத நிலை.

இதற்கெல்லாம் ஈடு கொடுத்து சுவாமிஜீ கிஞ்சித்தும் மனந்தளராமல் உறுதியுடன் இருந்தார். சில நாள்கள் சென்றதும் அவதூறுகள் ஓய்ந்து போயின. சோம்பேறிகள் தாங்கள் செய்த பாவங் களின் பலனைத் தாங்களே சுமந்து சென்றனர்.

புத்தகங்களின் பணி தொடர்ந்தது. ஒன்றன்பின் ஒன்றாக அச்சேறி புத்தகங்கள் வெளி வந்தன. அவற்றைப் பற்றிய விளம்பரமோ பிரச்சாரமோ இல்லாமல் அவற்றின் உண்மையான உயர்ந்த மதிப்பினாலேயே உலகம் பூராவும் பரவுவதற்கான வாய்ப்பும் கிடைத்தது.

ஆரம்பத்தில் சுவாமி நாராயணானந்தா இதற்காக எந்த ஒரு நிறுவனத்தையோ அல்லது ஆசிரமத்தையோ அமைக்க விரும்பவில்லை.

அவருடைய துறவு வாழ்க்கையில் பொது மக்களிடமிருந்தோ, சீடர்களிடமிருந்தோ எந்தவித மான நன்கொடையையும் பெறவில்லை.

(அவருக்கே உரித்தான) எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். பொது வாழ்க்கையின் ஆடம்பரங்களை அவர் தவிர்க்கவே முயன்றார். நாள்கள் செல்லச் செல்லச் சீடர்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது.

இது போன்று உருவாகிய இயக்கத்தை நெறிப்படுத்தி ஓர் ஒழுங்கான அமைப்பாக நிறுவ வேண்டிய சூழ்நிலை தவிர்க்க முடியாததாகி விட்டது.

பின்னர் 1967-ஆம் ஆண்டில் 'நாராயணானந்தா யூனிவர்சல் யோகா டிரஸ்ட்' என்ற மையங்கள் இந்தியா, ஜெர்மனி, டென்மார்க், ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளில் ஆரம்பிக்கப்பட்டன. இந்த நேரத்தில் மேலை நாட்டு இளம் ஹிப்பிகள் பலர், குறிப்பாக, 'டென்மார்க்' தேசத்தவர் சுவாமி நாராயணானந்தாவிடம் வழிகாட்டி உதவும்படி வந்து சரணடைந்தனர்.

அவர்களில் பலர் போதை மருந்துக்கு அடிமையானவர்கள்; மோசமான நாடோடிகள்; சரண்புகச் சென்ற பல இடங்களிலிருந்தும் விரட்டப்பட்டு கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள்.

ஆனாலும் சுவாமிஜீ அவர்களைப் புரிந்து கொண்டு தமது சீடர்களாக ஏற்றுக் கொண்டார். விரைவிலேயே அவர்களைச் சரியான பாதைக்குக் கொண்டு வந்து விட்டார்.

இதில் பல இளைஞர்களும், யுவதிகளும் டென் மார்க் தேசத்துக்குத் திரும்பி வந்து ஜில்லிங் என்ற இடத்தில் உள்ள என். யூ. யோகா ஆசிரமத்தின் சந்நியாசிகளாகவும், சந்நியாசினிகளாகவும் மாறி னார்கள். அந்த ஆசிரமம் புதிதாகத் தொடங்கப் பட்டிருந்த சமயம் அது.

ஜில்லிங் ஆசிரமம் எழுபது ஏக்கர் பரப்பளவுள்ள ஒரு பழைய பண்ணையில் அமைக்கப்பட்டது. அந்த நிலத்தைப் பண்படுத்தி அங்கு ஓர் ஆசிரமத்தை உருவாக்க ஆசிரமவாசிகள் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. இந்த உழைப்புடன்கூடத் தங்கள் வயிற்றுப் பாட்டுக்காக அவர்கள் வெளியே சென்று தொழிற்சாலைகளில் பணிபுரிந்து சம்பா திக்கவும் வேண்டியிருந்தது.

சுவாமிஜீ அவர்களுடைய உண்மையான உழைப்பைக் கண்டு, டென்மார்க் நாட்டிற்கு வருகை புரிந்தார். சுவாமிஜி ஜில்லிங் ஆசிரமத்தில் ஐந்து மாத காலம் தங்கித் தமது முதல் இலவச ஆன்மீகப் பயிற்சி முகாமை நடத்தினார்.

அந்த முகாமில் உண்மையான ஆன்மிகப் பயிற்சியாளர்கள் தங்களுக்கெனத் தனித்தனிக் கூடாரங்களை அமைத்துக் கொண்டு, அவற்றில் தங்கி அடிக்கடி குருவை நேரில் பார்த்துச் சந்தேகங் களைக் கேட்டறிந்து தெளிந்தனர். தினசரிப் பயிற்சி நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டனர்.

முகாம் மூன்று மாத காலம் நடந்தது. ஆயிரக் கணக்கானவர்கள் வந்து கலந்து கொண்டார்கள்.

1971-ஆம் ஆண்டு முதல் சுவாமி நாராயணா னந்தா டென்மார்க் நாட்டிற்கும் மற்ற நாடுகளில் உள்ள மையங்களுக்கும் தவறாமல் ஒவ்வொரு ஆண்டும் சென்று வந்தார்.

ஜில்லிங்கில் மட்டும் ஒவ்வொரு ஆண்டும்ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் இலவச ஆன்மிகப் பயிற்சி முகாமை நடத்துகின்றனர். மெய்ஞ் ஞானத்தை நாடிவரும் அன்பர்களுக்கு உபதேசம் அளித்து அகில உலகத்திலுமுள்ள ஆயிரக்கணக் கான சீடர்களுக்கு அக்கறையுடன் வழிகாட்டி உதவி புரிகின்றனர்.

சுவாமிநாராயணானந்தா சீடர்களுடன் கொண் டுள்ள உறவுமுறை அந்தரங்கத் தொடர்புடையது. அவரது அருட்பார்வை சீடர்களுக்குள் மறைந்துள்ள ஆற்றல்களை விழிப்படையச் செய்து, அவர்களைத் தங்கள் சொந்த பலத்திலேயே நின்று செயலாற்றும் சக்தியைக் கொடுத்து விடுகிறது. அவருடைய ஆன்மீகப் போதனையிலுள்ள கருத்தாழமும் ஞானத் தெளிவும் பொழுது போக்காக விளம்பரப் படுத்தக் கூடியது அல்ல. அவர் தமது சீடர்களைப் பாதிவழி யில் கைவிடுபவரல்ல. முடிவான, உறுதியான மனக்கட்டுப்பாட்டை எய்தி அதன் மூலம் நற்கதிக்கு (மோட்சம்) போய்ச் சேரும்படிக் கட்டளை இடுகிறார்.

சுவாமி நாராயணானந்தாவின் சீடர்கள் உழைத்துச் சம்பாதித்து சமூகத்தில் ஒருவராகக் கலந்து வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் நல்லொழுக்க விதிமுறைகளைக் கண்டிப்புடன் கடைப்பிடித்துச் சுயநலமில்லாத, பற்றற்ற வாழ்க்கையைப் பின்பற்றி நடக்க முயல்கின்றனர்.

பெரும்பாலான ஆண் - பெண் சந்நியாசிகளும் ஆசிரமங்களிலேயே வாழ்ந்து வருகின்றனர். அவற்றில் பல சுயபலத்தில் இயங்கும் பண்ணைகளாக உள்ளன. அந்தப் பண்ணைகளிலேயே பட்டறைகளும் அதற்கான எல்லா வசதிகளும் உள்ளன. ஆசிரமங்களில் தங்கியுள்ள ஆசிரமவாசிகளுக்கு வேலை வாய்ப்பை அளிக்கத்தக்க வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

சர்வதேசக் கூட்டமைப்பின் மையமாக உள்ள டென்மார்க்கிலுள்ள ஜில்லிங்ஆசிரமத்தில் விவசாயப் பண்ணைத்தொழிலுடன் இணைக்கப்பட்ட ஒரு பால் பண்ணையும் இருக்கிறது. இந்த ஆசிரமத்தில் மிகப் பெரிய அச்சுக் கூடமும் உள்ளது. இங்குதான் வெளியீட்டுத் துறைக்கான புத்தகங்களும் பத்திரிகைகளும் அச்சிடப்பட்டு வெளியாகின்றன.

இங்குள்ள வேறொரு அணியினருக்கு பல்வேறு ஆசிரமங்களிலும், மையங்களிலும் கட்டக்கூடிய புதிய கட்டடங்களுக்கான கட்டுமானப் பணி தொடர்ந்து இருந்து வருகின்றது. இதுபோன்ற பணிகளுக்கு உதவும் வகையில் உலகம் பூராவிலுமுள்ள பல்வேறு மையங்களுக்கிடையே தங்களது

அங்கத்தினர்களைப் பரிமாறிக் கொள்ளும் வழக்கம் தீவிரமடைந்துள்ளது.

இத்தகைய நெருக்கமான கூட்டுறவினால் இந்த நிறுவனம் சர்வதேசப் பல்சமயச் சீடர்களுக் கிடையே நல்லுறவுக்கான ஒற்றுமையை நிலவச் செய்கிறது.

தாங்கள் செய்யும் தினசரித் தொழில்கள் போக ஆசிரமவாசிகள் காலை நேரங்களிலும், மாலை வேளைகளிலும் தியானத்தில் ஈடுபட்டு வருகின் றனர். ஞாயிற்றுக் கிழமைகளிலும், விழாக் காலங் களிலும் எல்லாரும் தியான மண்டபத்தில் பொதுத் தியானத்திற்காக ஒன்றாகக் கூடுகின்றனர். அப் போது நிகழும் கூட்டு வழிபாட்டிலும் இசையிலும் சேர்ந்து கொள்கின்றனர்.

இந்தப் பேரழகு மிக்க இயக்கத்தின் வாயிற் கதவுகளுக்குப் பின்னாலிருந்து, இதன் கர்த்தாவின் பரமாத்ம உளப்பூர்வ வாழ்த்துகள் புரண்டோடி வருகின்றன.

அவருடைய மாபெரும் ஆன்மிகக் குடும்பத்தின் அங்கத்தினர்களாக உள்ள அனைவருமே மற்று முள்ள ஞானவழியைத் தேடி வரும் மெய்யன்பர் களோடு சேர்ந்து தங்களுக்குக் கிடைத்துள்ள விலை யில்லாப் பெரும் பரிசை பகிர்ந்து கொள்ளும் பணிவான விருப்பத்துடன் வாழ்ந்து வருகின்றனர்.

○

## சுவாமி நாராயணானந்தரவின்
## பிற நூல்கள்

| | |
|---|---|
| மனக்கட்டுப்பாட்டின் ரகசியங்கள் | ரூ. 24-00 |
| சாந்தி - சக்தி - நீண்ட ஆயுள் | ரூ. 28-00 |
| ஆதார சக்தி | ரூ. 38-00 |
| தியான பிம்பம் | ரூ. 45-00 |
| குறிக்கோள் வாழ்வும் வீடு பேறும் | ரூ. 25-00 |
| அகண்டைக மதம் | ரூ. 25-00 |

கிடைக்குமிடம் :

சுவாமி நித்தியானந்தா
தமிழாக்க ஆசிரியர்,
என். யூ. சரணாலயம்,
(வழி) வேடந்தாங்கல்,
செங்கை - எம். ஜி. ஆர். மாவட்டம்,
அஞ்சல் எண் : 603 314.



சுவாமி நாராயணானந்தா தென்னகத்தின் கூர்க் பகுதியில் 1902-ல் அவதரித்தார். 1929-ல் அவர் துறவியானார். ஆன்மிக சாதனைக்காக இமயமலைக்குச் சென்றார். அங்கே பேரானந்தப் பேரறிவு நிலையான நிர்விகல்ப சமாதி நிலை 1933-ல் அவருக்குக் கிட்டியது. அதன் பின்னரும் பல ஆண்டுகள் இமயத்தில் ஏகாந்தமாகவே இருந்தார். மனம்-ஆன்மா உள்ளிட்ட அருள் உலகில் தாம் பெற்ற ஈடு இணையற்ற, புதுமையான அனுபவ உண்மைகளை எழுத்தில் வடித்தார். யோகம், மனம் போன்ற தத்துவத் துறைகளில் இன்று ஆதார பூர்வமாக விளங்குவன அவரது நூல்களே. 1947-ல் பாகிஸ்தான - இந்திய மத வெறியர் களின் படுகொலைகளைக் கண்டார். மனித குலத்துக்கு உதவ முன் வந்தார். சீடர்களை ஏற்க முடிவெடுத்தார். சுவாமி நாராயணானந்தா "அகண்டைக மதம்" என்னும் ஒரு புதிய மதத்தையே படைத்தார். இன்று உலகெலாம் பரவிய பொது சமயக் கொள்கையின் ஆன்மிக ஆசானாக விளங்குகிறார். பல நாடுகளில் ஆசிரமங்களும் மையங்களும் இயங்குகின்றன. 1988-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 26-ம் தேதி மகாசமாதி எய்தினார்.

# கடவுளும் மனிதனும்

**"மனித உடலில் சின்னஞ்சிறு சிகப்பு அல்லது வெள்ளை இரத்த அணுக்கள் எப்படியோ அதே போல பரந்த உலகில் வாழும் கோடானுகோடி உயிர்களில் ஒருவனாகவே மனிதனையும் கருத வேண்டும்!"**

**நாகரிக முன்னேற்றம், விஞ்ஞானத்தின் துரிதகதி போன்றவற்றின் விளைவாக மனிதனுக்கு மண்டை கனத்து விட்டது. பலர் இந்த அகண்டத்தின் பரம அணுவாகவுள்ள கடவுளையே இல்லாத ஒன்றெனக் கூறுமளவுக்குப் போய்விட்டது. இவ்வாறு கூறுவதுதான் பகுத்தறிவா? தன்னை உயிரற்றவன் என்று சொல்லிக் கொள்ள விரும்பாதவன் கடவுள் இல்லை என்று சொல்ல இயலுமா? இத்தகைய மனப் போக்கு மனிதனுக்கு அமைதியைத் தருமா? அறிவொளி கிடைக்குமா? இத்தகைய கருத்துக்கள் பல இந்த நூலின் தொகுப்பில் ஈடு இணையற்ற விளக்கங்களில் படித்து உணரலாம். மற்றுமுள்ள விடுதலை அல்லது சுதந்திரம் என்ற தலைப்பிலான கட்டுரை எது உண்மையான விடுதலை என்பதை விளக்குகிறது. விரும்பிய வாறெல்லாம் புலன் போகங்களை அனுபவித்தல், எந்த வழியிலும் செல்வம் ஈட்டுதல், பெயர் புகழைப் பெறுதல் போன்றவையே 'சுதந்திரம்' என்ற எண்ணத்தை 'தவறு' என்று எடுத்துக் காட்டுகிறது. 'மனக்கட்டுப்பாடு' ஒன்றினால் மட்டுமே உண்மையான சுதந்திரத்தை எய்த முடியும் என்பதை விளக்குகிறது.**

**— பதிப்பாளர்**

சுவாமி நாராயணானந்தாவின் படைப்புகள் : தொகுதி 13,14,15,16,22,23